INSCRIBED

to

THE BELOVED MEMORY

of

MY PARENTS

**P. VIJIARANGA MUDALIAR**

and

**P. MANICKAVELU AMMAL**

and

MY FRIEND

**C. RANGAVADIVELU**

# நாடகமேடை நினைவுகள்

## நான்காம் பாகம்



இந்த இரண்டு மூன்று நாடகங்களுக்குள், எங்கள் சபையின் பெயர் கொழும்புப் பட்டணம் எங்கும் பரவிப் போயிற்று. அதனால் எங்கள் சபையார், இரண்டு மூன்று பெயராகச் சேர்ந்து வெளியிற் போனால் அவர்களைத் திரும்பிப் பார்த்து, இவர்கள் இன்னாரெனப் பேசிக்கொள்ளாத தமிழர்கள் அவ்வூரில் கிடையாது என்று சொல்வது அதிகமாகாது. இதற்கொரு உதாரணத்தை இங்கெழுதுகிறேன். என் தமையனார் ஆறுமுக முதலியார், எங்கள் சபையின் காரியதரிசிகளில் ஒருவராக இருந்த போதிலும், எங்களிடம் வேலையாட்கள் பலர் இருந்தபோதிலும், தினம் கடைக்குப் போய் காய்கறி பதார்த்தம் வாங்கி வருவதை மாத்திரம் தன்னுடையவேலையாக மேற்கொள்வார். சாப்பாட்டில் ஆக்டர்களுக்குச் சகல சவுகர்யமும் இருக்கவேண்டுமென்பது அவரது கருத்துப் போலும். அவர் இவ் வழக்கப்படி ஒரு நாள் காலை கடைக்குப்போய் திரும்பி வந்ததும் ரிக்ஷா வண்டிக்காரனுக்கு அவனுக்குச் சேரவேண்டிய கூலியைக் கொடுக்க, அவன் அதற்கு மேல் அதிகமாக வேண்டும் என்று சண்டை யிட்டான். இதைத் தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த ஒரு போலீஸ்காரன் என் தமையனார் ஒன்றும் பிராது செய்யாமலிருக்கும்பொழுதே, அவனைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துக்கொண்டு போய் சார்ஜ் செய்து, மறுநாள் அவனை மாஜிஸ்ரேட் முன்பாக, "சுகுண விலாச சபை மெம்பர் ஒருவருடன் சச்சரவிட்டதற்காக 5 ரூபாய் அபராதம்" போட்டு வைத்தான்.

இப்படியே மறுநாள் அந்நாட்டுப் பத்திரிகையில் விளம்பரம் செய்யப்பட்டது. தென் இந்தியாவில் நமது போலீஸ்காரரிடம், நாமாகப்போய் பிரியாது செய்து கொண்டாலும் அவர்கள் பன்முறை கவனியாததை நான் பார்த்திருக்கிறேன்.

கற்றறிந்தவர்களை யன்றி, பாமர ஜனங்களுடைய மனதையும் எங்கள் சபை அங்கு கவர்ந்ததென்பதற்கு மற்றொரு உதாரணம் கூறுகிறேன். ஒரு நாள் என் தமையனார் ஐஸ்கிரீம் வேண்டுமென்று கேட்ட சில ஆக்டர்களுக்கு அதை வாங்கிக்கொடுத்து, அதை விற்றவனுக்கு அவனுக்குச் சேரவேண்டிய ரூபாய் இரண்டை அவன் கையிற் கொடுக்க, அதற்கு அன்றைத்தினம் எங்கள் நாடகத்திற்கு வருவதற்காக இரண்டு ரூபாய் டிக்கட்டொன்றைக் கொடுங்கள் என்று அவன் வாங்கிக்கொண்டு போனான். ஐஸ்கிரீம் தெருவில் விற்பவன் இரண்டு ரூபாய் டிக்கட்டு வாங்கிக்கொண்டு நாடகம் பார்க்க இவ்வூரில் வந்தான்; சென்னையில் ரூபாய் ஆயிரம் மாதம் சம்பாதிக்கும் சில பெரிய தனிகர்களிடம் போய் நான் ஏதாவது தர்ம விஷயமாக நாடகம் போடும்போது இரண்டு ரூபாய் டிக்கட்டு ஒன்று வாங்கிக்கொள்ளுங்கள் என்று கேட்டால், அதற்குக் குறைந்த டிக்கட் இல்லையா என்று கேட்டிருக்கின்றனர்! இலங்கையில் ஒரு நாள் என்னைப்பார்க்க வேண்டுமென்று வந்த சாயபு ஒருவர், எங்கள் சபையைப் புகழ்ந்து விட்டு, அடியில் வருமாறு எனக்குத் தெரிவித்தார். "நேற்றிரவு நாடகத்திற்கு நான் மூன்று ரூபாய் டிக்கட்டு நமக்குப் போது மென்று நினைத்து மூன்று ரூபாய் டிக்கட்டொன்றை வாங்கிக்கொண்டு நாடக ஹாலுக்குள் பிரவேசித்து உட்காரப்போக, நான் உட்காரவேண்டிய நாற்காலியின் பக்கத்தில் என் கம்பெனியில் வேலை செய்யும் ஒரு வேலையாள் 3 ரூபாய் டிக்கட்டு வாங்கி உட்கார்ந்திருந்தான். இதைக்கண்டதும், பேசாது திரும்பிப்போய், இன்னும் இரண்டு ரூபாய் அதிகமாகக் கொடுத்து, ஐந்து ரூபாய் வகுப்பில் மாற்றிக்கொண்டேன்" என்றார். சென்னையை விடக் கொழும்பில் பணமானது அதிகமாகப் பழக்கத்தில் இருக்கிறது என்பதற்குத் தடையில்லை.

எங்களது நான்காவது நாடகமாகிய அமலாதித்யனை வெள்ளிக் கிழமையில் வைத்துக்கொண்டோம். இதற்குக் காரணம் அந்த நாடகத்திற்கு விஜயம் செய்வதாக ஒப்புக்கொண்ட சிலோன் கவர்னருடைய சவுகர்யமே. எங்கள் சிலோன் நண்பராகிய சர் கனக சபை, கவர்னரிடம் எங்கள் சபையைப்பற்றிப் புகழ்ந்து பேசி, எப்படியாவது ஒரு நாடகத்திற்கு அவர் விஜயம் செய்ய வேண்டு

மென்று கேட்டதின் பேரில், கவர்னர், வெள்ளிக்கிழமைதான் தான் வருவதற்குச் சவுகர்யப்படும் என்று கூற அன்றைத் தினம், பாஷை தெரியாவிட்டாலும், கதையின் போக்கை எளிதில் அறியக் கூடும் என்று, ஷேக்ஸ்பியர் மகா நாடகக்கவி எழுதிய ஹாம்லெட் என்னும் நாடகத்தின் தமிழ் அமைப்பாகிய அமலாதித்யன் என்பதை வைத்துக்கொண்டோம். கவர்னர் எங்கள் சபை நாடகத்தைப் பார்க்க வருகிறார் என்று வெளியாகியவுடன், நாடகதினத்திற்கு இரண்டு தினம் முன்னதாகவே, நாடகசாலையிலுள்ள நாற்காலிகளெல்லாம் ரிசர்வ் ஆய்விட்டன.

இந்த அமலாதித்யன் நாடகம் நடந்த தினம் நான் சர். பி. ராமநாதன் அவர்கள் வீட்டில் இருந்தேன். என்னுயிர் நண்பர் ரங்கவடிவேலுவை அங்கு அழைத்துக்கொண்டு போன பிறகு பன்முறை சர். பி. ராமநாதனுடைய மூத்த குமாரர் என்னையும் அங்கு வந்திருக்கும்படிக்கேட்டார். நான் எனது மற்ற நண்பர்கள் ஏதாவது நினைத்துக் கொள்ளப்போகிறார்களேயென்று மறுத்து வந்தேன். அமலாதித்திய நாடகதினத்திற்கு முந்திய நாள் அவர் மறுபடியும் எனது நண்பர்கள் முன்னிலையில் அவர் கேட்க, அவர்களும், 'எங்களுக்கு ஆட்சேபணையில்லை. நீ போய்வா' என்று உத்தரவு கொடுத்தார்கள். அதன்மீது அங்கு சென்றேன். அங்கு நான் போனது முதல், ஏறக்குறைய நான் இலங்கையை விட்டுத் திரும்பும் வரையில் சர். பி. ராமநாதனுடைய இரண்டு குமாரர்களும் எனக்குச் செய்த உபசரணையை நான் இப்பொழுது நினைத்துக்கொண்டாலும், அதற்கெல்லாம் நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம் என்று வியக்கத்தக்கவனாயிருக்கிறேன். "அகனமர்ந்து செய்யாளுறையு முகனமர்ந்து நல்விருந்தோம்புவானில்" என்று பொய்யாப்புலமைத் திருவள்ளுவர் கூறிய வார்த்தைகள் இவ்வம்சத்தாரிடை மெய்யாகுமாக. காலைதுயிலெழுந்தது முதல், இரவில் நித்திரைக்குப் போகுமளவும், எங்கள் சவுகர்யங்களையெல்லாம், நாங்கள் வாய்திறந்து கூறு முன் செய்து வந்தனர். சுருக்கிச் சொல்லுமிடத்து, எங்கள் வீட்டு மருமகப்பிள்ளைக்கும் நான் இவ்வளவு மரியாதை செய்தறியேன். ஒரு சிறு உதாரணத்தையாவது இங்கெடுத்து எழுதா விட்டால், என் மனம் திர்ப்தியடையாது. நாடக தினங்களில் நாடக

மானவுடன், நாங்கள் வேஷம் களையும் வரையும் காத்திருந்து, பிறகு எங்களைத் தங்கள் வண்டியில் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போவார்கள் ; இதற்குச் சாதாரணமாக இரண்டு மூன்று மணியாகி விடும் ; ராத்திரியில் (அல்லது நான் காலையில் என்று கூறவேண்டுமா?) வீட்டில் எங்களுக்காக வெந்நீர் சித்தமாயிருக்கும். நாங்கள் ஸ்நானம் செய்த பிறகு, எங்களுக்காகப் பிரத்யேகமாகச் சித்தம் செய்யப்பட்டிருக்கும் உணவை (என் நண்பனுக்கு வேறு, எனக்கு வேறு உணவாக) எங்களுடன் உட்கார்ந்து புசித்து விட்டு, பிறகு எங்களுடன் கொஞ்சநேரம் உட்கார்ந்து பேசிவிட்டு, எங்கள் படுக்கை யறைக்கு அழைத்துக்கொண்டு போய் படுக்கையில் குழந்தைகளைப் படுக்கவைப்பது போல் படுக்கவைத்து, கொசுவலையை மூடிவிட்டு, விடிவிளக்கைச் சரிப்படுத்தி விட்டு, நாளைகாலை உங்களுக்கு என்ன வேண்டுமென்று விசாரித்து, "குட்நைட் நன்றாய்த் தூங்குங்கள்" என்று சொல்லிவிட்டுப் போவார்கள் ! நம்முடைய வீட்டிற்கு வரும் விருந்தினரை இவ்வாறு உபசரிக்க வேண்டுமென்பதை, இவர்களிடமிருந்தும், கொழும்பில் ராக்வுட் வம்சத்தாரிடமும் தான், நான் சிறிது கற்றுக்கொண்டேன் என்பது திண்ணம்.

இவர்கள் வீட்டில் நாங்கள் இவ்வாறு தங்கியிருந்தபோது, அமலாதித்ய நாடகத்தின் முந்திய தினம் இரவு சாப்பிட்டுவிட்டு நாங்கள் எல்லாம் பேசிக்கொண்டிருந்த பொழுது, "நாளைநாடகத்திற்கு உங்களுக்கு ஏதாவது வேண்டியிருக்கிறதா?" என்று சர் பி. ராமநாதன் இரண்டாவது குமாரராகிய மாஹேசர் என்பவர் கேட்டார். அதன்மீது எனக்கொன்றும் வேண்டியதில்லை என்று நான் தெரிவித்தேன். ரங்கவடிவேலு, "எல்லாம் சரியாயிருக்கிறது, நாடகத்தில் நாலாவது அங்கத்தில் அபலையைத் தூக்கிக்கொண்டு போவதற்காக, பட்டணத்தில் செய்தபடி ஒரு பல்லக்கை இங்கே ஒரு கண்டிராக்டரைச் செய்யச் சொன்னேன் அது அசாத்தியம் என்று சொல்கிறான்," என்று தெரிவித்தார். பட்டணத்தில் என்ன செய்தீர்களென்று கேட்டதின் பேரில் இன்னபடி செய்தோம் என்று அதை விளங்கச் சொன்னேன். ஏதோ தெரிந்து கொள்வதற்காகக் கேட்கின்றார் என்று நினைத்தேனே யொழிய, இவர் அவ்வாறு ஒரு பல்லக்கைச் செய்தனுப்பப் போகிறார் என்று கனவிலும் நினைத்தவ

னல்ல. இதைப்பற்றி மறுநாள் நடந்ததை இதை வாசிக்கும் எனது நண்பர்கள் கவனிப்பார்களாக.

நாடக தினம், காலையில் என் வழக்கப்படி, நாடகசாலைக்குப் போய் 'கேசு' விடம் திரைகளையெல்லாம் இப்படி இப்படிக் கட்ட வேண்டுமென்று சொல்லிவிட்டு, திரும்பி வந்து, சாப்பிட்டுவிட்டு, 'அமலாதித்யன்' நாடகத்தில் வழக்கப்படி என் பாடத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். இந்தச் சந்தர்ப்பத்தில் இவ்வழக்கத்தைப் பற்றி, நாடக மேடையில் புகழ்பெற விரும்பும் எனது இளைய நண்பர்களுக்கு உபயோககரமான ஒரு சமாசாரத்தை இங்கெழுத விரும்புகிறேன். இந்நாடகம் நான் எழுதியது முதல் பன்முறை ஒத்திகை செய்திருக்கிறேன். பன்முறை இந்நாடகத்தை ஆடியுமிருக்கிறேன். ஏறக்குறைய புஸ்தக முழுவதையும் குருட்டுப் பாடமாகவும் ஒப்புவிப்பேன்; இருந்தும், நாடகதினம் என் பாகத்தை மறுபடியும் நான் ஆதியோடந்தமாகப் படித்துத் தான் தீர்வேன். இந்த ஒரு நாடகத்திற்கு மாத்திரமல்ல, நான் எழுதிய எல்லா நாடகங்களிலும் அப்படியே. மனோஹரன் நாடகம் ஏறக்குறைய 50 முறை நான் ஆடியிருக்கிறேன். இருந்தும் அதை ஆடுவதென்றால் நாடகதினம் என் பாகத்தை, ஓர் மூலையில் உட்கார்ந்துகொண்டு நான் படித்துத்தான் ஆகவேண்டும். நான் ஆடவேண்டிய பாகம் எத்துணை சிறிதாயினும் சரி, நான்கு வரியாயினும் சரி, நான் தனியாகப் போய் அதை ஒரு முறை படித்தாக வேண்டும். சென்னையில் விக்டோரியா பப்ளிக் ஹாலில் நான் நாடகமாடும்பொழுதெல்லாம், அன்றைத் தினத்திய பாகத்தை, விக்டோரியா ஹால் மேல் மாடியில், டவர் இருக்கிறதே, அங்குபோய் தனியாக உட்கார்ந்து படித்து விட்டுத் தான் வருவேன். அச்சமயங்களிலெல்லாம், யாராவது, என்னைப் பார்க்கவேண்டுமென்று கீழே விசாரிப்பார்களானால், "உபாத்தியாயர் பாடம் படிக்கப் போயிருக்கிறார்! அவரை இப்பொழுது ஒருவரும் தொந்தரவு செய்யக்கூடாது" என்று எனது நண்பர்கள் ஏளனமாகச் சொல்வார்கள். நான் தெலுங்கு, கன்னடம், மலையாளம், சமஸ்கிருதம், ஆங்கிலம், ஹிந்துஸ்தானி பாஷைகளில் சில பாத்திரங்களை ஆடியிருக்கிறேன் என்பது என் நண்பர்கள் அறிந்த விஷயமே. அவைகளில் பெரும்

பாலும் என் பாகம் மிகவும் சிறு பாகங்களாகவேயிருக்கும்; எவ்வளவு சிறிய பாகமாயிருந்தாலும் மேற் சொன்னபடி அதை ஒரு முறை நாடக தினம் தனித்து மனனம் செய்துதான் தீருவேன். ஒரு முறை ஏதோ காரணத்தினாலும் மறதியினாலும் அவ்வாறு செய்யாமற்போய் நான் நாடகமேடையில் தட்டுத் தடுமாறியது எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது; இது திருநெல்வேலியில் நடந்ததென நினைக்கிறேன்; அப்பொழுது நாடக மேடையின் பேரில் நடித்துக் கொண்டிருக்கும் பொழுது, என்ன நமது பாகம் தடுமாறுகிறது என்று யோசித்துப் பார்க்க, இன்று நாம் இதை வழக்கம்போல் படிக்கவில்லையல்லவா என்று ஞாபகம் வந்தது! இதை நான் இவ்வளவு விவரித்து எழுதியதற்குக் காரணம், இதனால் பெரும் அனுகூலமுண்டென்றும் இப்படிச் செய்யாவிட்டால் கஷ்டப்பட வேண்டுமென்பதையும் நாடக மேடையில் பெயர்பெற விரும்பும் எனது இளைய நண்பர்களுக்கு வற்புறுத்தும் பொருட்டே.

தற்காலம் எங்கள் சபை உட்படச் சில சபைகளில் சில ஆக்டர்களைப் பார்த்திருக்கிறேன்; அவர்கள் தங்கள் பாடங்களை நன்றாய்ப் படிக்காமல் மேடையேறி விடுகிறார்கள்; சரியாகப் படிக்காததை மறைப்பதற்காக, ஒவ்வொரு சைட்படுதா பக்கத்திலும் ஒவ்வொரு ப்ராம்டர் (நாடகப் புஸ்தகத்தைக் கையில் வைத்துக்கொண்டு, மேடையின் மீதிருக்கும் நடிகன் ஏதாவது மறந்து போனால், அதை எடுத்து அவனுக்குச் சொல்ல வேண்டியவன்) ஏற்பாடு செய்து கொள்ளுகிறார்கள். இதென்ன இரண்டு பிராம்டர்கள? என்று விசாரிக்குமளவில் இந்தப்பக்கம் நின்று பேசும்பொழுது இந்த ப்ராம்டர், அந்தப்பக்கம் நின்று பேசும்பொழுது அந்த ப்ராம்டர்! என்று பதில் உரைத்திருக்கிறார்கள். தங்கள் பாடங்களைச் சரியாகப் படியாததினால் அடிக்கடி பிராம்டர்களிருக்கும் பக்கம் இந்த ஆக்டர்கள் திரும்ப வேண்டி வருகிறது. இவர்கள் தாங்கள் மேடையின்மீது நடிக்கவேண்டிய காரியத்தைக்கவனியாது, பிராம்டரையே கவனிக்கவேண்டியிருக்கிறது. இப்படிப்பட்டவர்கள் தாங்கள் செய்யும் சூது, சபையோர்க்குத் தெரியாது என்று எண்ணுகிறார்கள் போலும்; அவர்களுள் யாராவது நாடகமேடையின் அனுபவம் கொஞ்சமேனும் உடையவர்களாயினும் இதை எளிதில் கண்டு

பிடித்து விடுவார்கள் என்பது நிச்சயம். இதற்கும் மேலாகச் சில ஆக்டர்கள், "நான் பேச வேண்டிய வார்த்தைகள் வரும்போதெல்லாம், நீ அப்படியே படித்துக்கொண்டுவா, நான் சொல்லிக்கொண்டு வருகிறேன்" என்று பிராம்டர்களுக்குச் சொல்வதை நான் காதாரக் கேட்டிருக்கிறேன்; இது பெரிய தவறாகும். ஒருவன் எப்படிப்பட்ட ஆக்டராயிருந்தபோதிலும், இவ்வாறு செய்வானாயின் அவனது ஆக்டு சோபிக்காது என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. இவையெல்லாவற்றிற்கும் மேலாக இன்னும் சில ஆக்டர்கள், தாங்கள் பாட வேண்டிய பாட்டிற்குக்கூட பிரத்யேகமாக ஒரு பிராம்டரை ஏற்பாடு செய்து வைத்துக் கொள்ளுகிறார்கள்!.

இவ்வாறு தங்கள் பாகத்தைச் சரியாகப் படியாது, பிராம்டர்களை நம்பி மேடைமீது ஏறும் ஆக்டர்களுக்கேற்படும் விபத்துகளில் இரண்டொன்றை இங்கெடுத்தெழுதுகிறேன். ஒருமுறை இப்படி பாடம் படிக்காத ஒரு ஆக்டர் த்யுமத்சேனனாக மேடையின் மீது நடித்துக் கொண்டிருந்தார்; போதாக் குறைக்கு அந்தகனாகக் கண்களை மூடிக் கொண்டிருக்க வேண்டிவந்தது; பிராம்டர் ஒரு பக்கத்திலிருந்து படித்துக் கொண்டுவர, இவர் பாகத்தை யெல்லாம் பள்ளிக்கூடத்தில் பிள்ளை பாடம் ஒப்புவிப்பது போல் ஒப்பித்துக் கொண்டு வந்தார்; ஒரு சந்தர்ப்பத்தில் த்யுமத்சேனனை நோக்கி மற்றொரு நாடக பாத்திரம் சொல்ல வேண்டிய பாகத்தை, "த்யுமத்சேனா" என்று ஆரம்பித்து அப்பாத்திரத்திற்கு பிராம்டர் பிராம்ட் செய்ய, தன் பாகத்தைச் சரியாகப் படியாததினால், அதுவும் தன் பாகம் என்று நினைத்துக் கொண்டு, த்யுமத்சேனனாகிய ஆக்டர், "த்யுமத்சேனா" என்று தன்னையே அழைத்துக் கொண்டு, பேச ஆரம்பித்தார்! பிராம்டராயிருந்த எனது நண்பருக்குக் கோபம் பிறந்து "அடே மடையா! (அவர் இதை விடப் பலமாக வைதார், அவ்வார்த்தையை இங்கெழுதுவதற்கு எனக்கு இஷ்டமில்லை) நீ தானடா த்யுமத்சேனன்!" என்று உரக்கக் கோபித்துக் கொண்டார். இதையெல்லாம் பார்த்தும் கேட்டுக்கொண்டும் இருந்த சபையோர்கள் கொல் என நகைத்தனர்! இன்னொரு முறை ஷேக்ஸ்பியர் மஹாநாடகக்கவி எழுதிய ஜுலியஸ் சீசர் என்னும் நாடகம் நடிக்கப்பட்ட பொழுது, ஆன்டொனி என்னும் முக்கியமான பாத்

திரம் பூண்டவர், தன்பாடத்தைச் சரியாகப் படிக்காமல், பிராம்டர் உதவியால் பேசிக் கொண்டு வந்தபொழுது, ஒரு காட்சியில் அவர் செய்யவேண்டிய பெரிய உபன்னியாசத்தின் இடையில் அதைக் கேட்ட சில ஜனங்கள் சொல்லவேண்டிய வார்த்தைகளைப் பிராம்டர் அவர்களுக்கு எடுத்துக்கொடுக்க, அதை அறியாதவராய், தன் உபன்யாசத்தில், அதைக் கேட்ட மாந்தர்கள் சொல்லவேண்டிய வார்த்தைகளையும் சேர்த்து உபன்யாசம் செய்துவிட்டார்! இதை விட்டகலுமுன் இன்னொரு கடைசி உதாரணத்தை எடுத்து எழுதி விடுகிறேன். எங்கள் சபை வெளியூர் ஒன்றிற்குப் போய் நடித்துக் கொண்டிருந்த பொழுது, மேற்சொன்ன பிரிவைச் சார்ந்த ஒரு ஆக்டர் (அவர் பெயரை இங்கெடுத்தெழுத என் மனம் வரவில்லை) தான் பாடவேண்டிய பாட்டுகளைச் சரியாகப் படிக்காதவராய் அதற்காகப் பிரத்யேகமாக ஒரு பிராம்டரை ஏற்பாடு செய்து வைத்தார். அவர் எடுத்துக் கொடுத்தபடியே, ஒரு பாட்டை மேடையின் மீது பாடிவிட்டு, எங்கு பாட்டு முடிகிறதென்றும் தெரியாதவராய், பிராம்டர் பக்கம் இவர் திரும்ப, அவர், தன்னையேதோ கேள்விகேட்கிறார் என்றெண்ணி, "இன்னும் ஒரு பாட்டுதான் இருக்கிறது" என்று பதில் உரைத்தார். எனது நண்பர் தான் பாடிக் கொண்டுவந்த பாட்டுடன், "இன்னும் ஒரு பாட்டுதான் இருக்கிறது" என்று, அதையும் ஒரு அடியாகச் சேர்த்துப் பாடிவிட்டார்! இவர் ஜனங்கள் பாட்டின் போக்கில் இதைக் கவனித்திருக்க மாட்டார்கள் என்று எண்ணிய போதிலும், மறுநாள் சிலர் "என்ன உங்களுடைய ஆக்டர் இப்படி ஆபாசம் செய்தார்?" என்று கேட்டது எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. ஆகவே, நாடகமேடை ஏற விருப்பங்கொண்டிருக்கும் எனது இளைய நண்பர்களையெல்லாம் இதனால் நான் வேண்டிக்கொள்வது என்னவென்றால், முதலில் உங்கள் பாகங்களை நன்றாய் படியுங்கள், அப்படி எவ்வளவு நன்றாய் படித்திருந்த போதிலும், நாடக தினம் மறுபடியும் ஒருமுறையாவது உங்கள் பாகத்தை மனனம் செய்யுங்கள், என்பதேயாம்.

இவ்வாறு பன்முறை ஒரு பாகத்தைத் திருப்பித் திருப்பிப் படிப்பதினால் இன்னொரு முக்கியமான சுகிர்தமுண்டு. நாம் நடிக்க வேண்டிய பாகத்தைப் பன்முறை திருப்பித்திருப்பிப் படிக்குங்கால்,

இன்னின்ன புதிய மாதிரிகளில் நடிக்கலாமென்று புதிய யோசனைகள் நமக்கு உதிக்கலாம். முக்கியமாக ஷேக்ஸ்பியர் முதலிய மஹா நாடகக் கவிகள் எழுதிய நாடகங்களைப் பன்முறை படிப்பதனால் இந்த அனுகூலத்தைப் பெற்றிருக்கிறேன். இதற்கு நியாய சாஸ்திர சாதகத்திலிருந்து ஒரு உதாரணத்தைக் கொடுக்கிறேன். நியாய சாஸ்திரத்தில் மிகுந்த புத்திமான் என்று பெயர்பெற்ற காலஞ் சென்ற வி. பாஷியம் ஐயங்கார் என்பவர், ஒரு நியாய புஸ்தகத்தில் ரீஸ்ஜுடிகேடா என்னும் ஒரு சட்டத்தை எத்தனையோ ஆயிரம் முறை படித்திருந்த போதிலும், புதிதாக ஒரு வழக்கில் அதைப்பற்றிப் பேசவேண்டி வந்தால், மறுபடியும் அதைப் படிக்கச் சொல்லிக் கேட்பாராம், இதுவரையில் தோன்றாத புதிய யோசனை அதனின்றும் தோன்றுகிறதா என்று அறிவதற்காக! நாடகசபையிலும் நாடகப்பாத்திரங்களின் பாகங்களை இவ்வாறு ஆராய்ந்து பார்ப்பது அதிக அனுகூலத்தைத் தரும் என்பது என் கொள்கை.

மேற்சொன்னபடி அமலாதித்யன் பாகத்தை நான் படித்துக் கொண்டிருந்த பொழுது, எங்கள் சபையின் மற்ற அங்கத்தினர் தங்கியிருந்த இடமிருந்து, ஒரு கடிதம் எனக்கு வந்து சேர்ந்தது. அதைப் பிரித்துப் பார்க்கும்பொழுது அன்றைத்தினம் நாடகத்தில் என்னுடன் ஹரிஹரனாக நடிக்கவேண்டிய சத்தியமூர்த்தி ஐயருக்கு அதிக ஜுரமாயிருக்கிறது, அவர் இன்று ஆடமுடியாதென்று, எழுதியிருந்தது. நாடக ஆரம்பத்திற்கு ஆறு ஏழு மணிக்கு முன்னர் இச்செய்தி வந்து சேர்ந்தால் நான் என்ன செய்யக்கூடும்? அதுவும் ஹரிஹரன் பாகம் மிகச் சிறு பாகமல்ல; உடனே விரைவில் என் பாகத்தை முடித்துவிட்டு அந்த வீட்டிற்குப் போய் ராமகிருஷ்ண ஐயருக்கு அப்பாகத்தை ஒருமுறை படித்துக்காட்டி, எப்படியாவது அதைக் குருட்டுப்பாடம் செய்துவிடு, என்று சொல்லிவிட்டு, நாடக சாலைக்குப் போய்ச் சேர்ந்தேன். எனது நண்பர் ராமகிருஷ்ண ஐயரும் அச்சிறிது நேரத்தில் பாடத்தை நன்றாய்ப் படித்து அன்றிரவு நன்றாக நடித்தார். என்னுடன் பழகிய எனது பழைய ஆக்டர்களிடமெல்லாம் இந்த நற்குணமிருந்தது; அதாவது ஏதாவது ஒரு ஆபத்தில் கை கொடுத்து உதவும்படியான குணம். இக்காலத்திய என் இளைய ஆக்டர்களும் இக்குணத்தை வழிபட்டு நடப்பார்களாக.

அன்றிரவு குறித்த மணிப்பிரகாரம் கவர்னர் அவர்கள் வரவே, நாங்களும் நாடகத்தை ஆரம்பித்தோம். நான் வரும் முதற் காட்சியில், என் தனி மொழிக்கு முன்பாக, நான் சில வார்த்தைகள் தான் பேசவேண்டியிருந்தது. என் தனி மொழியை ஆரம்பிப்பதற்காக என் முகத்தை ஜனங்கள் உட்கார்ந்திருக்கு மிடமாகத் திருப்பிய பொழுது, ஹாலில் இனி ஒருவருக்கும் இடமில்லாதபடி ஜனங்கள் நிறைந்திருந்ததைக் கண்டேன். பிறகு நான் விசாரித்ததில் உட்கார இடமில்லாமல் நிற்பதற்காகச் சில நாட்டுக்கோட்டைச் செட்டிமார் 5 ரூபாய் விகிதம் கொடுத்ததாகக் கேள்விப்பட்டேன். அன்றைத் தினம் மொத்த வரும்படி ஆயிரத்து எழுநூற்று தொண்ணூற்றிரண்டு ரூபாய் என்று பிறகு அறிந்தேன். இப்பணமானது கண்டிராக்டரைச் சேர்ந்ததாயினும், நம்முடைய சபையின் நாடகத்தைப் பார்க்க இத்தனை திரளான சீமான்களும் சீமாட்டிகளும் வந்திருக்கிறார்களே யென்று எனக்குக் குதூஹலமுண்டாயிற்று. சாதாரணமாக என் தனி மொழிகளையெல்லாம் கொஞ்சம் மெல்லிய குரலுடன் தான் ஆரம்பிப்பது வழக்கம். அப்படி நான் அன்று ஆரம்பித்த பொழுது, ஹாலெங்கும் நிசப்தமாகி விட்டது. வர வர என் குரலை உயர்த்திக் கொண்டு போய் என் முதல் தனிமொழியை நான் முடித்தபொழுது, வந்திருந்தவர்களெல்லாம் கரகோஷம் செய்தனர். பிறகு நான் அறிந்தபடிக் கவர்னர் அவர்கள் தான் இதை முதலில் ஆரம்பித்தனராம். அன்றிரவு அமலாதித்யன் நடிக்க வேண்டிய முக்கிய பாகங்களிலெல்லாம், ஒன்றும் விடாது கரகோஷம் செய்து வந்தனர். அம்மாதிரியான கரகோஷத்தை இதற்கு முன்னிலும் நான் பெற்றவனன்று, பிறகும் பெற்றவனன்று. இதை யெல்லாம் எனக்குச் செய்த மரியாதையாகப் பாவியாது எங்கள் சபைக்குச் செய்ததாகக் கொண்டு உளம் பூரித்தேன். இந்நாடகத்தில் ஒரு முக்கியமான காட்சி, அமலாதித்யனும் அபலையும் சந்திக்கும் காட்சி; இதில் தான், "இருப்பதோ இறப்பதோ" என்று ஆரம்பிக்கும் ஒரு பெரிய தனி மொழியுண்டு. அத்தனிமொழியை ஆக்டு செய்வது மிகவும் கடினம் என்று எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் படுகிறது. அக்காட்சியில் எனதுயிர் நண்பர் சி. ரங்கவடிவேலுவும் நானும் நடித்தது மிகவும் கொண்டாடப்பட்டது. இக்காட்சியில் நான் நடித்ததைவிட என் நண்பர் நடித்ததைச் சபையோர் புகழ்ந்தது எனக்கு

மிக்க மகிழ்ச்சியைத் தந்தது. ஆயினும் என்வரையில், இக்காட்சியைவிட, அமலாதித்யன் தன் தாயாருடன் பேசும் பிறகு வரும் காட்சியே, நடிப்பது மிகவும் கஷ்டமென என் அபிப்பிராயம். இக்காட்சியில், தன தன்னைக்குத் தோற்ருது, அமலாதித்யன் கண்களுக்கு மாத்திரம் அவனது தந்தையின் அருவம் தோன்றும்பொழுது, அதை வெருண்ட கண்களுடன் பார்த்து, அது ரங்கத்தைக் கடந்து செல்லும்போது, மலர்ந்த என் கண்களால் அதை நான் பின்தொடர்ந்து போவதுபோல் நடிப்பது எப்பொழுதும் சாதாரணமாக ஜனங்களைத் திருப்திசெய்வது வழக்கம். இன்றைத் தினம் அக்காட்சியில் நடித்தபொழுது மிகுந்த கல்விமான்களும் பெரியோர்களும் நிறைந்த சபையாயிருக்கிறது, இவர்களில் சிலர் சீமையில் பெரிய ஆங்கில ஆக்டர்கள் இந்த ஹாம்லெட் பாத்திரத்தை ஆடுவதைப் பார்த்திருப்பார்கள்; அவர்களுக்கெல்லாம், நம்முடைய முழு சாமர்த்தியத்தைக் காட்டவேண்டும் என்று விருப்பங் கொண்டவனுய், அந்தப்பாகம் வரும்பொழுது, நடிக்கும் என் முழுத்திறமையையும் கொண்டு நடித்தேன். அருவமானது அமலாதித்யன் கண்களுக்குத் தோன்றிய க்ஷணமுதல், அதுமறையும் வரையில், நான் நடித்ததையெல்லாம், நிசப்தமாய்க் கண்கொட்டாது கவனித்து வந்தார்கள் என்று, எனது நண்பர்கள் பிறகு சொல்லக் கேட்டேன். நான் அவர்களைப் பாராவிட்டாலும், என் மனத்தினுள், சபையிலுள்ளவர்களெல்லாம் நாம் நடிப்பதை ஏகாக்ரசிந்தையர்களாய் கவனிக்கிருர்களென்று அறியும் தன்மை எனக்குண்டென நம்புகிறேன். அவர்கள் கரகோஷம் செய்வதைவிட, இவ்வாறு அவர்களது மனத்தை யெல்லாம், வசீகரணம் செய்வதே ஒரு ஆக்டருக்குப் பெருமை யென்பது என் அபிப்பிராயம். இக்காட்சியில் நான் நடிக்கும்பொழுது என்னுடன் நடிக்கும் ஆக்டர்களெல்லாம், சைட் படுதாவண்டை நின்று பார்ப்பது வழக்கம். அன்றைத்தினம் இக்காட்சி நடிக்கப்பட்ட பொழுது, ஹாலின் மத்தியிலிருந்த ஒரு மனிதன், கூச்சலிட்டான்; பிறகு, அவன் குடித்திருந்ததாயும், நான் நடித்ததைப் பார்த்து ஏதோ பயந்ததாகவும், சொல்லக் கேட்டேன்; அம்மனிதன் இவ்வாறு கூச்சலிட்டவுடன், ஹாலில் என்னைக் கவனித்துக் கொண்டிருந்த அனைவரும் அவனிருக்கு மிடம் திரும்பி,

'உஸ்!' என்று அவனை அதட்டினார்கள். தாங்கள் வியந்து கொண்டிருந்ததைத் தடை செய்ததற்காக அவனை இவ்வாறு அதட்டியதே நான் ஆக்டு செய்ததற்கு அவர்கள் செய்த பெரிய மரியாதை என்று இன்றளவும் நான் நினைக்கிறேன். அக்காட்சியின் முடிவில் சபையோரெல்லாம் ஒரே கரகோஷம் செய்தனர். ஏறக் குறைய நாடக அந்தம் வரையில் இருந்து விட்டுப் போன கவர்னர் அவர்கள் நாடகம் மிகவும் நன்றாக இருந்ததாகப் புகழ்ந்தாராம்; அவர் 'இன்று ஹாம்லெட்டாக நடித்தவர் எனக்கு சர்ஹென்றி இர்விங்கை நினைப் பூட்டுகிறார்' என்று என்னைப் பற்றிக்கூறியது நான் என்றும் மறக்கற்பாலதன்று. சர்ஹென்றி இர்விங் என்னும் இங்கிலாந்து தேசத்திய மிகச்சிறந்த ஆக்டருடன் என் பெயரையும் ஒத்திட்டுச் சொன்னதே எனக்குப் பெரும் புகழாகக் கொள்ளுகிறேன். அன்றைத்தினம் நாடகத்தைப் பார்த்த டாக்டர் சின்னதம்பி என்பவர், சீமைக்குப் போய் சர்ஹென்றி இர்விங் ஹாம்லெட்டாக நடித்ததை நேரிற்கண்டவர்களுள் ஒருவர்; அவர் என்னிடம் வந்து; "என் வரைக்கும் அதைவிட, நீ நடித்ததே மேலாகத் தோன்றுகிறது" என்று கூறினார். இதை நான் அவருக்கு என் மீதுள்ள பிரியத்தினாற் சொல்லப்பட்ட தென்றே கொள்கிறேனே யொழிய, நான் ஏற்கத்தக்க புகழாகக் கொள்ளவில்லை.

அபலையின் ஸ்மசானக் காட்சி எல்லோராலும் புகழப்பட்டதென்று கேள்விப்பட்டேன். இதற்கு முக்கியமான காரணம், ஸ்மசானத்திற்குக் கொண்டுபோன பல்லக்கு மிகவும் ஒழுங்காய்ச் சிருங்காரிக்கப்பட்டதே. இந்தப் பல்லக்கு சிருங்காரிப்பதைப் பற்றி, சர் ராமநாதன் இரண்டாவது குமாரர் மாஹேசருக்கும், ரங்கவடிவேலுக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணையை முன்பே குறித்திருக்கிறேன். நாடகத்தினம் சாயங்காலம் ஆறு மணிக்கு, நாங்கள் எல்லாம் வேஷம் போட்டுக்கொள்வதற்கு ஆரம்பஞ் செய்து கொண்டிருந்தபொழுது, இந்தக் காட்சியில் உபயோகப் படுத்துவதற்காக, கண்டிராக்டர் செய்தனுப்பிய, பாடை வந்து சேர்ந்தது. இதைப் பார்த்ததும், எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு கோபமடைந்து, "நான் இப்படியா செய்தனுப்பச் சொன்னேன்? இதில் நான் படுக்க

கள் !" என்று கோபித்து மொழிந்தார். அவரை நான் சமாதானம் செய்து கொண்டிருக்கும்பொழுது, சிறிது நேரத்திற்கெல்லாம், எனது நண்பர் விரும்பியபடி அழகிய ஓர் பல்லக்கை நான்கு பெயர் தூக்கிக்கொண்டு நுழைந்தார்கள். அதைக் கண்டதும் எனது நண்பர் கோபமெல்லாம் மாறி மிகவும் சந்தோஷப்பட்டுக் கண்டிராக்டர் கொண்டுவந்ததை எடுத்து வெளியில் எறியும்படி உத்தரவு செய்தார். பிறகு நான், "இந்த அழகிய பல்லக்கு எங்கிருந்து வந்தது?" என்று விசாரித்ததில் அது வந்து சேர்ந்த விதம் பின் வருமாறு என்றறிந்தேன்:—முன்னாள் இரவு இப்பல்லக்கு இப்படி இருக்க வேண்டுமென்று எங்களிடமிருந்து கேட்டறிந்த, மாஹேசர் மறுநாள் காலை முதல், நாங்கள் அறியாதபடி, அவர்களுடைய பெரிய தோட்டத்தின் ஒரு மூலையில், தன் வேலையாட்களைக் கொண்டு ஒன்றை மிகவும் சிரமப்பட்டுக் கட்டிவைத்தாராம். இதைச் சரியாக ஜோடிப்பதற்கு அன்று சாயங்காலம் வரைக்கும் பிடித்ததாம். இதில் ஒரு முக்கியமான சமாசாரம் என்னவென்றால், சாதாரணமாக எவர்களும் பிணத்தைத் தூக்கும்படியான பல்லக்கைக்காணவும் அருவருப்படைவார்கள்; அதுவும் அன்றைக்கு வெள்ளிக்கிழமை தினம்; தங்கள் வீட்டிலிருந்த பெண்டிர் ஆட்சேபணைகளையும் கவனியாது இதைச் செய்து அனுப்பிய மாஹேசருக்கு நான் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? அந்தப் பல்லக்கில் படுக்கும் பொழுது, எனது நண்பருக்குச் சிரமமில்லாமலிருக்கும்படி, அதன் மீது பட்டு மெத்தைகளையும் பரப்பி அனுப்பினர்!

இத்தகைய அன்பினுக்கு, என்ன கைம்மாறு செய்து முடியும்? இவ்வுலகத்தில் அநேகர் சுயநன்மையைப் பாராட்டுங் குணத்தைக் கண்டு என் மனம் வெறுப்படையும் பொழுதெல்லாம், அதற்கு மாறாக, சுய நன்மையைப் பாராதவர்கள் இவ்வுலகில் ஆயிரத்திலொருவராவது இருக்கிறார்கள் என்று இதை நினைத்து, என்மனதைத் தேற்றிக் கொள்வது என் வழக்கம். இதை நான் எழுதும் பொழுதும், அறுநூறு மைலுக்கப்பால் இருக்கும் இவர்கள் குடும்பத்தாருக்கு என்தலை வணங்குகிறேன். இதுதான் இவர்கள் செய்த உதவிக்கு நான் செய்யக்கூடிய கைம்மாறு. இதை வாசித்தாவது, எனது நண்பர்களில் யாராவது பிறருக்கு நன்மை செய்வதே பேறெ

மாந்தர்களின் முக்கிய கடன் என, எண்ணுவார்களானால், நானிவர்களுக்குச் செலுத்தவேண்டிய கடனைக் கொஞ்சம் தீர்த்தவனாவேன்.

அன்றைத்தினம் நாடகம் முடிய காலை இரண்டு மணியாயிற்று! அதன் பிறகு, நாடகத்தை பார்க்க வந்தவர்களுள் எங்களைத் தெரிந்தவர்கள் ஒருவரும் பாக்கி யின்றி, உள்ளே வந்து எங்களைக் கொண்டாடினார்கள் என்று கூறுவது அதிகமாகாது. எனக்கு மிகவும் இளைப்பாயிருந்த போதிலும் அவர்களுடன் சில வார்த்தைகளாவது பேசவேண்டியதாயிற்று. நானும் எனது நண்பரும் இந்தத் தர்ம சங்கடத்திலிருப்பதைக்கண்ட, எங்கள் நண்பர் ராஜேந்திரர், “இப்படி வருபவர்களுக்கெல்லாம் பதில் சொல்லிக்கொண்டிருந்தால் பொழுது விடிந்து போம்!” என்று சொல்லி, ரங்கவடிவேலுவையும் என்னையும், பலாத்காரமாய்த் தன் வண்டியில் அழைத்துக்கொண்டு, வீடுபோய்ச் சேர்ந்தார்.

அன்றைத்தினம் நான் உறங்குமுன் எங்கள் சபையின் நற்பெயரை இலங்கைத் தீபத்திலும் பரவச் செய்த இறைவனது பெருங்கருணையைப் போற்றி விட்டு, பிறகு நிம்மதியாய் உறங்கினேன்.

மறு நாள் சாரங்கதர நாடகம் நடத்தினோம். அதற்கு அத்தீபத்திலுள்ள சிங்களவர்களுக்குள் தலைமை வாய்ந்த பண்டார நாயக் என்பவர் விஜயம் செய்தார். அவருடைய முழுப் பெயர், சர் சாலமன் டையஸ், பண்டார நாயக் மஹா முதலியார்! இப்பெயரிலுள்ள விசித்திரத்தை இதை வாசிக்கும் நண்பர்கள் கவனிப்பார்களாக. சர் என்பது துரைத்தனத்தார் அவருக்கு அளித்த பட்டப் பெயர், சாலமன் என்பது ஹீப்ரு பதம், டையஸ் என்பது போர்த்துகேய வார்த்தை; பண்டார நாயக் என்பது பாலி பாஷை வார்த்தைகள், மஹா சமஸ்கிருதம்; முதலியார், தமிழ் பதம்! மஹா முதலியார் என்பது சிலோன் கவர்ன்மெண்டார் கொடுக்கும் பட்டப் பெயர்; சென்னையில் திவான் பகதூர் என்கிற மாதிரி. இவர் நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபொழுது. நாடகத்தை மெச்சிவிட்டு; அருகிலிருந்த தனது நண்பராகிய டாக்டர் சின்னையாவென்பவரை, பத்மநாபராவ், ரங்கவடிவேலு இவர்களைப் பார்த்து,

இந்த ஸ்திரீகள் எந்த ஜாதியார் என்று கேட்க, அவர், இவர்கள் ஸ்திரீகளல்ல; ஆண் பிள்ளைகளே யென்று பதில் உரைத்தும், நம் பாது, "வாஸ்தவமாக இவர்கள் ஸ்திரீகள் தான். இந்த உண்மையை இங்கு வெளியிட்டால் இவர்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிடப்போகிறதென இச் சபையார் அதை மறைத்துச் சொல்லுகிறார்கள் போலும்!" என்று பதில் உரைத்தனராம். இதை டாக்டர் சின்னையா என்பவரே என்னிடம் நேராக உரைத்தார். இவ்வாறு கூறினவருடைய சந்தேகம் நிவர்த்தியாகும் பொருட்டு, பத்மநாபராவ், ரங்கவடிவேலு முதலிய ஆக்டர்களையும் என்னையும் மறுநாள் அவர் வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய், இன்னின்னாரென அவருக்குத் தெரிவித்தார். அதன்மீது அனைவரும் கொஞ்ச நேரம் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, திரும்பிவிட்டோம்.

சாரங்கதர நாடகத்தில் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு நடித்தது எல்லோராலும் மிகவும் மெச்சப்பட்டது. மனோஹரன் நாடகத்தையும் இதையும் மறுமுறை பார்க்கவேண்டுமென்று பலர் கேட்டதற்கு நாங்கள் இணங்குவதற்கில்லாமற் போயிற்று. இந்த சாரங்கதர நாடகத்துடன் கண்டிராக்டாக ஏற்படுத்தப்பட்ட ஐந்து நாடகங்களும் முற்றுப்பெற்றன. ஏறக்குறைய ஒவ்வொரு நாடகத்திற்கும் ஆயிரம் ரூபாய்க்கு மேல் வசூலானபடியால், கண்டிராக்டருக்கு நல்ல லாபம் கிடைத்தது. அதற்காக எனது நண்பர்களில் சிலர் வெறுப்படைந்த போதிலும், எனக்குத் திருப்திகரமாகவேயிருந்தது. லாபம் வந்ததினால் சரியாகப் போய் விட்டது; நஷ்டம் வந்திருந்தால் கண்டிராக்டர்தானே அதைப் பொறுத்திருக்கவேண்டும்? மேற்சொன்னபடி ஐந்து நாடகங்களும் முடிந்த பிறகு எங்களையெல்லாம் நல்வரவேற்று, எங்கள் சவுகர்யத்திற்கெல்லாம், முதலில் எல்லா ஏற்பாடுகளையும் செய்த ஹானரபில் கனகசபை யென்பவர் இன்னொரு நாடகம் நடத்தி, அதன் வரும்படியில் பாதியை, இலங்கைத் தீபத்திய கவர்னர் ஏற்படுத்திய, டூபர்குலோசிஸ் வியாதி நிவாரண பண்டுக்காகக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டதின் பேரில் அதற்கு இசைந்தோம். என்ன நாடகம் போடுவதென்கிற கேள்வி வந்தபோது, இதுவரையில் சோகரசமும் வீரரசமும்

அமைந்த நாடங்களை இங்கு ஆடியுள்ளோம்; ஹாஸ்ய ரஸமமைந்த நாடகம் ஒன்று ஆடினால் நன்றாயிருக்குமெனத் தீர்மானித்து, "காத லர் கண்கள்" என்பதை ஆடுவதாகத் தீர்மானித்தேன். அப்படியே அந்நாடகமாடுவதாக விளம்பரம் செய்தபிறகு, ஆக்டர்களெல்லாம் தங்கள் தங்கள் பாடங்களைப் படிப்பதற்காக அப்புஸ்தகத்தைக் கொடுக்கவேண்டுமென்று, என்னைக் கேட்க நான் என்னுடன் கொண்டுபோன சில புஸ்தகங்களைப் பரிசோதித்துப் பார்த்ததில் அவற்றுள் இப்புஸ்தம் ஒன்றேனும் கிடைக்கவில்லை! என்ன செய் வது? ஒரு புஸ்தகமுமில்லாமல் ஆக்டர்கள் தங்கள் பாகங்களை எப்படிப் படிப்பது? எப்படி நாடகத்தினம் புராம்டு செய்வது? என்று மனக்கவலையுற்று, எங்கள் சிங்கள நண்பர்களுடன் இக்கஷ் டத்தைத் தெரிவித்து, கொழும்பில், யாராவது அப்புஸ்தகம் படிக்க வாங்கி யிருக்கிறார்களா?' என்று பார்த்து எப்படியாவது ஒரு புஸ் தகம் கொண்டு வாருங்கள் என்று சொல்ல, சீதையைத் தேடக் கிஷ்கிந்தை வாசிகள் நான்கு புறமும் போனதுபோல் அவர்களுட் சிலர் அப்பட்டணமெங்கும் சைகில் போட்டுக்கொண்டு தேடிப்பார்த் தனர். மறுநாட்காலை ஒருவர் ஒரு புஸ்தகம் கிடைத்ததெனக் கொண்டு வந்தார். அப்பொழுது எனக்குண்டான சந்தோஷம் கொஞ்சமல்ல; ஆயினும் ஒரு புஸ்தகத்தை வைத்துக்கொண்டு, "ஊருக்கு ஒரு தேவடியாள் யாருக்கென்று ஆடுவாள்?" என்னும் பழமொழிபோல், அப் புஸ்தகத்தை யாருக்குக் கொடுப்பது நான்? அதன்மீது என்னுடைய ஆக்டர்களையெல்லாம் சுற்றிலும் உட்கார வைத்துக்கொண்டு, நாடகத்தைக் கடைசிவரையில் ஒரு முறை படித்துக் காட்டினேன்! அவ்வளவுதான் ஒத்திகை! அவர்களில் சிலர் இதை முன்பே ஆடியிருந்தபடியாலும், எல்லோரும் அதிக சிரத்தையுடையவர்களாயிருந்தபடியாலும், நாடகமானது ஒரு குறையுமின்றி, மிகவும் நன்றாக நடந்தது. இவ்வாறு நடித்ததில் ஒரு விசேஷத்தை நான் குறிக்கவேண்டும். இந் நாடகத்தில் "வீர்சிங்" என்பது ஒரு முக்கியமான பாத்திரம். அதைச் சென்னையில் கோபாலசாமி முதலியார் என்பவர் சாதாரணமாக நடிப்பார். நாங் கள் புறப்படும் பொழுது இந்நாடகம் ஆடுவதாக யோசனையில்லாத படியால், அவரை இலங்கைக்கு அழைத்துக்கொண்டு போகவில்லை.

அதன் மீது திடீரென்று இந்நாடகத்தை வைத்துக்கொண்டபோது, எனது இளைய நண்பர் டி. சி. வடிவேலு சாதாரணமாக அவர் ஸ்திரீ வேடமே தரிப்பவராயினும், இந்த ஆண்வேடத்தை எடுத்துக்கொள்வதாகக் கூறியதுமன்றி, அப்பாகத்தை நன்றாய்ப்படித்து மிகவும் நன்றாய் நடித்தார். அப்படி நடித்ததற்காக நான் செய்த கைம்மாறு என்னவென்றால், அவருடன் ஒரு காட்சியில் நான் வாள் யுத்தம் செய்யவேண்டி வந்தபொழுது இவரது கையில் என் வாளால் நன்றாய்க் காயப்படுத்தினதே! அவர் இன்றைத் தினம் அகஸ்மாத்தாய் என் வீட்டிற்கு வந்து என்னுடன் பேசிக்கொண்டிருந்த பொழுது இந் நாடகத்தைப் பற்றி எழுதிக்கொண்டிருக்கிறேன் என்று நான் கூறிய பொழுது, இதை எனக்கு ஞாபகப்படுத்தினார்.

இந்நாடகத்தின் வசூலில் செலவுபோக, பாதிப்பணத்தை பேர் குலோசிஸ் வியாதி நிவாரணநிதிக்குக் கொடுத்து விட்டு, மிகுந்த பாதியை நாம் பட்டணம் கொண்டு போக வேண்டியதில்லை, இவ்வளவு அன்பும் ஆதரவுமுடன் நம்மை உபசரித்த சிங்கள சிநேகிதர்களுக்கே செலவழிக்க வேண்டுமென்று, அவர்களுக்கெல்லாம் ஒரு சிறு விருந்தளிக்க வேண்டுமென்று தீர்மானித்து, மறு நாள் அவர்களுக்கு அவ்விருந்தை ஏற்பாடு செய்து, எங்கள் நாடகத்திற்கு வந்திருந்த சீமாட்டிகளையும் சீமான்களையும் வரவழைத்தோம்.

மறுநாட் காலை விருந்தினர்க்கு உபசரணைக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்யும் பொருட்டு பப்ளிக் ஹாலுக்குப்போய் அவைகளையெல்லாம் செய்துவிட்டு, நாங்கள் கொழும்புக்கு வந்ததற்கு ஞாபகார்த்தமாக, எல்லோரும் உட்கார்ந்து ஒரு போடோ பிடித்துக்கொண்டு, சபை தங்கியிருந்த விடுதிக்கு வந்து சேர்ந்தேன். சேர்ந்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம் சென்னையிலிருந்து, சுமார் மூன்று வயதுடைய எனது இரண்டாவது பெண் மிகவும் அசௌக்கியமாயிருக்கிறதாயும், வயித்தியர்கள் டைபாய்ட், ந்யுமோனியா இரண்டும் கலந்திருப்பதாகச் சந்தேகிப்பதாகவும், எனக்கு ஒரு தந்தி வந்தது! அதைப்பார்த்தும் இடிவிழுந்தவன் போலானேன். சாதாரணமாக நான் பட்டணத்தை விட்டு வெளியிற்போனால் திரும்பி வருமளவும் என் மனைவி மக்களுக்குக் கடிதம் எழுதுவ

தில்லை ; அவர்களையும் எழுதச் சொல்வதில்லை. "ஒரு சமாசாரமும் இல்லாவிட்டால் சுபசமாசாரம் தான்" என்னும் ஆங்கிலப்பழமொழி யொன்றைக் கடைப்பிடித்து நடப்பவன் நான் ; ஏதாவது மிகவும் முக்கியமான சமாசாரமாயிருந்தால்தான் எனக்கு எழுத வேண்டும் என்று என் மனைவிக்குச் சொல்லியிருந்தேன். ஆகவே, இம்மாதிரியான தந்தி வந்தவுடன் என் குழந்தை ஆபத்திலில்லாவிட்டால் எனக்குத் தந்தியனுப்பி யிருக்கமாட்டார்கள் என்று நினைக்க வேண்டியதாயிற்று.

நான் இன்னது செய்வதென்று தெரியாது திகைத்தேன் ; ஒரு புறம் இவ்வளவு கஷ்டப்பட்டு இந்தக் கொழும்புப் பிரயாணத்தைச் சந்தோஷகரமான முடிவிற்குக் கொண்டு வந்தபின், இன்று சாயங்காலம், எங்கள் சபையைக் கௌரவப்படுத்தின சீமாட்டிகளையும் சீமான்களையும் பார்க்காமலாபோகிறது, என்கிற எண்ணம்; மற்றொரு புறம் என் குழந்தை மரணாவஸ்தை யிலிருக்கும் பொழுது, அதன் அருகிலில்லாம லிருப்பதா ? அதற்கு ஏதாவது நேரிடுமாயின், என் மனைவிக்குத் தேறுதல் சொல்லாமலிருப்பதா ? என்கிற எண்ணம். உடனே ஏகாந்தமான ஓரிடத்திற் போய் உட்கார்ந்து கொண்டு, என் கண்களை மூடிக்கொண்டு கருணையங்கடவுளைத் தியானித்தேன்; அப்பொழுது, கொழும்பில் என் கடமையைச் செய்தாயது, என் சுயநன்மையைப் பார்க்கலாகாது, பட்டணம்போய் நோயாய்க்கிடக்கும் என் குழந்தையருகில் இருக்கவேண்டியது தான் என் கடமை என்று எனக்குத் தோன்றியது. உடனே நான் பட்டணம் வருவதாகத் தந்தி கொடுத்துவிட்டு, எனக்குத் துணையாக வருவதாக இசைந்த எம். துரைசாமி ஐயங்காருடன் அன்று சாயங்காலம் கப்பலேறி, மறுநாட்காலை தூத்துக்குடி சேர்ந்து, ரெயிலேறி மறுநாள் சென்னை வந்து சேர்ந்தேன். கொழும்பை விட்டுப் புறப்பட்டது முதல் சென்னை வந்து சேரும்வரையில் என் மனதில் ஒரு பிரார்த்தனைதான் இருந்தது; அதாவது, எப்படியாவது ஈசன் கருணையினால் என் குழந்தையை உயிருடன் காணவேண்டு மென்பது தான்! ஈசன் என் பிரார்த்தனைக்கிணங்க என் குழந்தையை உயிருடன் கண்டேன். இந்த விஷயமாக, நாடகமேடைக்குச் சம்பந்தமான சமாசாரமாக இல்லாவிட்டாலும், நேரிட்ட ஒரு சிறு சமாசாரத்தை இங்கு எழுத

விரும்புகிறேன். நான் என் வீடு சேர்ந்து குழந்தையின் தேகஸ்திதியைப்பற்றி விசாரித்தபொழுது, என் குடும்ப வயித்தியர், வியாதி அதிகப்பட்டிருப்பதால் வீட்டிலுள்ளவர்கள் பார்த்துக்கொள்ள முடியாது, இரவும் பகலும் மணிப்பிரகாரம் ஔஷதம் முதலியன கொடுப்பதற்காக, நர்ஸ் இருக்கவேண்டியது அதி அவசியம் என்று ஏற்படுத்திய, ஒரு ஆங்கில நர்ஸ், எனக்குக் கூறியதை இங்கு தமிழில் மொழி பெயர்த்து எழுதுகிறேன் "என்ன ஆச்சரியம், மிஸ்டர் முதலியார்! குழந்தைக்கு விடாது ஐந்தாறு தினங்களாக 104, 105 டிக்ரி ஜ்வரம் இருந்து கொண்டிருந்தது, என்ன மருந்து கொடுத்தாலும் கொஞ்சமாவது இறங்கவேயில்லை; புத்தி மாருட்டத்திலும் உங்களைப்பற்றிக் கேட்டுக்கொண்டிருந்தது. நீங்கள் திரும்பி வருவதாக வந்த தந்தியை அதற்குக்காட்டி, உங்கள் அப்பா சீக்கிரம் வருகிறார்கள் பயப்படாதே, என்று சொன்னேன்; அந்தக் காகிதத்தை வாங்கி, தன் தலையணையின் கீழ் வைத்துக் கொண்டு உறங்கி விட்டது. அந்த க்ஷணமுதல் படிப்படியாக ஜ்வரம் குறைந்து விட்டது. என்ன வேடிக்கையா யிருக்கிறது!" என்றாள். அந்த அம்மாளுக்கு வேடிக்கையா யிருந்திருக்கலாம். எனக்கு வாஸ்தவமா யிருந்தது. என் சுய நன்மையைப் பாராட்டி, நான் உடனே புறப்பட்டு வருவதாகத் தந்தி கொடுத்திரா விட்டால், என் குழந்தை இறந்திருக்குமென்று நான் உறுதியாக நம்புகிறேன். இன்றளவும் அந்த நம்பிக்கை மாறவில்லை. என் மனதிற்குக் கஷ்டமாயிருந்த போதிலும் என் கடமைப்படி நான் செய்தபடியால் கடவுள் அக்குழவியை எனக்குக் காப்பாற்றியருளினார் என்று முழுமனதுடன் நம்புகிறேன். இதை வாசிக்கும் எனது நண்பர்களிற் சிலர், 'இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? காக்கை ஏறப் பனம்பழம் விழுந்த கதை போலிருக்கிறது' என்று நகைக்கலாம். அவர்கள் அவ்வாறு எண்ணி நகைப்பது தவறு என்று நான் சொல்லமாட்டேன். ஆயினும், மேற்கூறிய என்னுடைய தீர்மானத்தினின்றும் நான் மாறமாட்டேன்!

இக்கிளைக்கதையை இதனுடன் விட்டு, இனிக்கொழும்பில் நடந்ததைப்பற்றி எழுதுகிறேன். இதைப்பற்றி எனதாருயிர் நண்பர் சி. ரங்கவடிவேலுவும், வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரும் எனக்கு

எழுதிய கடிதங்கள் இன்னும் என்னிடம் இருக்கின்றன. அவர்கள் பப்ளிக் ஹாலுக்குப் போனது முதல், வந்தவர்களெல்லாம் ஒருவர் பாக்கியின்றி, 'எங்கே மிஸ்டர் சம்பந்தம்?' என்று வினவ, அவர்களுக்கு, நான் திடீரென்று பட்டணம் திரும்பிப் போகவேண்டி வந்த காரணத்தை அவர்கள் தெரிவிக்க, அனைவரும் வருத்தப்பட்டதாகத் தெரிவித்தனர். அன்றியும் இரண்டு நாள் பொறுத்து, என் குழந்தை அபாயத்தினின்றும் நீங்கியது என்று என் தந்திபோய்ச் சேருமளவும் பன்முறை பட்டணத்திலிருந்து ஏதாவது சேதி வந்ததா என்று பலர் கேட்டனுப்பியதாகச் சொன்னார்கள். இவ்வாறு என் குடும்ப சுகத்தைப்பற்றிக் கேட்டவர்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? அப்படி விசாரித்தவர்களில் நூற்றில் தொண்ணூற்றொன்பது பெயரை நான் பார்த்தவனுமன்று; ஏதோ நான் நாடக மேடையில் அவர்கள் மனதைச் சிறிது சந்தோஷிக்கச் செய்தது, அத்தனை பெயரையும் என் மீது அவ்வளவு பிரீதி கொள்ளும்படிச் செய்தது; நாடக மாடுவதிலும் கொஞ்சம் பலன் உண்டு என்று நான் நம்ப வேண்டியதாயிருக்கிறது.

மேற்குறித்த சந்தர்ப்பத்தினால், அக்குழந்தையை சில வருஷம் வரையில் "கொழும்பு குழந்தை" என்று கூப்பிட்டுக்கொண்டிருந்தேன். அன்றியும் இந்த அனுபவத்தை, நான் இப்போதைக்கு இரண்டு வருஷங்களுக்கு முன் எழுதிய "தாசிப்பெண்" என்னும் நாடகத்தில் கதா நாயகியாகிய மீனாட்சி மரணாவஸ்தையிலிருந்து தப்பிப்பிழைத்த காட்சியில் சற்று மாற்றி, உபயோகித்திருக்கிறேன். இக்குழந்தை பெரியவளாகி, விவாகமாகி, தெய்வ கடாக்ஷத்தினால், ஒரு பெண் குழந்தையைப் பெற்றிருக்கிறாள். அந்த என் பேத்திக்கு மீனாக்ஷி என்று பெயர் வைத்திருக்கிறேன்.

இரண்டு மூன்று தினங்கள் பொறுத்து கொழும்பிலிருந்து எனது நண்பர்கள் எல்லாம் பட்டணம் சுகமாய் வந்து சேர்ந்தனர். அதன் பிறகு கொஞ்ச நாளைக்கெல்லாம், கொழும்பு நகரவாசிகள், எங்கள் சபைக்குச் செய்த மரியாதையாக வெள்ளி வேலை செய்யப்பட்டு, சுமார் 500 ரூபாய் பொறும்படியான, ஒரு யானையின் விக்ர

ஹத்தின் முதுகின்பேரில் வைக்கப்பட்ட, கண்டி நகர் வேலைப் பாடுள்ள கிண்ணமும், லங்கைத் தீவுக்கு அறிகுறியாக ஒரு வெள்ளித் தென்னைமரமும், ஒரு பெரிய வெள்ளித் தட்டும்; வந்து சேர்ந்தன.

நாங்கள் கொழும்பிலிருந்த பொழுது, அங்குள்ள சில பெரிய மனிதர்கள், என் ஆருயிர் நண்பர் சி. ரங்கவடிவேலுவுக்கும், எனக்கும் பொற்பதக்கமளிக்கவேண்டுமென்று இரண்டு பதக்கங்களைத் தயார் செய்தும் எங்கள் சபையின் சட்டங்களின்படி நாங்கள் அவைகளைப் பெறலாகாது என்று மறுத்தோம்; உங்களுக்கு விருப்பமானால் எங்கள் சபைக்குப் பொதுவாக மரியாதை செய்யலாமே யொழிய சபையின் அங்கத்தினர்க்கு பிரத்யேகமாய் மரியாதை செய்யக்கூடாதென்று தெரிவித்தோம். இதை உத்தேசித்து தான் கொழும்பு நகரவாசிகள் மேற்கண்டபடி சபைக்கு மரியாதை செய்திருக்க வேண்டுமென்று எண்ணவேண்டியதாயிருக்கிறது. இதற்குப் பிரதியாக கொழும்பு தமிழ் சங்கத்தார் இவ்வருஷம் கடைசியில் சென்னைக்கு வந்தபொழுது, எங்கள் சபையார் அவர்களுக்கு அலங்கார வெள்ளிக்கேடயம் ஒன்று ஞாபகார்த்தமாக அளித்தனர்.

இவ்வாறு, பலர் அசாத்தியமான காரியம் என்று கூறிய இப் பெரும் வேலையை, சந்தோஷகரமாய் முடித்ததற்கு, என்னை ஒரு சிறு கருவியாகக்கொண்ட எம்பெருமான் பேரருளைப்போற்றி இனி மேல் நடந்த கதைகளை என் அன்பர்களுக்குத் தெரிவிக்கிறேன்.

இவ்வருஷக் கடைசியில் மாட்சிமை தங்கிய நமது ஐந்தாம் ஜார்ஜ் சக்ரவர்த்தி மகுடம் புனைந்த கொண்டாட்டம் சென்னையில் நடந்தபொழுது, அக்கொண்டாட்டத்தின் கமிட்டி மெம்பர்கள் வேண்டுகோளின்படி ஜிம்கானா மைதானத்தில் நிர்மாணிக்கப்பட்ட பெரிய கொட்டகையில் இந்தியதேசச் சரித்திரத்தின் சில முக்கிய காட்சிகளைத் தோற்றக் காட்சிகளாகக் காண்பித்தோம்.

இவ்வருஷம் எங்கள் சபையின் தெலுங்குப் பிரிவினர் வேதம் வெங்கடாசல ஐயர் இயற்றிய "விதிலேக வயித்தியுடு" என்னும் நூதன தெலுங்கு நாடகத்தை நடத்தினார்கள். இது பிரான்சு தேசத்திய பிரபல நாடகக்கவியாகிய மாலியர் என்பவர் எழுதிய

பிரஹஸனமொன்றின் மொழிபெயர்ப்பாம். இதை நான் தமிழில் அமைக்கலாமென்றிருக்கிறேன் பரமேஸ்வரர் ஆயுள் கொடுப்பாராயின். இவ்வருஷத்திய தசராக்கொண்டாட்டத்தில் நடந்த ஒரு விசேஷத்தை இனி எழுதுகிறேன். தசராவில் ஏதாவது புதிதாய்ச் செய்யவேண்டுமென்று வற்புறுத்திக்கொண்டிருந்த எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரின் வேண்டுகோளைத் தட்டக் கூடாது என்று எண்ணினவனாய், எங்கள் சபையிலுள்ள எட்டு ஸ்திரீ வேடம் தரிக்கும் ஆக்டர்களைக்கொண்டு கோலாட்டம் போட்டு வைக்க வேண்டுமென்று தீர்மானித்தேன். அதற்காக ஒரு நட்டுவனையும் பிடித்து இரகசியமாகக் காலை வேளைகளில் ஒத்திக்கைகள் நடத்திவந்தேன்; ஒத்திகைகளெல்லாம் முடிந்தவுடன் இதைத் தசராவில் ஒருநாள் போடுவதென்றால் அதற்கு ஒரு காரணம் வேண்டுமேயென்று யோசித்து "சபாபதி முதலியாரின்" தங்கை வயதடைந்த சடங்கிற்காக அவர் வீட்டில் கோலாட்டம் நடக்கப்போகிறதெனப் பெயர் வைத்துத் தசராவின் முதல்நாள் கொண்டாட்டத்தில் சபாபதி முதலியார் தனது நண்பர்களையெல்லாம் அழைப்பது போல், சபையின் அங்கத்தினர்க்கெல்லாம் பத்திரிகை கொடுக்கச் செய்தேன். ஆயினும் இதில் ஒரு கஷ்டம் வந்து சேர்ந்தது. சபையிலுள்ள ஸ்திரீ வேஷ தாரிகளெல்லாம் கோலாட்டம் போடும் தாசிகளாக வேடம் பூண வேண்டி வந்தது. ருதுவடைந்த சபாபதி முதலியாரின் தங்கையாக உட்கார்ந்திருக்க வேறொருவரும் கிடைக்கவில்லை! வேடம் பூணக்கூடிய உருவமுடைய சிலரை அண்டிக்கேட்ட போது, அவர்கள் அந்தப் பெண் வேடம் பூணுவதென்றால் வெட்கமாயிருக்கிறதென மறுத்தனர். இந்தத் தர்ம சங்கடத்தினின்றும் தப்பவேறு வகையில்லாதவனாய், அந்த வேடம் நானே பூணத் தீர்மானித்தேன். இது மற்றவர்களுக்குத் தெரிந்தால் ஏளனம் செய்வார்களென்று இச் செய்தியை இரகசியமாய் வைத்திருந்தேன். தசராவின் முதல் தினமும் இந்த வேடம் நான் பூணுவதை மற்றவர்கள் அறியக்கூடாதென்று நினைத்து, அன்றைத்தினம் நான் வெளியூருக்கு வியாஜ்ய சம்பந்தமாகப் போவதாக வெளியிட்டு விட்டு, அன்றைத் தினம் மத்தியானம் ஒருவருமறியாதபடி விக்டோரியா ஹாலின் மேல் மாடிக்குப்போய், ஆக்டர்கள் தவிர மற்று யாரும் நேபத்தியத்திற்குள் வரக்கூடாதென்று விளம்பரம் போட்டுவிட்டேன். இம்

முறை ரங்கவடிவேலுவும், ஜெயராம் நாயகரும் எனக்கு நன்றாகத் தான் பெண் வேஷம் போட்டுவைத்தார்கள். காட்சி ஆரம்பத்தில் முதலியார்கள் வீட்டின் வழக்கம்போல், கலியாணப் பெண்ணை மங்களப் பாட்டுடன், நாதஸ்வரம் வாசிக்க, சிருங்காரித்திருந்த வீட்டின் மத்தியிற் கொண்டுபோய் உட்காரவைக்க வேண்டியிருந்தது; அப்பொழுது தலை குனிந்து, வாயைத் திறவாமல், மேடையின் மீதிருந்த நாற்காலியின் பேரில், என் தாயாராக வேடம் பூண்ட ஒரு ஆக்டர் கொண்டுபோய் உட்கார வைத்தபொழுது, என்னை இன்னானென ஒருவரும் கண்டு பிடிக்க முடியவில்லை. நம்முடைய சூட்சி பலித்தது, நம்மை ஒருவரும் கண்டுபிடிக்க வில்லை என்று நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த பொழுது, இரண்டு நிமிஷத்திற்கெல்லாம், சபையிலுள்ள அனைவரும் கொல்லென்று நகைத்து கை கொட்டினர்! ஓகோ! நம்மைக்கண்டு பிடித்து விட்டார்கள் என்று அறிந்தவனாய் அக்காட்சி முடியும் வரையில் என் தலையைத் தூக்க வில்லை நான்!

பிறகு நான் எப்படி இவர்களுக்குத் தெரிந்தது என்று விசாரித்ததில், என்னுடைய தமையனார் ஆறுமுக முதலியாரால் வெளியாயது என்று கண்டேன். காட்சியின் துவக்கத்தில் அவர், அப்பொழுது ஸ்மால்காஸ் கோர்ட்டு சீப் ஜட்ஜாயிருந்து, பிறகு ஐகோர்ட்டு ஜட்ஜான, கிருஷ்ணன் என்பவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாராம். நான் மேடையின் மீது உட்கார்ந்தவுடன், இது யார் புதிய ஆக்டர் என்று எல்லோரும் வினவிக் கொண்டிருக்க, மிஸ்டர் கிருஷ்ணனும், சபையின் காரியதரிசியா யிருந்த என் தமையனாரை நோக்கி, இதுயார் என்று கேட்க, அவர் மெல்ல அவரிடம் "இது சம்பந்தம்" என்று தெரிவித்தாராம். இதைக்கேட்டவுடன் மிஸ்டர் கிருஷ்ணன் "சம்பந்தமா!" என்று உரக்கச் சொல்லி நகைத்து விட்டனராம். உடனே இந்த சமாசாரம் ஹால் எங்கும் பரவிவிட எனது நண்பர்களெல்லாம் கைகொட்டி நகைத்து விட்டனர் என்பதை அறிந்தேன்.

அன்றைத்தினம் கோலாட்டம் போட்டது மிகவும் நன்றாயிருந்ததெனச்சொல்லி, மறுபடியும் அதைப் போடும்படி சபையின் அங்கத்தினர்கள் கேட்டது எனக்கு ஞாபக மிருக்கிறது.

இவ்வருஷம் நடந்த நிகழ்ச்சிகளுள், மிகுந்த வியசனகரமான தொன்று, எங்கள் சபையின் அத்யட்சகராயிருந்த ஆனரபில் வி. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் மரணமே. இந்த வருஷத்தின் ஆரம் பத்தில் அவர் ஹைகோர்ட் ஜட்ஜபதவியிலிருந்து, சென்னை கவர்னர் அவர்களுடைய கவுன்சில் மெம்பராக நியமிக்கப்பட்டார். அதைக் கொண்டாடும் பொருட்டு, ஜனவரி மாதம் 29-ம் தேதி, சபையில் பெரும் மகிழ்ச்சி கொண்டாடி ஒரு விருந்து செய்தோம். ஒரு வருஷத்திற்குள்ளாகவே அவர் காலமாவார் என்று ஒருவரும் எண்ணவில்லை. ஆயினும் தெய்வம் விதித்த விதி அப்படியிருந்தது. இவரது குணநிச்சயங்களைப்பற்றி ஒரு சந்தர்ப்பத்தை இங்கு எழுத விரும்புகிறேன். இவ் வருஷம் சென்னை கவர்னர், தனது ஐந்து வருட ஆளுகை முடிந்து சீமைக்குத் திரும்பிப்போக வேண்டிய சமயம் வந்தபொழுது, சென்னையில் சிலதனவான்கள் அவருக்கு உபசாரணையாக ஒரு விருந்து செய்யவேண்டுமென்று தீர்மானித்தனர். மற்றும் சிலர் அங்ஙனம் செய்யக்கூடாதென்று ஆட்சேபித்தனர். இவ்வாறு சென்னையில் இதைப்பற்றி இரண்டு கட்சிகள் ஏற்படவே, எங்கள் சபையாரை கவர்னரது உபசாரணை விருந்தில் ஏதாவது நாடகமாடவேண்டுமென்று ஒரு திறத்தார் கேட்க, அதைப்பற்றி இரண்டு கட்சிகள் இருக்கும் பொழுது, சபையார் இதில் கையிட்டுக் கொள்ளக் கூடாதென்று தீர்மானித்தோம். பிறகு வேறு ஏற்பாடுகள் செய்யப்பட்டு அந்த உபசாரணை, ஐலண்டு கிரௌண்டில் நடக்க எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவும் நானும் வரவழைக்கப் பட்டுப் போயிருந்த பொழுது ஒரு மூலையில் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தோம். அங்கு கொட்டகையில் வி. கிருஷ்ணசாமி ஐயர் வந்தவுடன், தூரத்திலிருந்த நாங்கள் நமஸ்காரம் செய்ததைக் கண்டவராய், உடனே நாங்களிருந்த விடம் விரைந்து வந்து எங்கள் கையைக் குலுக்கிவிட்டு, என் காதில் மெல்ல "நம் முடைய சபை செய்தது மிகவும் சரி!" என்று ரகசியமாய்ச் சொல்லிவிட்டுப் போனார்! நாங்கள் இவர் எங்கள் சபையின் அத்யட்சரா யிருந்தும், கவர்னர் கவுன்சில் மெம்பரா யிருந்தும், கவர்னருக்குச் செய்த உபசாரணையில், எங்கள் சபை சேரக் கூடாது என்று தீர்மானித்ததைப்பற்றி எங்கு கோபித்துக் கொள்ளுகிறாரோ என்று பயந்

திருந்தோம். இதை அறிந்தவராய், அப்பயம் நீங்கும்படி அச்சமயம் எங்களிடம் இதை வந்து தெரிவித்துப் போனது நான் என்றும் மறக்கற்பாலதன்று.

என்னிடம் மிகுந்த அன்பு பாராட்டிய இச்சீமானை விட்டகலுமுன் இவரைப்பற்றிய இன்னொரு சிறு கதையை எனது நண்பர்களுக்குத் தெரிவிக்கிறேன். ஒரு முறை தெலுங்கு நாடகமொன்று நடந்துகொண்டிருந்தது—பிரஹ்லாத நாடகமென்று நினைக்கிறேன்—அதில் பிரம்மாவினுடைய பாத்திரம் பெரிய தொப்பையை உடைய ஒரு ஆக்டருக்குக் கொடுத்திருந்தனர். அவரைக் கண்டதும், கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள், இப்பாகத்தை இப்படிப்பட்டவருக்குக் கொடுக்கக் கூடாதென்று கண்டித்தவராய் "எங்கே சம்பந்தம்? கூப்பிட்டு வாருங்கள்" என்று, ரங்கத்திற்குள்ளே யிருந்த என்னை அழைத்தனர். நான் என்ன சமாசாரமோ என்று அவர் அருகிற் போய் நிற்க "இந்த பிரம்மா வேஷம் பெரும் குடைத்தைப்போல் தொப்பையை யுடைய இந்த ஆக்டருக்கு உன்னை யார் கொடுக்கச் சொன்னது?" என்று கேட்டார். "இது தெலுங்கு நாடகம், இதில் நான் ஒன்றும் பிரவேசிப்பதற்கில்லை" என்று நான் பதில் சொல்ல "அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ தான் எனக்கு உத்தரவாதம், இம்மாதிரியான தவறுகள் நடக்காதபடி நீ பார்த்துக் கொள்ள வேண்டும்!" என்று கண்டிப்பாய் பதில் உரைத்தார். இதன் பேரில் நான் என்ன சொல்லக்கூடும்!

கிருஷ்ணசாமி ஐயர் கூறிய வார்த்தைகளினின்றும், தென்னிந்தியா நாடகமேடை அபிவிர்த்தியடையவேண்டுமென்று விரும்புவோரெல்லாம் அறிந்துகொள்ளவேண்டியது ஒன்றிருக்கிறது—அதாவது நாடக பாத்திரங்களை ஆக்டர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் பொழுது, ஒவ்வொரு ஆக்டரும் நடிக்கவேண்டிய பாத்திரத்திற்குத் தக்க ரூபம் முதலியன உடையவனா யிருக்கிறனா என்று பார்த்துக் கொள்ள வேண்டியதாம். இது தமிழ்நாடக அபிவிர்த்திக்கு ஒரு முக்கியமான விஷயமாதலால் இதைப்பற்றி சற்று விவரிக்க விரும்புகிறேன். நான் கண்ணாரக் கண்ட சில ஆபாஸங்களை இங்கெழுதுகிறேன். ஒரு நாடகக் கம்பெனியார் ஆடிய நாடகத்

தில் ஒருவன் மன்மதனாக வேடம் பூண்டான்; முகத்தை நோக்கு மளவில் அவனுக்கு ஹனுமார் வேஷம் தான் தக்கது என்று தோன் றும்படி யிருந்தது; அதன் மீது அந்தக் கம்பெனியின் சூத்ரதாரை இவனுக்கு ஏன் இந்த வேஷம் கொடுத்தீர்களென்று கேட்க, இவன் மிகவும் நன்றாய்ப் பாடுவான் சார், என்று பதில் தெரிவித்தார்.

இன்னொரு சமயம் ஒரு நாடகக் கம்பெனி எனது மனோஹரன் நாடகத்தை நடத்தியபொழுது, விஜயாள் வேஷம் பூண்ட பெண், ஒன்றரைக் கண்ணுடையவளாயிருந்தாள்! இதை சாதாரண ஜனங் கள் "டப்ஸா கண்" என்று சொல்வார்கள். (தமிழ் வித்வான்கள் இப்பதத்தை நான் உபயோகித்ததற்காக மன்னிப் பார்களாக) இப்படிப்பட்ட கண்ணையுடைய ஆக்டெரஸ் மேடையின் மீதிருந்து "பிராணநாதா" என்று அழைக்கும் அநேக சமயங்களில் மனோஹ ரனைப்பார்த்து அழைக்கிறாளா, அல்லது ராஜப்பிரியனைப் பார்த்து அழைக்கிறாளா, அல்லது சபையிலிருக்கும் யாரையாவது பார்த்து அழைக்கிறாளா, என்று சந்தேகிக்க இடங்கொடுத்தது! இன்னொரு கம்பெனியில் நான் பார்த்த "விஜயாள்" பத்மாவதியைப் பார்க்கிலும் மூன்று பங்கு பெருத்த உடலையுடைய வளாயிருந்தாள்! நான் சாதாரணமாக பரிஹாசமாக எழுத வேண்டுமென்று எழுத வில்லை. நான் கண்ட வாஸ்தவத்தை உண்மையில் எழுதவேண்டு மென்றே எழுதுகிறேன்; இவள் நடக்கும் பொழுது ஆப்பிரிக்கா தேசத்தி லுள்ள ஹிப்பப்போடமஸ் நடப்பது போலிருந்தது! இப்படிப்பட்ட வளுக்கு ஏன் இந்த விஜயாள் வேஷம் கொடுக்கப்பட்டது என்று விசாரிக்குமளவில் இவள்தான் இந்நாடக கம்பெனியில் "அயன் ஸ்திரீ பார்ட்" ஆகவே இவளுக்கு இந்தப் பாத்திரம் கொடுக்கப் பட்டது என்று பதில் உரைக்கப்பட்டது. இதனால் நாடகமேடை யேற விரும்பும் எனது நண்பர்களுக்கு நான் தெரிவிக்க விரும்புவது யாதெனில், நாம் என்ன வேடம் வேண்டு மென்றாலும் எடுத்துக் கொள்ளலாம் என்கிற சுதந்தரம் நம்மில் யாருக்காவது இருந்த போதிலும், நமக்கு ஏற்ற பாத்திரத்தையே எடுத்துக்கொள்ள வேண்டுமே யொழிய, சரீரத்தைக் கருதியோ, சாரீரத்தைக் கருதி யோ நமக்கு ஏற்றதாயிராத பாத்திரத்தை நாம் எடுத்துக்கொள்ள கூடாதென்பதேயாம். முன்பே நான் ஹரிச்சந்திரனாக நடித்தது

தவறு என்று எனது நண்பர்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். ஒரு தெலுங்கு பழமொழி இந்த சந்தர்ப்பத்தில் எனக்கு ஞாபகம் வரு கிறது; அதைத் தமிழில் "என் வீட்டிற்கு நானே பெரியவன் பூனைக்குப் போட்டா பெரியநாமம்" என்று மொழி பெயர்க்கலாம். இந்தப் பழமொழிக் கிணங்க, நான் பீமசேனன் வேடம் தரித்தால் எப்படி யிருக்கும்! ஆகவே, இவ்விஷயத்தை எனது நண்பர்களாகிய ஆக்டர்களும் கண்டக்டர்களும் நன்கு கவனிப்பார்களாக.

இந்த 1911-ஆம் ஆண்டின் முடிவில், நான் மேற்சொன்னபடி ஹானரபில் வி. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் நமது தேசம் செய்த துர்ப்பாக்கியத்தால் காலகதியடைந்த பொழுது, எங்கள் சபையில் ஒரு பொதுக் கூட்டம்கூடி, சபையின் துக்கத்தைத் தெரிவித்தது மன்றி, ஐயர் அவர்களுடைய படம் ஒன்றைச் சபையில் வைக்க வேண்டு மென்றும் தீர்மானித்தோம். சீக்கிரத்தில் 500 ரூபாய் செலவழித்து அவரது முழு உருவப்பட மொன்று சபையில் வைத் தோம். அன்றியும் அவர் ஞாபகார்த்தத்திற்காக அவரது சிலா உருவம் ஒன்றுவைப்பதற்காக ஒரு பண்டு சென்னையில் ஏற்படுத்திய பொழுது அதற்கு சபையின் பணத்திலிருந்து 1000 ரூபாய் கொடுத் தோம். என்ன செய்தும், அவர் எங்கள் சபைக்குச் செய்த உதவிக் காக, ஆயிரத்திலொரு பங்கு கூட எங்கள் சபையின்கடனை அடைத் தவர்களாகோம் என்பது என் நிச்சயமான எண்ணம். அவர் மாத் திரம் சிலவருஷங்கள் உயிரோடிருந்திருப்பாராயின், சுகுண விலாச சபை இருப்பதற்கோர் கட்டடமும், நாடக மாடுவதற்கோர் புதிய நாடக சாலையும், என்றோ பெற்றிருக்கும்!



# 21 ஆவது அத்தியாயம்



1912-ஆம் வருஷம் எனக்கு ஞாபகம் இருக்கிற வரையில் எங் கள் சபை இருநூறாவது நாடகமாக, நான் எழுதிய "விரும்பிய விதமே" என்னும் நாடகத்தை ஆடியதைத் தவிர, வேறு விசேஷ மொன்று மில்லை.

1913-ஆம் வருஷத்தில் எங்கள் சபையில் நேரிட்ட முக்கிய சம்பவம், நாங்கள் மறுபடியும் லங்கைக்குப்போனதேயாம். இரண்டு வருடங்களுக்கு முன் அத்தீவுக்குப் போனபொழுது, கொழும்பில் நாங்கள் நாடகமாடினதைப் பார்க்க, யாழ்ப்பாணத்திலிருந்து ஜனங்கள் வந்தனர். அவர்களிற் சிலர், தங்கள் ஊருக்கு வரும்படிச் சபையை அழைத்தனர். அம்முறை முடியாது பிறகு ஒரு முறை லங்கைக்கு வந்தால் யாழ்ப்பாணம் வருகிறோம் என்று சொல்லியிருந்தோம். அன்றியும் கொழும்பில் எங்கள் நாடகங்கள் எல்லாம் முடிந்தவுடன், அவ்விடத்திய நண்பர்கள், எங்களை மறுவருஷமே வரும்படியாகக் கேட்டனர்; அது சாத்தியமல்ல, இரண்டு வருடங்கள் கழித்து வரக்கூடும் என்று சொல்லியிருந்தோம். நான் அதன் படி இவ்வருஷம் லங்கைக்குப் போகலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது, ஒரு நாள் (ஏப்ரல் மாதத்தில் என்று நினைக்கிறேன்) திடீரென்று கொழும்பு நாடகசாலை முழுதும் வாடகைக்குப் பெற்றிருந்த வாரிக் பேஜர் என்பவர், சபைக்கு வந்து என்னைக்கண்டார். இவர் தான் முந்திய முறை நாங்கள் இவருடைய நாடக சாலையைக் குடிக்கூலிக்குக் கேட்ட பொழுது, இச்சபையாருக்கு என்ன வரும்படி வரப்போகிறது இங்கு தமிழில் நாடகம் நடத்தினால், என்று சந்தேகித்து, 5 தினங்களின் குடிக்கூலியை முன்னதாகவே பெற்றுக்கொண்டவர். ஆயினும் இதை அவர் மீது குறையாகக் கூறவில்லை. நான் அவருடைய ஸ்தானத்தில் இருந்திருப்பேனாயின் அப்படித்தான் நானும் செய்திருப்பேன் என்று நினைக்கிறேன். இங்கு நான் சொல்ல வந்த முக்கியமான அம்சம் என்னவென்றால், எங்கள் சபையின் நாடகங்களைப் பாராமுன் அவ்வாறு சந்தேகித்தவர், தனது நாடக ரங்கத்தில் நாங்கள் நாடகங்கள் போட்டபொழுது பார்க்க வந்த பெரும் ஜனக் கூட்டங்களைக் கண்டவராய், தானாக இவ்வருஷம் சென்னைக்கு வந்து, எங்கள் சபையைக் கொழும்புக்கு அழைத்தார்.

அவர், "நீங்கள் வேறொருவருக்கும் கண்டிராக்டாக உங்கள் நாடகங்களைக் கொடுக்க வேண்டியதில்லை. நானே எடுத்துக்கொள்ளுகிறேன், கொழும்பு துறை முகத்தில் நீங்கள் வந்து சேர்ந்தது முதல், மறுபடியும் அங்கிருந்து சென்னைக்குத் திரும்பி வருகிற

ஸ்வரியில் நாடகங்களுக்கு வேண்டிய உங்கள் செலவையெல்லாம் நான் கொடுத்து விடுகிறேன். அன்றியும் நாடகங்களுக்கு வரும் மொத்த வரும்படியில், நூற்றிற்கு அறுபது விகிதம் உங்களுக்குக் கொடுக்கிறேன். மிகுதி, நாற்பது விகிதம், நாடகரங்கம் குடிக் கூலிக்காகவும், மற்றுமுள்ள செலவிற்காகவும் நான் எடுத்துக்கொள்ளுகிறேன்" என்று சொன்னார். இதைக்கேட்டவுடன் பழம் நழுவிப் பாலில் விழுந்ததெனச் சந்தோஷமுடன் ஒப்புக்கொண்டு, எங்கள் சபையின் நிர்வாக சபையாரையும் ஒப்புக்கொள்ளச் செய்தேன். உடனே புறப்படுவதற்கு ஏற்பாடுகளெல்லாம் செய்து, இங்கிருந்து மே மாதம் 28 ஆம் தேதி ஆக்டர்களும் ஆக்டர்களல்லாதாருமாக 43 பெயர் புறப்பட்டோம். ஒரு முறை போய் வந்தபடியால் இம்முறை ஏற்பாடுகள் செய்வது சுலபமாயிருந்தது. இம்முறை எப்படியாவது யாழ்ப்பாணத்திற்கும் போகவேண்டுமென்று தீர்மானித்தோம். கொழும்பில் வருகிறபடி யாழ்ப்பாணத்தில் வசூலாகுமோ என்னவோ என்று சந்தேகப்பட்டோம். அன்றியும் யாழ்ப்பாணத்தில் நாடக ரங்கமே கிடையாது, கொட்டகை யொன்று புதிதாய்ப் போடவேண்டுமென்று அறிந்தோம். இந்தக் கஷ்டங்களையெல்லாம் யோசித்து, யாழ்ப்பாணத்தார் ஒருவர், யாழ்ப்பணத்தில் நடத்தும் நாடகங்களின் செலவை யெல்லாம் தான் மேற்கொண்டு, எங்கள் ரெயில் செலவுக்கும் சாப்பாட்டுச் செலவிற்கும் மொத்தமாக ஐந்நூறு ரூபாய் கொடுப்பதாகச் சொல்லவே, அங்கு போவதினால் நஷ்டமில்லாமற் போனால் போதும் என்று தீர்மானித்து, அப்படியே ஒப்புக்கொண்டோம்.

இம்முறையும் லங்கைக்கு தூத்துக்குடி வரையில் ரெயில் மார்க்கமாய்ப் போய், அங்கிருந்து ஸ்டீமர் ஏறி கொழும்பு போய்ச் சேர்ந்தோம். கொழும்பில், லீலாவதி சுலோசனை, விரும்பியவிதமே, மனோஹரன், ஹரிச்சந்திரன், நற்குல தெய்வம் என்னும் ஐந்து நாடகங்களை நடத்தினோம். இவைகளைப்பற்றி நான் எனது நண்பர்களுக்கு அதிகமாய் எழுதவேண்டிய நிமித்தியமில்லை. முதன்முறை நடை பெற்றதைவிட, இம்முறை நாடகங்கள் மிகவும் அழகாய் நடைபெற்றன. முதன்முறையைவிட, ஜனங்களும் அதிகமாய் வந்தனர். எங்கள் சபையின் பங்கு வரும்படியில், எங்கள் செலவெல்லாம்

போக 1500 ரூபாய்க்கு மேல் மிகுந்தது. இத்தொகையை இதற்கு முந்திய வருஷம் ஸ்தாபித்த "கட்டட பண்டிற்கு"ச் சேர்த்தோம். இம்முறை நாங்கள் தங்கியிருப்பதற்கு வாரிக்மேஜர் என்பவர் தகுந்த வசதியெல்லாம் ஏற்பாடு செய்திருந்தார். முதன்முறை நாங்கள் இங்கு போனபோது எப்படி பரிவுடன் கொழும்பு வாசிகள் எங்களுக்கு உபசரணை செய்தனர் என்பதை முன்பே தெரிவித்திருக்கிறேன். இம்முறை எங்களை நன்றாயறிந்தமையால் அதைவிடப் பதின் மடங்கு அதிகமாய் உபசரித்தனர் என்றே நான் சொல்லவேண்டும். காலையில் எழுந்தால், பழங்களோ, தின்பண்டங்களோ, ராக்வுட் குடும்பத்தார் முதலிய நண்பர்களிடமிருந்து ஓயாது வந்துகொண்டிருக்கும்; எங்களைப் பார்க்க இரவில் நாங்கள் தூங்குகிறவரையில் சிநேகிதர்கள் வந்துகொண்டேயிருப்பார்கள். நானும் எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலுவும், இரண்டு வேளை ஒன்றாய் சமை தங்கியிருந்த வீட்டில் போஜனம் கொண்டோம் என்பதில்லை! காலையில் ஒருவர் வீட்டில் விருந்து, சாயங்காலம் ஒருவர் வீட்டில் பலஹாரம், இராத்திரி ஒருவர் வீட்டில் விருந்து! சில நாட்களில் சாயங்காலம் டீ, இரண்டு மூன்று இடத்தில் சாப்பிட வேண்டியதாயிற்று. இதை நான் ஏதோ அதிகப்படுத்திச் சொல்கிறேனென்று இதை வாசிக்கும் எனது நண்பர்கள் எண்ணாதிருக்கும்படி வேண்டுகிறேன். வாஸ்தவத்தில் ஒரு நாள் எங்களிருவரையும், சாயங்கால டீக்காக மூன்று இடங்களிலும், அன்றிரவு போஜனத்திற்காக இரண்டு இடங்களிலும் அழைத்திருந்தனர்! நாங்கள் என்ன செய்வது? மிகுந்த பரிவுடன் அழைத்தவர்களுக்கு, வரமாட்டோம் என்று சொல்ல வாயெழவில்லை. ஆயினும், எப்படி இத்தனை இடங்களில் அவர்கள் செய்த விருந்தைச் சாப்பிடுவது? ஏதோ உடம்பு அசௌக்கியமாயிருப்பதாகச் சொல்லி, ஒவ்வொரு இடத்திலும் கொஞ்சம் கொஞ்சம் சாப்பிட்டோம்! இதன் பலன் என்னவென்றால் வாஸ்தவமாகவே, நான் நோயில் விழுந்தேன்! இதன் விவரம் பிறகு எழுதுகிறேன்.

அதற்கு முன், கொழும்பில் நாங்கள் நாடகமாடிய விஷயமாக இரண்டொரு விநோத சமாசாரங்களை எழுதுகிறேன். இம்முறை நாங்கள் லங்கைக்குப் போனபோது, எனது பால்ய சிநேகிதரும்,

என்னுடன் பிரஸிடென்ஸி காலேஜில் படித்தவருமான கே. ஆர். சீதாராமய்யர் பி. ஏ. பி. எல். வந்திருந்தார். அச்சமயம் அவர் போலீஸ் உத்தியோகத்திலிருந்தார். எம். சுந்தரேச ஐயருக்குப் பிறகு இவர் ஆங்கிலத்தில் முக்கியமான பாகங்களை யெல்லாம் எங்கள் சபையில் ஆக்டு செய்துகொண்டிருந்தார். ஷேக்ஸ்பியர் மகா நாடகக்கவி எழுதிய ஒதெல்லோ முதலிய பாத்திரங்கள் ஆடுவதில் மிகவும் சமர்த்தர், கம்பீரமான ஆகிருதியையும் உடையவர். இவரை முதல் நாள் மேடையின் மீது பார்த்தது முதல், கொழும்பு நாடகப்பிரியர்கள் இவருக்கு "சாண்டோ" என்று பெயர் வைத்தார்கள்! நாடகசாலை திறக்குமுன் உள்ளே நுழைவதற்காக ஏராளமான ஜனங்கள் வெளியிற் கூடிக் கூச்சலிடுவார்கள்; அப்போது இவரை அனுப்பினால், இவர் போய், 'கூச்சலிடக்கூடாது' என்று இவரது கம்பீரமான குரலுடன் சொன்னால், உடனே அடங்கி விடுவார்கள். உள்ளே வந்த பிறகும், நாடகம் ஆரம்பமாவதற்கு முன், காலரியில் ஜனங்கள் வழக்கம்போல் கூச்சலிட்டுக் கொண்டிருப்பார்கள்; கூச்சல் அதிகமாய்ப்போனால் இவரை உள்ளிருந்து நான் அனுப்புவேன். இவரைக் கண்டதும் 'கப்சப்' என்று அடங்கி விடுவார்கள்.

இவரது முதுகு திரும்பினால் "சாண்டோ! சாண்டோ!" என்று கத்துவார்கள்! திரும்பி அவர்களைப் பார்த்தாலோ, நிசப்தமாய்ப் போய்விடும்! இவர் இரண்டு மூன்று நாடகங்களில் மேடையின் மீது தோன்றிய பொழுது, காலரியில் இருந்தவர்களெல்லாம், மிகுந்த குதூஹலத்துடன் இவரை வரவேற்றனர்.

இம் முறை கூடுமான வரையில் முதன் முறை வந்தபொழுது ஆடிய நாடகங்களை ஆடாது புதிய நாடகங்களை ஆடவேண்டுமென்று நாங்கள் தீர்மானித்த போதிலும், கொழும்பு நேயர்கள், மனோஹரன் நாடகத்தை மாத்திரம் மறுபடியும் கட்டாயமாய் ஆடவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதன்படியே இதை இங்கு மூன்றாவது நாடகமாக வைத்துக்கொண்டோம். அதில் விஜயாளாக நடித்த என் தாருபிர் நண்பர் எல்லோருடைய மனதையும் கண்களையும் கவர்ந்தார் என்று நான் சொல்லவேண்டிய அவசியமில்லை. மறுநாள் சாயங்காலம் எங்களுடன் வந்திருந்த சூரிய நாராயணய்யா என்னும்

ஒரு மெம்பர், தன் சிநேகிதர்கள் சிலருடன், சாயங்காலம் கொழும்பில் ஏதோ சாமான்கள் வாங்குவதற்காகக் கடைத்தெருவிற்குப் போயிருந்தனர். அச்சமயம் ஏதோ கொஞ்சம் மழை பெய்ய, ஒரு ஷாப்பருகில் அவர் சிநேகிதர்களுடன் தங்க, சிற்றுண்டிவிற்கும் அந்த ஷாப்புக்காரன், அவர்களையெல்லாம் மிகவும் பரிவுடன் உள்ளே வரவழைத்து, அவர்களுக்கு வேண்டிய காபி, டீ, கேக்குகள், ஐஸ்கிரீம், முதலியனவெல்லாம் கொடுக்க, எல்லாம் சாப்பிட்டானவுடன், சூரிய நாராயண ஐயர், தாங்கள் சாப்பிட்டதற்காக ரூபாய்கொடுக்க, அதை வாங்கமாட்டேன் என்று மறுத்தார் அந்த ஷாப்புக்காரர்! 'ஏன் ரூபாய் வாங்கமாட்டேன் என்று சொல்லுகிறீர்?' என்று அவர் வினவ, அதற்கு அவர் "நீங்கள் தானே ரங்கவடிவேலு முதலியார், நேற்று பப்ளிக் ஹாலில் நாடகமாடியது? நீங்கள் இவ்வளவு தூரம் வந்து எங்கள் மனதையெல்லாம் திருப்தி செய்ததற்காக நான் இவ்வளவாவது உங்களுக்கு மரியாதை செய்ய வேண்டாமா?" என்று பதில் உரைத்தனராம்! இதை எனது நண்பர் தற்காலம் அட்வொகேட்டாயிருக்கும் சூரியநாராயணய்யாவே, நேரில் தெரிவித்தார். இதைச் சொல்லி, "நான் என்ன செய்வது மிஸ்டர் சம்பந்தம்? நான் எவ்வளவு சொல்லியும் அந்த ஷாப்காரர் நான்தான் ரங்கவடிவேலு என்று நினைத்துக்கொண்டிருக்கிறார். நானல்லவென்று எவ்வளவு சொன்னபோதிலும் ஏதோ வெட்கத்தினால்தான் அவ்வாறு கூறுகின்றேன் என்று எண்ணுகிறார்! சரி, ரங்கவடிவேலுவினால் எங்களுக்கெல்லாம் காசு செலவில்லாமலே லன்ச் (சிற்றுண்டி) கிடைத்தது" என்று நகைத்தார்.

இவ்விடத்தில் ஏற்பாட்டின் படி ஐந்து நாடகங்களையும் முடித்துக்கொண்டு, மறுநாள் காலை யாழ்ப்பாணம் பிரயாணம் புறப்பட வேண்டியிருக்க, அதற்கு முந்திய தினம், வழக்கம்போல் இரண்டு மூன்று விருந்துகள் சாப்பிட்டேன். நான் அன்றிரவு நித்திரைக்குப் போகும் பொழுது எனக்கொரு மாதிரியாயிருந்தது. அதைக் கவனியாது நித்திரை போனவன், இரவு இரண்டு மணி சுமாருக்கு விழித்துக்கொள்ள, உடம்பில் ஜ்வரம் இருப்பதைக் கண்டேன். அதிகமாய்ப் புசித்ததின் பலனை அனுபவிக்கிறோம், சரிதான், இந்த ஜுரத்துடன் யாழ்ப்பாணம் போய் எப்படி நாடகமாடப்போகி

ஜேம் என்னும் பெருங்கவலை என்னுட் புகுந்தது. காலை எழுந்த வுடன் வயித்தியரிடம் மருந்து வாங்கிக்கொள்ளவும் நேரமில்லாமற் போயிற்று; உடனே ரெயில் ஏறவேண்டி வந்தது. வரவர ஜுரம் அதிகரித்து, அன்று பகலெல்லாம் ரெயிலில் ஒன்றும் புசியாது படுத்திருந்தேன். இந்த புத்தி முன்பேயிருந்து, முன்னாள் இரவு லங்கணம் போட்டிருந்தேனாயின், நலமாயிருந்திருக்கும். குதிரை களவுபோன பிறகு லாயத்தை மூடியதுபோல், ஜுரம் வந்த பிறகு ஜாக்கிரதையாயிருந்து என்ன பலன்? சாயங்காலம் இருட்டிய வுடன் எங்கள் ரெயில் யாழ்ப்பாணம் போய்ச் சேர, ஸ்டேஷனில் யாழ்ப்பாணத்துப் பெரிய மனிதர்கள் எங்கள் சபையோரை வர வேற்க வந்திருந்தனர். நான் வண்டியைவிட்டு இறங்கியதுதான் எனக்கு ஞாபகமிருக்கிறது; நான் உடனே மூர்ச்சையானதாகப் பிறகு எனது நண்பர்கள் எனக்குத் தெரிவித்தனர். அதன்பேரில் என்னைத் தனியாக ஒரு வண்டியில் வளர்த்தி எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காருக்காகப் பிரத்யேகமாய் ஏற்படுத்தி யிருந்த விடுதிக்கு அனுப்பினார்களாம். அங்கு போன பிறகு தான் எனக்கு மூர்ச்சை நன்றாய்த் தெளிந்தது; அப்பொழுது என் தேக ஸ்திதியைப் பற்றி எனக்கு ஒரு கவலையுமில்லை; நாம் இப்படி ஜ்வரத்துடன் இருந்தால் இவ்விடத்தில் நாடகங்கள் எப்படி ஆடு வது என்பதே பெருங் கவலையாயிருந்தது. உடனே எனது நண் பர்கள் அவ்விடத்திய சிறந்த வயித்தியர் ஒருவரை வரவழைத்து என்னைப் பரிசோதித்தவுடன் அவரை நான் ஒரு கேள்விதான் கேட்டேன் "டாக்டர்! நாளைத்தினம் நான் நாடகமாட முடியுமா?" என்று. அவர் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "நாடகமா ஆட வேண்டும்? நான் உத்தரவு கொடுக்கும் வரையில் இந்தப் படுக் கையை விட்டு எழுந்திருக்காதே!" என்று கண்டிப்பாய் பதில் உரைத்தார். இனிப் பயனில்லை என்று ஈஸ்வரனைத் தியானித்து விட்டு உறங்கினேன். நான் உறங்குங்கால் நடந்த சமாசாரத்தை, மறுநாள் எனது நண்பர்களிடமிருந்து கேட்டறிந்தபடி இங்கு எழுதுகிறேன்.

சபை அங்கத்தினர் இருப்பதற்காக கண்டிராக்டரால் ஏற்படுத் தப்பட்ட வசதியானது, மிகவும் சிறியதாயும் மிகவும் அசௌகர்ய

மானதாயும் இருந்ததாம்; வெளிக்குப் போவதற்குக்கூடப் பிரத்யேகமான இடமில்லாதிருந்ததாம்; அதன் பேரில் எனது நண்பர்களாகிய ஆக்டர்களெல்லாம் ஒருங்குகூடி, "சம்பந்தத்திற்கோ உடம்பு மிகவும் அசௌக்கியமாயிருக்கிறது; நாம் இருப்பதற்குக் கூட வீடு சரியாயில்லை; இப்படிப்பட்ட கண்டிராக்டர் நமக்கு மற்ற சவுகர்யங்களையெல்லாம் சரியாகப் பார்ப்பான் என்பது மிகவும் சந்தேகமான விஷயம்; ஆகவே, ஆட்டங்களை நிறுத்திவிட்டு, கண்டிராக்டர் கொடுத்த தொகையை அவனுக்கு வாபீசு செய்து விட்டு, நாளை ஒருநாள் தங்கி, மறுநாள் நாம் திரும்பிப் போவோம்" என்று தீர்மானித்தார்களாம். இப்படித் தீர்மானிப்பதற்கு முதன்மையாயிருந்த எனது நண்பர் சத்யமூர்த்தி ஐயர் அவர்கள், உடனே, சபையின் நிர்வாக சபை மெம்பர்களுக்கு, மேற்கண்ட விஷயங்களை யெல்லாம் எழுதி, மற்றவர்களைக் கையொப்பமிடச் செய்து, அனுப்பினாராம். அது சபையின் வைஸ் பிரஸிடெண்டாக இருந்த வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காருக்கு வந்து சேர, அதன் பேரில் அவர், "நீங்கள் சொல்வதென்னமோ வாஸ்தவம் தான். ஆயினும், நாம் அவசரப்பட்டு ஒன்றுஞ் செய்யலாகாது. சம்பந்தத்திற்கு 102 டிக்ரிக்கு மேல் ஜ்வரம் இருக்கிறது; இப்பொழுதுதான் மறுபடியும் டாக்டர் வந்து போனார், அவன் தூங்கிக் கொண்டிருக்கிறான். அவனது தூக்கத்தை இப்பொழுது கலைப்பது சரியல்ல. பொழுது விடிந்தவுடன் நாளை எல்லாவற்றையும் சாவகாசமாய்த் தீர்மானிப்போம்" என்று அக்காகிதத்தின் மீது பதில் எழுதித் தெரிவித்தார். (இக்காகிதம் இன்னும் எங்கள் சபையில் இருக்கவேண்டும்.)

மறுநாள் காலையில் விழித்தவுடன் நிர்வாக சபையின் சப்கமிட்டி மெம்பர்களெல்லாம் என் படுக்கையைச்சுற்றி உட்கார்ந்திருந்தனர்! நான் என்ன சமாச்சாரம் என்று விசாரிக்க, மேலே குறித்த சமாசாரங்களை யெல்லாம் எனக்குத் தெரிவித்தனர். அதன்மீது நானும் எல்லாவற்றையும் யோசித்துப்பார்த்து, என் அசௌக்கியத்தையும் கருதி, அப்படியே செய்யலாமென்று ஒப்புக்கொண்டேன். உடனே இரண்டொருமணி நேரத்திற்கெல்லாம், சுகுண விலாச சபையார் இங்கே நாடகமாடப்போகிறதில்லையாம்; அவர்களுக்குத் தக்கபடி மரியாதை செய்யவில்லையென்று, அவர்

கள் கோபங்கொண்டு பட்டணம் திரும்பிப் போகிறார்களாம் என்று வதந்தியாகி விட்டது. இவ்வதந்தி, அச்சமயம் யாழ்ப்பாணத்தில் டிஸ்டிரிக்ட் ஜட்ஜ் ஆயிருந்த மிஸ்டர் பின்டோ என்பவருக்கும் எட்டியது. இவர் என்னுடன் நான்கு வருஷம் பிரசிடென்சி காலேஜில் ஒன்றாய்ப் படித்தவர். இந்நான்கு வருஷங்களும் நாங்கள் மிகுந்த சினேகிதர்களாய் இருந்தோம். பிறகு அவர் சென்னையை விட்டுச் சிலோன் சிவில் சர்விஸ் பரீட்சையில் தேறினவராய், லங்கையில் உத்யோகத்தில் அமர்ந்தார். தெய்வாதீனத்தால் நாங்கள் யாழ்ப்பாணத்திற்குப் போனபோது அங்கு ஜட்ஜ் வேலையிலிருந்தார். இவரை விட்டுப் பிரிந்து 20 வருடங்களுக்கு மேலாயிற்று. இவர் என்னை மறவாதவராய், நான் யாழ்ப்பாணம் வந்திருக்கும் சமாசாரத்தையும் சுகுண விலாசசபையார் நாடகமாடாது திரும்பிப்போக வேண்டுமென்று தீர்மானித்ததையும் அறிந்தவராய், காலையில் கோர்ட்டுக்குப் போனவர், உடனே ஒருமணி நேரம் கோர்ட்டு வேலையை நிறுத்தி வைத்து, தன் அறைக்குப் போய், கோர்ட்டிலுள்ள அட்வொகேட்டுகளையெல்லாம் வர வழைத்தனராம். அவர்களில் ஒருவர் எனக்குப் பிறகு, நேராகக் கூறிய சமாசாரத்தை இங்கு எழுதுகிறேன். அவர்களை நோக்கி, "நடந்த சமாசாரம் எல்லாம் நான் கேள்விப்பட்டேன். எனது நண்பர் மிஸ்டர் பி. சம்பந்தம் மிகவும் அசௌக்கியமாக இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அக்காரணத்தினால் சுகுண விலாச சபையார், நாடகங்கள் ஆடாது நிறுத்துவதானால் நிறுத்தட்டும்; அதற்கு நாம் தடை சொல்லக்கூடாது. ஆயினும் அந்தச்சபையார், யாழ்ப்பாணத்தாராகிய நாம் அவர்களுக்குத் தக்கபடி மரியாதை செய்யவில்லை யென்று கோபத்துடன் திரும்பிப் போகாதபடிப் பார்த்துக்கொள்ளுங்கள். இதற்கு என்ன முயற்சி செய்ய வேண்டுமோ, அதைச் செய்யவேண்டியது உங்கள் கடமை. அதற்காக என்ன செலவானாலும் சரி; நான் பொறுப்பாயிருக்கிறேன்" என்று சொல்லி, ஆயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கை எழுதி அவர்களிடம் கொடுத்தாராம். அதன் பேரில் அவர்களெல்லாம், ரூபாய் ஒன்றும் வேண்டியதில்லை நாங்கள் பார்த்துக்கொள்கிறோம் என்று சொல்லி அந்தச் செக்கைத் திருப்பிக் கொடுத்து விட்டு, உடனே [illegible] தங்கியிருந்த சிறு வீட்டண்டை வந்து, வி. வி.

ஸ்ரீனிவாச ஐயங்கார் முதலியவர்களை வரவழைத்து, "நீங்கள் ஆட்டம் ஆடாமற் போனாற் போகிறது, நீங்கள் எத்தனை தினம் இங்கு இருப்பதாக முன்பு தீர்மானித்தீர்களோ, அத்தனை நாள் இவ்வூரில் எங்கள் விருந்தினர்களாயிருந்து, பிறகு தான் போகவேண்டும். உங்களுக்குத் தக்கபடி உபசரணை செய்யவில்லையென்று சொன்னால், அது யாழ்ப்பாண வாசிகளாகிய எங்களுக்குப் பெருத்த அவமானமாகும். கண்டிராக்டர் கிடக்கட்டும்; உங்களுக்கு என்னென்ன சவுகர்யங்கள் வேண்டுமோ சொல்லுங்கள்; அவற்றையெல்லாம் நாங்கள் ஏற்பாடு செய்யக் காத்துக்கொண்டிருக்கிறோம்" என்று தெரிவித்தார்களாம். இவ்வாறு அவர்களெல்லாம் மிகவும் வற்புறுத்தவே, எனது நண்பர்கள் அதற்கிசைந்து, "எங்களுக்கு வேறொன்றும் வேண்டியதில்லை; முக்கியமாக நாங்கள் தங்கியிருப்பதற்கு ஒரு சவுகர்யமான வீடு வேண்டும்" என்று சொல்ல, "இந்தப் பட்டணத்தில் காலியாயிருக்கும் வீடுகளில் உங்களுக்கு எது வேண்டுமோ பார்த்துச் சொல்லுங்கள்; அதை உங்களுக்கு ஏற்பாடு செய்கிறோம்" என்று தெரிவித்தார்களாம், அதன்பேரில் சபையார், 'நீங்களே பார்த்து ஏற்பாடு செய்யுங்கள்' என்று சொல்ல, அந்தத் தெருவிலேயே காலியாயிருந்த ஒரு பெரிய வீட்டை உடனே ஏற்பாடு செய்து, சபையார் அங்கு தங்கியிருப்பதற்கு வேண்டிய சவுகர்யங்களை யெல்லாம் அமைத்து, வேறொன்றும் வேண்டாம் என்று சொல்லியும் கேளாமல் அந்த வீடு நிரம்ப, நாற்காலிகள், மேஜைகள், சோபாக்கள் போட்டு, பால், தயிர், நெய், பதார்த்தங்களால் நிரப்பிவிட்டார்களாம்! இதைப்பற்றி இரண்டு நாள் கழித்து எனக்கு உடம்பு கொஞ்சம் சௌக்கியமானவுடன் நான் இவ்விடம் போய்ப் பார்த்தபொழுது, கண்டதை பிறகு எழுதுகிறேன்.

இவைகளையெல்லாம் செய்ததுமின்றி, எனக்கு வயித்தியம் செய்துகொண்டிருந்த வயித்தியருடன், யாழ்ப்பாணத்தில் சிறந்த பெரிய வயித்தியரையும் அழைத்துக்கொண்டு, மத்தியானம் சுமார் இரண்டு மணிக்குமேல் என்னை வந்து கண்டனர். அந்த இரண்டு வயித்தியர்களும் என்னைப் பரிசோதித்துப்பார்த்து, ஜ்வரம் கொஞ்சம் குறைவதாகக்கண்டு, நாளைக்குச் சரியாகப்போய்விடும் என்று

சொன்னார்கள். இது தான் சாக்கென்று, "ஆனால் நாளை இரவு நான் நாடகம் ஆடமுடியுமா?" என்று ஆவலுடன் கேட்டேன். இதற்கு எனது முதல் வயித்தியர், "எல்லாம் நாளைத்தினம் காலை வந்து பார்த்துச்சொல்கிறேன்" என்று சிரித்துக்கொண்டே பதில் உரைத்தார். பிறகு சாயங்காலத்திற் கெல்லாம், நான் கணக்குப் பிரகாரம் சாப்பிட்டுக்கொண்டுவந்த மருந்தினாலோ, என்ன காரணத்தினாலோ, ஜ்வரம் என்னை விட்டு, ஏறக்குறைய என் தேக உஷ்ணம் நார்மல் ஸ்திதிக்கு வரவே, அதைக்கண்ட எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு, மெல்ல என்னிடம் வந்து, "நாளைத்தினம், ஒரு சிறிய நாடகம் வைத்துக்கொள்ளலாமே? லீலாவதி-சுலோசனா முதலிய பெரிய நாடகங்கள் ஆடுவதென்றால் உங்களால் முடியாது, 'காலவ ரிஷி' சிறிய நாடகம், அதில் உங்களுக்குக் கடைசி இரண்டு காட்சிகளில் தானே வேலையிருக்கிறது. என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்க எனது நண்பர் இவ்விடம் நாடக மாடவேண்டுமென்று மிகவும் ஆவல் கொண்டிருக்கிறார் என்று கண்டவனாய், அதற்கிசைந்து, வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார், எனது தமையனார் ஆறுமுக முதலியார் முதலியவர்களை அழைத்து, நாளை இரவு காலவரிஷி" வைத்துக்கொள்ளுங்கள் என்று கூறினேன். அவர்களும், எனக்கு உடம்பு சௌக்கியமாகி வருவதைக்கேட்டு, சந்தோஷப்பட்டவர்களாகி, குதூகலத்துடன் 'அப்படியே செய்யலாம்' என்று சொல்லி, அதற்காக உடனே ஏற்பாடு செய்யும்படிக் கண்டிராக்டருக்குத் தெரிவித்தார்கள்.

மறுநாட்காலை என் வயித்தியர் என்னிடம் வந்து பரிசோதித்துப் பார்த்து "ஜ்வரம் விட்டு விட்டது; ஆயினும் மிகவும் பலஹீனமாயிருக்கிறது; ஆகவே நீ நாடகம் ஆடக்கூடாது" என்றார்! அதன் பேரில், அவரிடம் நான் நாடகம் ஆடாவிட்டால், நாடகமே நின்று விடும், ஆகவே, எப்படியாவது எனக்குக் கொஞ்சம் உத்தரவு கொடுங்கள்; நான் என்ன மருந்து வேண்டுமென்றாலும் சாப்பிடுகிறேன் என்று மன்றாடினேன். அதன் மீது அவர் "நான் சொல்லுகிற நிபந்தனைகளுக்கெல்லாம் உட்பட்டால் எனக்கு உத்திரவு கொடுக்கிறேன்" என்றார். நீங்கள் என்ன செய்யச் சொன்னாலும் செய்கிறேன், எனக்கு உத்திரவு மாத்திரம் கொடுத்தால் போது

பெனாக் கூற, "உன் பாகம் பன்னிரண்டுமணிக்கு தான் வருமென் கிறாயே, ஆகவே, பதினொருமணி வரையில் இங்கு நானிருக்க வேண் டும்; அது வரையில் மருந்து மணிப்பிரகாரம் சாப்பிட்டுக்கொண்டு வரவேண்டும்; பதினொரு மணிக்கு உன் படுக்கையுடன் நாடக சாலைக்குக் கொண்டு போகச் செய்யவேண்டும்; உன் உடம்பைக் கொஞ்சமேனும் அலட்டிக் கொள்ளக்கூடாது" என்று சொன்னார். எல்லாவற்றிற்கும் அப்படியே ஆகட்டும் என்று தலை அசைத்தேன். எதற்கும் நான் சாயங்காலம் வந்து பார்த்துவிட்டுப்போகிறேன் என்று சொல்லி விட்டுப்போனார். வைத்தியர் இவ்வாறு உத்தரவு கொடுத்த பிறகு தான், யாழ்ப்பாணம் வந்தபிறகு முதல் முதல் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு முகத்தில் சந்தோஷக்குறி தோன் றியது! யாழ்ப்பாணத்தில் எப்படியாவது தான் நாடகம் ஆடிக் கொழும்பில் பெயரெடுத்தது போல் இங்கும் எடுக்கவேண்டுமென்று அவ்வளவு ஆசை கொண்டிருந்தார் அவர்!

அன்றைத்தினம் சாயங்காலம் எங்கள் சபையின் வழக்கம் போல் ஐந்து மணிக்கெல்லாம் ஆக்டர்களெல்லாம் சாப்பிட்டு விட்டு, வேடம் பூணுவதற்காக நாடகக் கொட்டகைக்குப் போய்விட்டனர். என்னடா கஷ்டம்! நாம் மாத்திரம் இங்கு தனியாக ஜெயிலில் அடைபட்டிருப்பதுபோல இருக்கவேண்டி வந்ததே என்று முக்கால் அழுதுகொண்டிருந்தேன். ஆறு, ஏழு, எட்டு மணிவரையில் பொறுத்துப் பார்த்தேன். அப்புறம் என்னால் பொறுக்கமுடியாது, மெல்ல ஒரு ஆளை கண்டிராக்டர் வீட்டிற்கனுப்பி, எனக்கு நன்றாய் முழுவதும் மூடப்பட்ட ஒரு கோச்சு வண்டியைக் கொண்டுவரச் சொல்லி, அதில் ஏறிக்கொண்டு இரகசியமாய் நாடகக் கொட்டகை யின் பின்பக்கமாக, எனது நண்பர்கள் வேஷம் பூணும் அறைக்குப் போய்ச்சேர்ந்தேன். நான் உள்ளே பிரவேசித்தவுடன் எனது நண்பர்களெல்லாம், நான் வந்துவிட்டேனென்று சந்தோஷத்தினால் ஆரவாரித்தனர். இந்த சப்தம் வெளியிற் கேட்க, நாடகம் பார்ப் பதற்காக அங்கு உட்கார்ந்திருந்த என் வைத்தியர் "எதற்காக இக் கூச்சல்?" என்று கேட்டறிந்தவராய், உள்ளே விரைந்து வந்து என்னைப் பார்த்து மிகுந்த கோபத்துடன், "உன்னை யார் இதற்குள் ளாக வரச்சொன்னது?" என்று கேட்டார். நான் "டாக்டர், என்

மீது கோபம் கொள்ளாதீர்கள்! நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். பிறகு என்மீது கோபம் கொள்ளவேண்டுமென்று உங்களுக்குத் தோன்றினால் அப்படியே செய்யுங்கள். எனது நண்பர்களெல்லாம் இங்கிருக்கும்போது, என்னால் வீட்டிலடைபட்டிருக்க முடியவில்லை; இந்த ஏக்கத்துடன் அங்கு இன்னும் இரண்டு மூன்று மணி நேரம் தங்கியிருந்தேனாயின், இதனாலேயே, போன ஜ்வரம் திரும்பி வரும்போலிருந்தது; ஆகவே, மெல்ல, முற்றிலும் மூடிய வண்டியொன்றில் ஏறி வந்து விட்டேன்! என்னை மன்னியுங்கள்!" என்று பதில் சொன்னேன்.

அவர் என்னை மறுபடியும் பரிசோதித்துப் பார்த்து, "ஜ்வரம் எல்லாம் ஒன்றும் இல்லை, ஆயினும் மிகவும் பலஹீனமாயிருக்கிறது; உன்னுடைய நன்மைக்காகத்தான் சொல்லுகிறேன்; ஒருவேளை மறுபடியும் உனக்கு ஜ்வரம் வந்தால், இன்னும் இரண்டு நாடகங்களில் நீ எப்படி ஆடக்கூடும்? நாங்களும் உன் ஆட்டத்தைப் பார்க்க முடியாதே; அதற்காகத்தான் சொன்னேன்; இப்பொழுதாவது நான் சொல்லுகிறபடிக் கேள். இந்த சோபாவின் மீது படுத்துக்கொள், உன் பாகம் வருகிறவரையில் அதை விட்டு எழுந்திருக்காதே; உன் வயித்தியர் உத்திரவை நீ மீறலாகாது." என்று சொல்லி விட்டுப் போனார்.

அவர் வெளியே போனதும், அந்த சோபாவை சைட்படுதா பக்கமாகக் கொண்டுபோய்ப் போடச்சொல்லி, மேடையில் நடப்பதையெல்லாம் பார்க்கவேண்டி அங்கு போய்ப் படுத்துக்கொண்டேன். அப்படி நான் படுத்தபடியே, அம்பட்டன் எனக்கு முக க்ஷவரம் செய்ய, பிறகு என் நண்பர் வெங்கடாசல ஐயர் அப்படியே எனக்கு முகத்தில் வர்ணம் தீட்டி, வேஷம் போட்டு வைத்தார்! இன்னும் ஈச்வரன் கிருபையால், நான் வேஷம் பூணத்தக்க காலம் சில வருஷங்கள் தான் இருக்கிறதென நினைக்கிறேன்; அது முடிவு பெறும் வரையில் இப்படிப்பட்ட சம்பவம் எனக்கு நேரிடாதிருக்குமென ஈசனைப் பிரார்த்திக்கிறேன். யாழ்ப்பாணத்தில், கொழும்புவிலிருந்தது போல் ஜனங்கள் ஏராளமாக வருவது அசாத்தியம் என்பது போய், நான் நாடகசாலைக்குப் போய்ச் சேருமுன்னமே

கொழும்பு டவுன் ஹாலைப்பார்க்கிலும் இரண்டு பங்கு பெரிதாய் நிர்மிக்கப்பட்ட அக்கொட்டகை நிரம்பி யிருந்தது! அன்றைத்தினம் வசூல் 1000 ரூபாய்க்கு மேலாகியது என்று கேள்விப்பட்டேன். உட்கார இடமில்லாமல் அனேகர் பணம் கொடுத்தும் நின்று கொண்டிருந்தனர். இவ்வண்ணம் ஏராளமான ஜனங்கள் தாங்கள் ஆடுவதைப் பார்க்க வந்திருக்கிறார்கள் என்று அறிந்ததும் எனது நண்பர்கள் மிகவும் குதூஹலத்துடன் வெகு விமரிசையாக அந்நாடகத்தை நடித்தனர். சாதாரணமாக, இதையே ஜீவனமாகக்கொண்டு நடகமாடும் ஆக்டர்களைத் தவிர்த்து, விநோதத்திற்காக ஆடும் அமெசூர்கள், நாடக வரும்படியைப்பற்றிக் கவனிக்க வேண்டிய நிமித்தியமில்லை இதை நான் எனது நண்பர்களுக்குப் பன்முறை வற்புறுத்தியிருக்கிறேன். ஆயினும் எவ்வளவு கற்றறிந்தவர்களாயிருந்தபோதிலும், சபை நிறைய ஜனங்கள் கூடியிருக்கும்போது ஆக்டு செய்வது ஒருவிதம் தான்; ஜனங்களே யில்லாமல், பத்து பதினைந்து பெயர் உட்கார்ந்திருக்கும் பொழுது அவர்களுக்கு எதிரில் ஆக்டு செய்வது ஒருவிதம் தான், இம்மாதிரி புத்திமான்கள் வித்தியாசப் படுத்தக்கூடாது வாஸ்தவம் தான்; ஆயினும் மனித சுபாவத்தை யாரால் மாற்ற முடியும்?

நாடகமானது மிகவும் அழகாய் நடிக்கப்பட்டபோதிலும், அந்நாடக மேடையைப் போல் ஆபாசமான நாடக மேடையை நான் இதுவரையிலும் பார்த்ததுமில்லை; இனியும் பார்க்கபோகிறதுமில்லையென்று நம்புகிறேன்! அதைச் சற்றிங்கு விவரிக்கின்றேன். இந்நாடகத்தில் முதற் காட்சி இந்திரன் சபையாகும். அதில் எனதாயிர் நண்பர் சி. ரங்கவடிவேலு, அப்சர ஸ்திரீயாக நாட்டியமாட வேண்டியிருந்தது. ரங்கத்தில் பரப்பப்பட்ட மாம்பலகைகள் ஒழுங்காய்க்கூட இல்லை; ஒன்றின்மேலொன்றாய் வைத்துக் கட்டப்பட்டிருந்தது! இதைக் கண்டு அவர், 'இம்மேடையின் மீது நான் எப்படி நடனம் செய்வது?' என்று ஆட்சேபிக்க, அதன் மீது வைக்கோலைக் கொண்டுவந்து பரப்பி, அதன்பேரில் கோணிகளைப் பரப்பிவைத்தார் கண்டிராக்டர்! இதன்மேல் நின்று எனது நண்பர், தடுக்கிக் கீழே விழாமல், அன்றிரவு, கால்மணி சாவகாசத்திற்கு மேல் எப்படி நர்த்தனம் செய்தனர் என்பது இன்றளவும் எனக்கு

ஆச்சரியமாயிருக்கிறது. அன்றியும் ரங்கத்தில் வெளிச்சம் போதாமலிருந்தது; இன்னும் இப்படிப்பட்ட பல கஷ்டங்களிலிருந்தன; இருந்த போதிலும் நாடகமென்னவோ நன்றாய் நடிக்கப்பட்டு, வந்திருந்தவர்களுடைய மனதையெல்லாம் கவர்ந்ததென நான் சொல்ல வேண்டும். மற்ற பக்க உதவி எவ்வளவு ஆபாசமாயிருந்தாலும் நடிப்பவர்கள் முழுமனதுடனும் குதூஹலத்துடனும் சரியாக நடித்ததால், அக்குறைகளையெல்லாம் மறக்கடித்து, சபையோரைக் களிக்கச் செய்யும் என்பதினுண்மையை இம்மேடையில் தான் கண்டேன்.

சுமார் பன்னிரண்டு மணிக்குமேல் நான் நடிக்கவேண்டிய இரண்டு கடைசி காட்சிகள் வந்தன. முதல் முதல் ஏதாவது புதிய நாடகத்தில் ஆடுவதென்றாலும், அல்லது முதன் முதல் ஒரு புதிய ஊரில் ஆடுவதென்றாலும் எனக்குக் கொஞ்சம் பயமுண்டு என்று எனது நண்பர்களுக்கு நான் முன்பே தெரிவித்திருக்கிறேன் என்று நினைக்கிறேன். நான் வரவேண்டிய காட்சி வந்தவுடன், மேற்சொன்ன பயத்தினாலும், ஜ்வரம் கண்டிருந்த தேகத்தின் பலஹீனத்தினாலும், என் மார்பு பட பட வென்று துடிக்க ஆரம்பித்தது; அதை மெல்ல சமாளித்துக் கொண்டு இந்நாடகத்தில் ஆடும்படியாக இவ்வளவாவது கருணை புரிந்தாரே ஈசன் என்று அவரை மனதிற்குள் போற்றி விட்டு, என் பாகத்தை ஆரம்பித்தேன். நான் ரங்கத்தில் தோன்றுமுன், உள்ளிருந்து, சுபத்திரை அறியும்படியாக, அர்ஜுனனாகிய என் குரலைக் காட்ட வேண்டியிருக்கிறது. என் வழக்கப்படி, “அப்படியா சமாசாரம்! இதை ஏன் எனக்கு முன்பே தெரிவிக்கவில்லை?” என்று அப்பொழுதிருந்த தேகஸ்திதியில் என்னாலியன்றவளவு உரக்கக் கூச்சலிட்டேன். அந்தச் சப்தத்தைக் கேட்டவுடன் சபையிலிருந்த கூச்சல் அடங்கி விட்டது. நான் ரங்கத்தில் தோன்றியது முதல், அந்த இரண்டு காட்சிகளிலும் நடித்தது ஏதோ எனக்குக் கனவு கண்டது போலிருக்கிறது. முதற் காட்சியில் நான் நின்று கொண்டே பேசவேண்டும்; ஆயினும் ரங்கத்தில் தோன்றிய உடன் என் கால்கள் தள்ளாட ஆரம்பித்தன! வயித்தியர் என் உடம்பின் பல ஹீனத்தைப் பற்றிக் கூறியதினுண்மையை அப்பொழுது தான் அறிந்தேன்! உடனே சுபத்திரையின் படுக்கையில் உட்கார்ந்து கொண்டு, கடைசி வரையில் நான் பேச

வேண்டியதையெல்லாம் உட்கார்ந்து கொண்டே பேசினேன்! இது தவறுதான். ஆயினும் சிறக தேகசக்தி யில்லாதவன் வேறு என்ன செய்யக்கூடும்?

இந்நாடகத்தில் அர்ஜுனன் வேஷம் ஆடுவதில் ஒரு முக்கிய மான கட்டம் உண்டு; அதாவது சுபத்திரை தன்னை வசப்படுத்த வயிற்று நோயால் வருந்துவது போல் பாசாங்கு செய்தாள் என்று அர்ஜுனன் அறிந்தவுடன், அவள் பக்கம் திரும்பி 'சுபத்திரை!' என்று ஒரு வார்த்தை கூறுகிறான். இந்த வார்த்தையை வெறும் கோபத்துடனும், சொல்லக்கூடாது; வெறுங் காதலுடனும் சொல்லக்கூடாது; வெறும் வருத்தத்துடனும் சொல்லக் கூடாது. சுபத்திரை தன்னை மோசம் செய்தாளே என்னும் கோபம் கொஞ்சம் இருக்க வேண்டியது தான்; அவ்வாறு தன்னை மோசம் செய்தவள் தன்னுருயிர்க் காதலியென்பதையும் மறக்கக்கூடாது, எப்படியிருந்த போதிலும் இதனால் பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் போர் புரிய நேரிடுமே, என்னும் துக்கத்தையும் காட்டவேண்டும். இந்த மூன்று ரசங்களையும் அந்த ஒரு பதத்தை உச்சரிப்பதில் அடக்கி நடிக்க வேண்டும். நான் இதை எழுதிய போது இந்த ரஸப்பூர்த் தியை அறிந்தவனன்று; ஏதோ அப்படி எழுதவேண்டுமென்று தோன்றி எழுதிவிட்டேன். முதன் முறை இந்நாடகத்தை சென் னையில் நான் நடித்தபொழுது, "சுபத்திரை!" என்று நான் திரும்பி அவளைப் பார்த்தபொழுது, சபையார் கரகோஷம் செய்து சந்தோ ஷித்த பொழுதே, அதன் மஹிமையை அறிந்தேன்! சில்பி ஒருவன் ஏதோ தன் மனம் போனபடி ஏதோ சிலையைச் செதுக்கி விடுகிறான், மற்றவர்கள் அதைப்பார்த்து, அதிலுள்ள ஓர் விசித்திரமான வேலை யைக் கண்டு சந்தோஷிக்கும் போதுதான், அவனுக்கும் அதன் அழகு தெரிகிறது! இந்த அர்ஜுனவேடம் நான் பன்முறை பூண்டு, பலநாடகமேடைகளின் மீது ஆடியிருக்கிறேன்; இது நான் முன்பே கூறியபடிச் சிறியபாகம், அர்ஜுனன் ரங்கத்தில் தோன்றும் காலம் முதல் 10 நிமிஷத்திற்கெல்லாம் நாடகம் முடிந்து போகிறது. ஆயி னும் இந்த ஒரு பதத்தை சரியாக நடிப்பதற்காக, இவ்வளவு வய தாகியும், இந்த வேடம் பூண விரும்புகிறேன்.

இதை ஒரு 'கட்டம்' என்று நான் கூறியதற்குக் காரணம், இவ்வேடம் பூணும் ஒவ்வொரு ஆக்டரும் இக்காட்சியில் இப்பதத்தைச் சரியாகச் சொல்லுகிறனு இல்லையா என்று பார்க்கவேண்டியிருப்பதனுல்தான். இதைச் சரியாகச் சொல்லிச் சபையோரின் மனதைச் சந்தோஷப்படுத்தினுல் ஆச்சுது, இல்லாவிட்டால், இப்பாத்திரத்தை அந்த வேஷதாரி கொலை செய்தான் என்றே கூற வேண்டும். இதைப்பற்றி நான் இவ்வளவு விரிவாக எழுதியதற்குக் காரணம், இந்நாடகமானது மிகவும் அதிகமாக அமெடூர் சபைகளிலும், நாடகக் கம்பெனிகளிலும் பன்முறை ஆடப்பட்டு, இந்த இடத்தில் அந்த வேஷதாரி ரசாபாசம் செய்ததை நான் பன்முறை கண்டு வருந்தி யிருக்கிறேன்; ஆகவே, இனி மேலாவது எனது இந்த நாடகத்தில் அர்ஜுனன் வேஷந்தரிக்க விரும்புவோர் இதைக் கவனித்து இந்தக் கட்டத்தில் தக்கபடி நடிப்பார்களாக.

நாடகம் முடிந்த க்ஷணமே, என் டாக்டர் உள்ளே வந்து உடனே என்னைக் கம்பளிப் போர்வை ஒன்றைப் போர்த்துக்கொள்ளச் சொல்லி, 'வீட்டிற்குப் போய் வேஷத்தைக் கழுவிப் படுத்துக்கொள்; இங்கே வெந்நீர் கிடைக்காது!' என்று சொல்லி, நான் வந்த வண்டியில் ஏற்றி அனுப்பி விட்டார். என் சொந்த பந்துக்களும் எனக்காக அவ்வளவு அன்பு பாராட்டுவார்களோ என்னவோ?

நான் வீட்டிற்கு வந்து கொஞ்ச நேரம் இளைப்பாறி விட்டு, வெந்நீர் கொண்டுவரச் சொல்லி, என் முகத்திலிருந்த வர்ணத்தைக் கழுவிக்கொண்டிருந்தபொழுது, நடந்த ஒரு சிறு வேடிக்கையை இங்கு எழுதுகிறேன். நோயுடன் இருந்த எனக்கு, வேண்டிய வேலைகளைச் செய்துகொண்டு என் பக்கத்திலேயே இருக்கும்படி எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார், பத்து பன்னிரண்டு வயதுள்ள ஒரு யாழ்ப்பாணத்துப் பையனை ஏற்பாடு செய்திருந்தார். அவன் நான் வந்தது முதல் படுத்த படுக்கையாய் ஜ்வரத்திலிருந்ததைக் கண்டவன்; நான் முகத்திலிருந்த வர்ணத்தைக் கழுவிக்கொண்டிருந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டவனுய், "எசமாங்கூட வேஷமா பொட்டுச்சி!" என்று, தன் கண் விழிமலரக் கேட்டான்! படுக்கையை விட்டு எழுந்திராத இந்த ஆசாமி எப்படி நாடகத்தில் ஆடினுன் என்று ஆச்சரியப்பட்டான் என்பது திண்

ணம். இவன் ஆச்சரியப்பட்டதுமன்றி, அந்நாடகத்தில் வந்திருந்தவர்களிற் பலர், (என்னை நேராக அறிந்த சிலர் தவிர) நான் ஆடவில்லை யென்று நினைத்தனர்களாம். அதற்கு ஒரு திர்ஷ்டாந்தம் இங்கு எழுதுகிறேன்.

அதைப்பற்றி எழுது முன், ஒரு சிறு விஷயத்தை இங்கு குறிக்க விரும்புகிறேன். நான் எழுதிவரும் இந்த "நாடகமேடை நினைவுகள்" வாரந்தோறும் படித்துவரும் எனது சில நண்பர்கள், 'அநேக வருடங்களுக்கு முன் நடந்த இந்தச் சமாசாரங்களெல்லாம் உனக்கு எப்படி ஞாபகமிருக்கிறது?' என என்னை வினவுகிறார்கள். அவர்களுக்கு விடை கொடுக்க விரும்புகிறேன். முதலாவது, மனிதனுக்கு நாற்பது வயதுக்கு மேல் ஞாபக சக்தி குறைந்து வருகிறதென்பது உண்மையாயினும், அநேக வருடங்களுக்கு முன் நடந்த சங்கதிகளெல்லாம் ஞாபக மிருக்கும்; சற்று முன்பாக நடந்தது தான் மறந்து போகிறது; இது சகஜம். இரண்டாவது ஒரு மனிதனுடைய ஞாபகத்தில் சில விஷயங்கள் என்றும் மறக்காதபடிப் பதிந்து போகின்றன. எனது நாடக மேடை அனுபவங்கள் என் மனதில் நன்றாய் மறக்கக் கூடாதபடிப் பதிந்து போய் விட்டன என்பதற்கு ஐயமில்லை. மூன்றாவது காரணம் எங்கள் சுகுண விலாச சபையை ஸ்தாபித்த நாள் முதல் அதைச் சார்ந்த எல்லாக் காகிதங்களையும் பத்திரமாக அடக்கம் செய்து வைத்திருக்கிறேன். அது இப்பொழுது, அநேக விர்த்தாந்தங்களின் தேதி முதலியவற்றைக் குறிப்பதற்கு மிகவும் உபயோகப்பட்டு வருகிறது. நான்காவது, இவைகளைப் பற்றி, நான் எழுதிக்கொண்டு வரும்பொழுது, இந்த விர்த்தாந்தங்களையெல்லாம் இப்பொழுது நான் மறுபடியும் அனுபவிப்பது போலிருக்கின்றதெனக்கு; அப்படி மனதினால் மறுபடியும் அனுபவித்து வரும்பொழுது, மறந்துபோன சில விஷயங்கள் புதிதாய் ஞாபகத்திற்கு வருகின்றன. இதற்கு ஒரு உதாரணமாக அந்த யாழ்ப்பாணத்துப் பையன் என்னைக் கேட்ட கேள்வி அன்று முதல் நேற்று நான் இதைப்பற்றி எழுதியவரையில் என் ஞாபகத்திலில்லை; அன்று நாடகமேடையை விட்டு வீட்டிற்குப் போன சமாசாரத்தை எழுதும்பொழுதுதான் புதிதாய் ஞாபகம் வந்தது!

'காலவரிஷி' ஆடிய மறுநாள் வேறொன்றும் நாடகம் வைத்துக்கொள்ளவில்லை. சாதாரணமாக வெளியூர்களில் ஒன்று விட்டொருநாள் தான் நாடகம் வைத்துக்கொள்வது எங்கள் சபை வழக்கமாகையால், மறுநாள் எங்களுக்கு விடுமுறையாயிருந்தது. சபையின் அங்கத்தினரையெல்லாம் எங்கள் யாழ்ப்பாணத்துப்புதிய நண்பர்கள் ஏதோ ஒரு இடத்திற்கு வனபோஜன விருந்துக்காக அழைத்துக்கொண்டு போய்விட்டனர். எனதுயிர் நண்பர் மாத்திரம் என்னைப் பார்த்துக்கொள்வதற்காக, என்னுடன் தங்கியிருந்தனர். அன்று காலை சுமார் 9 மணிக்கு என்னைக்காண என்பழைய சிநேகிதர் மிஸ்டர் பின்டோ வந்து சேர்ந்தார். அவரை நான் கடைசியில் பார்த்து, சுமார் 20 வருடங்களாயின வென்பதை முன்பே குறித்திருக்கிறேன். இத்தனை காலம் பொறுத்து, நாங்கள் இருவரும் சந்திக்கவே, எங்களுக்குப் பரஸ்பரம் உண்டான சந்தோஷம் கொஞ்சம் அல்ல; இதை இப்படிப்பட்டது என்று சொல்ல நான் அசக்தனாயிருக்கிறேன்; இதை வாசிக்கும் நண்பர்கள் யாராவது, சிறு வயதில் பள்ளிக் கூடத்தில் ஒருவருடன் மிகவும் அன்யோன்யமாயிருந்து, பிறகு அந்த நண்பனை விட்டுப் பிரிந்து, 20 வருடங்கள் பாராதிருந்து, பிறகு அகஸ்மாத்தாய் வேறொரு தேசத்தில் அவரைப் பார்க்கும்படி நேரிடுமாயின், அப்படிப்பட்டவர்களுக்குத் தான் எங்கள் மனோசந்துஷ்டி இப்படிப்பட்டதென்று தோன்றும்.

ஒன்பது மணிக்குப் பேச ஆரம்பித்தவர்கள், காலங்கழிவதையும் கவனியாமல், சுமார் பதினொருமணி வரையில் பேசிக்கொண்டிருந்தோம், நாங்கள் கலாசாலையை விட்டுப் பிரிந்தது முதல், ஒவ்வொருவருக்கும் நேர்ந்த விஷயங்களை யெல்லாம் பற்றி! அவர் அப்பொழுது சொன்ன முக்கியமான விஷயம் ஒன்று எனக்கு இன்னும் நன்றாய் ஞாபகமிருக்கிறது. "சம்பந்தம்! நீ பூண்டிருந்த வேஷத்தில், நீ நாடகமேடைக்கு வந்த பிறகுப், கொஞ்சநேரம் உன் முகஜாடையைக்கண்டு பிடிக்க முடியவில்லை; ஆயினும், நீ மேடைக்கு வருமுன், ஏதோ பேசினாயே? அக்குரலைக் கேட்டவுடன், உன் பழய ஞாபகம் வந்து, இன்னானெனக் கண்டு பிடித்து விட்டேன்! ஞாபகமிருக்கிறதா? நாம் கலாசாலையில் வாசித்த பொழுது உன் தமிழ் உபாத்தியாயர், தமிழ் வசன பாடங்களை யெல்லாம் உன்னைத்தான் உரக்கப் படிக்கச் சொல்வார்; அவருடைய

மெல்லிய குரலும், உன்னுடைய கம்பீரமான குரலும், நான் மறக்க வில்லை; ஆகவே, உன் குரலைக் கேட்டவுடன் உன்னைக் கண்டுபிடித்து விட்டேன்'" என்று சொல்லி நகைத்தார். பைபிளில் கிறிஸ்தவர்கள் சாதாரணமாக உச்சரிக்காத ஒரு பேர்வழி, என்ன வேடம் பூண்டாலும் பிளவையுடைய தன் காலை மாத்திரம் மறைக்க முடியாது என்று ஒரு கதை உண்டு; அம்மாதிரியாக, நான் எந்த வேஷம் பூண்டாலும் என்னை அறிந்த நண்பர்கள், என் குரலினால் என்னை எப்படியாவது கண்டு பிடித்து விடுகிறார்கள்!

அன்றைத்தினம் சாயங்காலம் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு என்னுடன் பேசிக்கொண்டிருந்தபொழுது, "உங்களுக்கு உடம்புதான் கொஞ்சம் சுமாராக இருக்கிறதே; எந்நேரமும் படுக்கையிலேயே படுத்திருந்தால் நல்லதல்ல; கொஞ்சம் உலாவினால் நல்லது; நாங்கள் எல்லாம் தங்கியிருக்கும் புதிய வீடு, அருகாமையில் தானிருக்கிறது. அங்கே நடந்து போவோம் வாருங்கள்" என்று சொல்ல, அதற்கு நானிசைந்தேன்.

ஒரு போர்வையைப் போர்த்திக்கொண்டு, அங்கு மெல்ல நான் அவருடன் நடந்துபோக, வீதியிற் புறப்பட்டவுடன் யாரோ இரண்டு யாழ்ப்பாணத்து வாசிகள் எங்களைப் பின் தொடர்ந்தனர்; இதை யாரோ வீதியிற் போகிறவர்கள் என்று நாங்கள் அவ்வளவாகக் கவனிக்கவில்லை; பிறகு சபை தங்கியிருந்த வீட்டிற்குள் நுழைந்தபொழுது, அவர்களும் எங்களுடன் நுழையவே, இவர்கள் யாரென்று திரும்பிப்பார்க்க, அவர்களுள் ஒருவன் மெல்ல எங்கள் அருகில் வந்து, 'ஐயா எங்களை மன்னிக்க வேண்டும், உங்களை ஒரு கேள்விகேட்கலாமோ?' என்று நபத்துடன் கேட்க, "சுகமாய்க் கேட்கலாம்" என்று நாங்கள் பதில் உரைத்தோம். அதன்மீது அவன் "நீங்கள் சுகுண விலாச சபையைச் சார்ந்தவர்கள் தானே? நேற்றைத்தினம் இரவு நாடகத்தில், இதோ என்னுடன் வந்த எனது நண்பர், 'சம்பந்த முதலியார் ஆடவில்லை யென்கிறார்; நான் ஆடினார்,' என்று சொல்லுகிறேன்; எங்களில் யார் கூறுவது சரியென்று நீங்கள் தீர்மானிக்க வேண்டும்" என்றான். அதன் மீது நான் "நீங்கள் கூறினது தான் சரி" என்று சொல்ல, அம்மனிதன் போகுமுன் இரண்டு மூன்றுமுறை என்னை உற்று உற்றுப் பார்த்து

விட்டுப்போகப் புறப்பட, எனது நண்பர் சி. ரங்கவடிவேலு நகைத்து விட்டார். அதன் பேரில், "நான் தான் சம்பந்தம்" என்று சொன்னேன். அதற்கு அம்மனிதன் "மிகவும் சந்தோஷம்; நானும் அப்படித்தான் சந்தேகித்தேன்; ஆயினும், எப்படி நேராகக் கேட்பது என்று சங்கோசப்பட்டேன். மன்னிக்கவேண்டும்" என்று சொல்லி விடைபெற்றுப் போனான்.

மறுநாள், "சாரங்கதர நாடகம்" வைத்துக்கொண்டோம். 'சித்ராங்கி'யாக நடிப்பதில் மிகவும் பிரசித்தி பெற்றிருந்த எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு, வந்திருந்தவர்களின் மனதை யெல்லாம் கவர்ந்தனர் என்று நான் இங்கு எழுத வேண்டியதில்லை. நாடக மேடைக்கு கோணியை எடுத்து விட்டு ஒரு ஜமக்காளம் போட்டார்கள். வெளிச்சங்களும் முதல் நாளிருந்ததை விட நன்றாக அமைக்கப்பட்டன. கொட்டகையில் இடமில்லாதபடி நிறைந்திருந்த ஜனங்கள் ஆதி முதல் அந்தம் வரையில் நாடகத்தைப் பார்த்துச் சந்தோஷித்தனர் என்று சொல்வது அதிகமாகாது. சித்ராங்கியின் பாத்திரத்திற்குப் பிறகு, சுந்தரகன் மதுரகவி வேடங்கள் சபையோரை மிகவும் சந்தோஷிக்கச் செய்தன. நானும், முதல் நாடகத்தில் நமக்குள்ள கொஞ்சம் திறமையைக் காட்ட முடியாமற் போயிற்றே என்று இந்நாடகத்திலாவது சுத்தமான தமிழ் பாஷைக்கு ஓர் அடைக்கல ஸ்தானமாக நிற்கும் யாழ்ப்பாணத்தில், அதைக் காட்ட வேண்டுமென்று விரும்பினவனாய், நன்றாய் நடிக்க முயன்றேன். ஆயினும், புறாவிடுகிற காட்சியில், முற்றிலும் நின்று கொண்டே பேசவேண்டியவன், பலஹீனத்தினால் நிற்க முடியாமல், ஒரு நாற்காலியை மேடை மீது போடச்சொல்லி, அதில் உட்கார்ந்து கொண்டே பேசவேண்டியதாயிற்று. அப்பொழுது இப்படி நேர்ந்ததே என்று நான் என் மனதிற்குள்பட்ட வருத்தம் கொஞ்சம் அல்ல. இதை வாசிக்கும் எனது நண்பர்களாகிய ஆக்டர்கள், நாடகமேடையில் தாங்கள் நடிக்க வேண்டும் என்னும் எண்ணம் தங்களை விட்டு அகலும் வரையில் முக்கியமாகத் தங்கள் தேகத்தை நோய் நொடி வராதபடிக் காப்பாற்றிக் கொள்வார்களாக. ஒருவன் எவ்வளவுதான் கெட்டிக்காரனான ஆக்டராயிருந்த போதிலும், உடம்பு அசௌக்கியமாயிருந்தால் அவனால் என்ன செய்யக்கூடும்!

உடனே மறுநாள், ராத்திரி நாடகம் வைத்துக்கொள்ள முடியாதென்று சொல்லி, சாயங்காலம் 5½ மணிக்கு ஆரம்பித்து 8½ மணிக்குள்ளாக முடிக்கத்தக்க சிறு நாடகமாகிய "நற்குல தெய்வம்" என்பதை வைத்துக்கொண்டோம் இது ஒரு சிறு நாடகமாகையாலும், இதில் எனக்கு அதிக பாகமில்லாத படியாலும், அதிகக்கஷ்ட மில்லாமல் இதில் ஆடி முடித்தேன். நாடகம் ஆனதும், எங்கள் சபை மங்களம் பாடுமுன் ரங்கத்தின் முன் வந்து நான் யாழ்ப்பாணத்து வாசிகள் எங்கள் சபைக்குச் செய்த எல்லா உதவிக்காக எங்கள் சபையின் வந்தனத்தைச் செலுத்தி விட்டு, வீடு போய்ச் சேர்ந்து, யாழ்ப்பாணத்தில் அடியெடுத்து வைத்த போது நாம் இங்கு ஒரு நாடகமாவது ஆடப்போகிறோமா என்று திகிலடைந்த நான், மூன்று நாடகங்களை யாழ்ப்பாணர்கள் மனமகிழ முடிக்கச் செய்த ஈசன் பேரருளைப் போற்றி விட்டு உறங்கினேன்.

மறுநாள் காலை, நாடக மாடிய இளைப்பினால் அயர்ந்து நித்திரை செய்து, கொஞ்சம் நேரம் பொறுத்துக் கண் விழித்த நான், என் படுக்கையைச் சுற்றி, யாழ்ப்பாணத்து பெரிய மனிதர்கள் நான்கைந்து பெயரும், வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார், ரங்கவடிவேலு முதலிய சபையின் நிர்வாக சபை அங்கத்தினரும் உட்கார்ந்திருக்கக் கண்டேன். நான் அதிகமாகத் தூங்கினதற்கு அவர்கள் மன்னிப்பைக் கேட்டு விட்டு, 'என்ன விசேஷம்?' என்று நான் அவர்களை வினவ, யாழ்ப்பாண வாசிகளில் ஒருவர் (அவர் முத்துக்குமரு முதலியார் என்று நினைக்கிறேன்) "நாங்கள் எல்லாம் உங்களுக்குக் கொஞ்சம் கஷ்டம் கொடுக்க வந்திருக்கிறோம். யாழ்ப்பாணத்துக் கலாசாலைக்காகவும் யாழ்ப்பாணத்துத் தேகப் பயிற்சி சபைக்காகவும், சுகுண விலாச சபை ஒரு நாடகம் போட்டு அதன் வரும்படியை உதவவேண்டுமென்று உங்கள் சபையாரைக் காலை கேட்டோம். அவர்களெல்லாம் நீங்கள் சம்மதித்தால் வேறு ஆட்சேபணையில்லை யென்று சொல்லுகிறார்கள். ஆகவே, உங்களால் தானிருக்கிறது. நீங்கள் ஆம் என்றால் நிறைவேறிவிடும் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார். அதன்பேரில், 'இதென்னடா இது; கஷ்டமெல்லாம் தீர்ந்தது என்றிருந்தோமே, இது ஒன்று இப்பொழுது வந்து முளைத்ததே!' என்று எண்ணினவனாய் என்

றைக்கு நாடகம் போடுகிறது என்று கேட்க, இன்று சாயங்காலம் என்று பதில் உரைத்தார்கள்; அப்பொழுது ஏறக்குறைய எட்டரை அல்லது ஒன்பது மணியிருக்கும்; இன்றிரவு நாடகம் வைத்துக்கொண்டால், சாயங்காலத்திற்குள்ளாக எப்படி நாடக விளம்பரம் முதலிய வெளியாவது, ஜனங்களுக்கெல்லாம் எப்படித் தெரிவது? என்று ஆக்ஷேபித்துப் பார்த்தேன். (வாஸ்தவத்தில் என் தேக ஸ்திதியைக் கருதினவனாய், எப்படியாவது இதினின்றும் தப்பித்துக் கொள்ள வேண்டுமென்பதே என் கருத்தாயிருந்தது.) அதற்கு அவர்கள் "அந்தச் சமாசாரங்களைப் பற்றி உங்களுக்குக் கவலை யேன்? அதையெல்லாம் நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம். அது எங்கள் பொறுப்பு. அவற்றைப்பற்றி உங்களுக்குக் கவலைவேண்டாம். நாடகமாடுவதாக நீங்கள் சம்மதியுங்கள்!" என்று வற்புறுத்தினார்கள். அதன்பேரில் இவ்வளவு பல வந்திக்கிறார்களே நமது நண்பர்கள் என்று சற்று இணங்கினவனாய், என்ன நாடகம் போடுவது என்று கேட்டேன். அதன் பேரில் "லீலாவதி—சுலோசனா உங்கள் சபை நாடகங்களில் ஒருமிகச் சிறந்தது என்று கேள்விப் பட்டிருக்கிறோம்; அதில் உங்களுக்கு மனோஹரன் நாடகத்தைப் போல்—அதிகச் சிரமமில்லையென்று கேள்விப்படுகிறோம். ஆகவே அதைப்போடச் சம்மதிக்க வேண்டும், உங்கள் சபையின் மற்ற ஆக்டர்களெல்லாம் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் ஒருவர் தான் பாக்கி. நீங்கள் சம்மதித்தால் உடனே ஏற்பாடு செய்து விடுகிறோம்" என்று சொன்னார்கள்.

நான் மெல்ல என் தலையைத் திருப்பி ரங்கவடிவேலுவைப் பார்த்தேன். என்னுயிர் நண்பனது புன்னகையினால் தனக்கு இது மிகவும் விருப்பமென்றும், இந்நாடகத்தைப் போடலாமென்று யுக்தி சொல்லிக்கொடுத்தது தான்தானென்றும் கண்டேன். அதன் மீது இதென்னடா தர்ம சங்கடமாய் வந்திருக்கிறது என்று சற்று யோசித்து, "நான் ஒருவார்த்தை சொல்லுகிறேன். அதற்காக நீங்கள் எல்லோரும் மன்னிக்க வேண்டும்; என்னுடைய பழய வயித்தியரை வரவழையுங்கள். அவர் என் ஹிருதயத்தைப் பரீட்சித்துப் பார்த்து, இன்றிரவு நான் அத்தனை பெரிய நாடகமொன்றில் நடிக்கலாம் என்று பயமில்லாமல் சொல்வாராயின், எனக்கு

ஆட்சேபனையில்லை" என்று கூறினேன். அதன் பேரில், அவர்கள் ஒரு வயித்தியருக்கு இரண்டு வயித்தியர்களாகத் தருவிக்கிறோம் என்று சொல்லி, உடனே வண்டி யனுப்பி என் பழய வயித்தியரை யும், இன்னும் அந்த வூரில் ஹிருதய பரீட்சையில் மிகச் சிறந்தவ ரெனப் பெயர் பெற்ற மற்றொருவரையும், சில நிமிஷங்களுக்குள் வர வழைத்தார்கள். அவர்களிருவரும், எனது சபை அங்கத்தினராகிய டாக்டர் ஸ்ரீனிவாசராகவாச்சாரியும் மூவருமாகக் கூடி என் ஹிரு தயத்தைப் பரிசோதித்துப் பார்த்து, கொஞ்சம் பலஹீனமாகத் தானிருக்கிறது; இருந்தபோதிலும், இன்றிரவு நாடகம் நடிக்கலாம், அபாயமொன்றுமில்லை, என்று தீர்மானம் சொன்னார்கள். இப்படி யாவது தப்பித்துக்கொள்ளலாம் என்று பார்த்த இம்மார்க்கமும் அடைபட்டுப் போகவே, சரிதான் என்று ஒப்புக்கொண்டேன். ஆயினும், ஒரு வார்த்தை கூறினேன். "எல்லாம் சரிதான், இந்த கண்டிராக்டர், எங்கள் சபை நான்கு ஆட்டங்கள் ஆடவேண்டு மென்று ஒப்பந்தம் செய்து கொண்டார்; எனது தேகஸ்திதியைக் கருதி மூன்று நாடகங்கள் ஆடினால் போதும் என்று இசைந்தார். இப்பொழுது அந்த ஆள், இதற்கு ஒரு ஆட்சேபனையும் செய்யாமல் பாருங்கள்" என்று சொன்னேன். அதை யெல்லாம் நாங்கள் சரிப்படுத்தி விடுகிறோம், நீங்கள் இசைந்தது போதுமென்று சொல்லிவிட்டு, அவர்கள் அனைவரும் நாடகத்திற்காக வேண்டிய விளம்பரங்களைச் செய்ய உடனே மிகுந்த குதூகலத்துடன் புறப் பட்டுப் போயினர். அப்பொழுது சுமார் 11 மணி ஆகிவிட்டது. இன்னும் சாயங்காலத்திற்குள்ளாக நாடகத்தைப் பற்றி இவர்கள் என்ன அச்சிட்டு விளம்பரம் செய்யக் கூடும் என்று ஆச்சரியப்பட் டேன். பிறகு, நான் அறிந்தபடி அவர்கள் செய்த நாடக விளம் பரம் எல்லாம், தபால் ஆபீசுக்குப் போய், பத்து மயிலுக்குள் உள்ள ஊர்களுக்கெல்லாம், "இன்றிரவு சுகுண விலாச சபையார் 'லீலாவதி சுலோசனா' ஆடப்போகிறார்கள்" என்று அறிவித்ததே யாம்! ஆயினும், அன்றிரவு நாடக வருமானத் தொகை 1700 ரூபாய்க்குமேல்!

நான் சந்தேகித்தபடியே இவர்கள் போய்க் கண்டிராக்டரை உத்திரவு கேட்க அம்மனிதன், சபையார் நான்காவது ஆட்டம்

ஆட—முடியுமானால் அப்பணம் தனக்குச் சேரவேண்டுமே யொழிய, மற்று யாருக்கும் சேரக்கூடாது என்று ஆட்சேபித்தானாம். அதன் பேரில் இவர்கள் அவனோடு பேரம் செய்து அவனுக்கு முன்னூறு ரூபாய் கொடுப்பதாயும், மிகுதிப் பணம் யாழ்ப்பாணத்துக் கலா சாலைக்கும், தேகப்பயிற்சி சங்கத்திற்கும் சேரவேண்டும் என்று தீர் மானித்தார்களாம். பிறகு ஏதாவது கோர்ட்டு வியாஜ்யமாய் முடிந் தால் என்ன செய்வதென்று, கண்டிராக்டர் கைபட இந்நாடகம் நடக் கலாம் என்று எழுதிக் கொடுத்தாலொழிய நான் இருந்த வீட்டை விட்டுப் புறப்பட மாட்டேன் என்று பிடிவாதாய் உட்கார்ந்தேன். அதன் பேரில் சாயங்காலம் ஆறுமணிக்கு அப்படிப்பட்ட கடிதம் கிடைக்கவே, அப்புறம் தான் நாடகக் கொட்டகைக்கு நான் புறப் பட்டேன். நான் ஏதோ கொஞ்சம் கஞ்சி சாப்பிட்டு விட்டு ஏழு மணிக்கு நாடகக்கொட்டகைக்குப் போனால் அதற்குள்ளாகக் கொட்டகை முழுவதும் ஜனங்களால் நிரம்பி யிருந்தது! கொட்டகை யின் வெளியே சில கிராமங்களில் ஏதாவது உத்ஸவம் நடந்தால் நூற்றுக் கணக்கான கட்டை வண்டிகள் அவிழ்த்து விடப்பட்டிருக் குமே, அப்படியிருந்தது. நாடகக் கொட்டகைக்குள்ளே அதற்கு மேல் நின்று பார்ப்பதற்காக அநேகம் பேர் ரூபாய் 5 விகிதம் கொடுத்ததாக அறிந்தேன். யாழ்ப்பாணத்து வாசிகள் எங்கள் சபைக்கு அன்று செய்த கௌரவமானது என்றும் மறக்கற் பால தன்று.

நாடகம் 9 மணிக்கு ஆரம்பித்த போது, கொட்டகைக்குள் "எள்ளு போட்டால் கீழே விழாது" என்னும் பழமொழிக் கிசைய, ஜனங்கள் நிறைந்திருந்தனர். நாடக ஆரம்ப முதல் கடைசிவரை, மிகவும் கவனமாய் நாடகத்தைக் கவனித்து வந்தனர். எனது ஆக் டர்களுக்கு முன்னதாகவே, யாழ்ப்பாணவாசிகள் தமிழில் தேர்ந்த வர்கள், ஆகவே, சரியாகப் பாடம் படித்து வையுங்கள், ஏதாவது "கைசரக்குப் போட்டீர்களானால் கண்டு பிடித்து விடுவார்கள்" என்று சொல்லியிருந்தேன்; அதன் படியே அவர்களும் தங்கள் தங்கள் பாடங்களைச் சரியாகப்படித்து அன்றிரவு வெகு விமரிசை யாய் நடித்தார்கள். நாடகம் முடிவதற்குக் காலை 2½ மணியான போதிலும் ஒருவரும் கொட்டகையை விட்டு அகலவில்லை. நாட

கத்தின் கடைசிக்காட்சிக்கு முன்பாக, எனது நண்பர், யாழ்ப் பாணத்து ஜட்ஜ் மிஸ்டர் பின்டோ என்பவர் (இப்பொழுது இவர் பெயரை மிஸ்டர் கிரேஷ்டா, என்று மாற்றிக் கொண்டார்), மேடையின் பேரில் வந்து சபையைச் சிலாகித்துப் பேசி, யாழ்ப்பாணத்து வாசிகள் தரப்பில் எங்கள் சபைக்கு ஞாபகார்த்தமாக சுமார் 400 ரூபாய் பெறும்படியான வெள்ளித் தட்டு சந்தனக்கிண்ணம், பன்னீர்ச்சொம்பு, கொடுத்தார். (இவைகள் இன்னும் எங்கள் சபையில் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கின்றன.) இன்னும் இரண்டொரு பெரிய மனிதர்களும் சபையின் நாடகங்களைப்பற்றிப் புகழ்ந்து பேசினர் என்பது என் ஞாபகம்.

யாழ்ப்பாணத்தில் எங்கள் சபையார் ஆடிய நாடகங்கள் யாழ்ப்பாண வாசிகளின் மனதை எவ்வாறு கவர்ந்ததென்பதற்கு, அச்சமயம், ஒரு சிங்களத்து வர்த்தமானப் பத்திரிகையில், எழுதிய ஒரு வியாசத்தினின்றும் சில பாகங்களை இங்கு தமிழில் மொழி பெயர்த்து எழுதுகிறேன். சாதாரணமாகப் பத்திரிகைகளில் ஒரு நாடகத்தைப்பற்றி, நாடகமாடுபவர்களின் நண்பர்கள் எவ்வளவு அதிகப்படுத்தி எழுதுகிறார்கள் என்பதை நான் அறிந்துள்ளேன். அன்றியும் சிலர் தாங்கள் நடித்ததைப்பற்றி தாங்களே பத்திரிகைகளுக்கு எழுதி அனுப்புவதும் எனக்குத் தெரியும். ஆயினும் இப்பொழுது நான் மொழி பெயர்க்கப் போகிற விஷயங்களை எழுதியவர் பெயரும் எனக்குத் தெரியாது. இப்பத்திரிகையும் சில நாட்கள் பொறுத்து எனக்கு அகஸ்மாத்தாய்க் கிடைத்தது; யாழ்ப்பாணத்தில் நல்லூர் என்னும் கிராமத்திலிருப்பவராகத் தன்னை இவ்வியாசத்தில் வெளியிட்டிருக்கிறார். இவர் எங்கள் சபையின் நாடகங்களைப்பற்றி எழுதிய சில பாகங்களைக் கீழே தெரிவிக்கிறேன்.

(யாழ்ப்பாணத்து) "மைதானத்தில் யாழ்ப்பாணம் முழுவதும் திரண்டுபோய்ச் சேர்ந்தது என்று வாஸ்தவமாய்க் கூறவேண்டும்." இச்சபையின் ஆக்டர்கள் எங்கள் மனதைக் கவர்ந்தது மிகுந்த ஆச்சரியகரமான விஷயமாம். "யாழ்ப்பாணத்தார் மிஸ்டர் சம்பந்தத்தின் பெயரை மறந்து போகலாம், ஒருகால் அவரது குரலின் பிர

இத் தொனி, மழுங்கிப் போகலாம் ; அவர் உருவத்தைச் சுற்றியிருக்கும் தெய்வீகம் பொருந்திய காந்தி மறைந்துபோகலாம், காலம் என்பதே அற்றுப் போகும் வரையில், அவர் தமிழ் பாஷையிலுள்ள அழகினையும் பெருமையையும் பூமியில் புதைந்து கிடந்த நிதியை வெளிப்படுத்தியது போல், அவர் வெளிப்படுத்தியது அழியாது நிற்கும் !"

பிறகு நான் நான்கு நாடகங்களிலும் நடித்ததைப்பற்றி ஏதோ புகழ்ந்து கூறியுள்ளார். அதை இங்கு எழுத எனக்கிஷ்டமில்லை. ஆயினும் அவர் என்னுயிர் நண்பனை சி. ரங்கவடிவேலுவைப்பற்றி எழுதியதை மாத்திரம் இங்கு மொழி பெயர்க்க இதை வாசிக்கும் எனது நண்பர்களின் அனுமதியைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

" எல்லா ஆக்டர்களைவிட முதன்மை மிஸ்டர் ரங்கவடிவேலுக்குக் கொடுக்க வேண்டும். இந்நாடகங்களிலெல்லாம் இவர் முக்கியமான ஸ்திரீ பாகம் தரித்து, சபையோரின் மனதையெல்லாம் மிகவும் கவர்ந்தனர். இவர் ஊர்வசி வேடம் பூண்டு என்ன அழகாயும் அருமையாகவும் நடனம் செய்தார் ! யவ்வன அழகிய அதரமுடையவர் ! அவர் புன்னகை புரியும்போது நம்முடைய மனதையெல்லாம் எவ்வாறு கவருகிறார் ! அழகிய சாரியணிந்து பெண் கோலத்துடன், சித்ராங்கியாகவும், சுலோசனையாகவும், சாரங்கதரனுடனும் ஸ்ரீதத்தனுடனும் அவர் பேசுங்கால் இவர் வாஸ்தவத்தில் ஸ்திரீ ஜன்மம் எடுத்தவரே என்று யார்தான் எண்ணமாட்டார்கள் ! அவரது அபிநயங்களெல்லாம் எவ்வளவு பொருத்தமானதாயிருக்கின்றன! சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி தன் மனோபாவங்களைக் காட்டுகிறார் ! வாஸ்தவமாய் இவர் எல்லோருடைய மதியையும் மயங்கச் செய்தார் என்பது திண்ணம் ! இவரை நாடகமேடையிற் பார்த்த பிறகு, மாத்யு ஆர்னால்டு என்பவர், தன் சிறுவயதில், எடின்பரோ நாடகசாலையில் ஒரு முறை ராஷீல் என்னும் நடிக சிரோமணியைப் பார்த்துவிட்டு, அவளை இரண்டு மாதம் வரையில் பாரிஸ் நகரத்தில் பின் தொடர்ந்தார் என்று கேள்விப்படுவது ஒரு ஆச்சரியமாகாது !"

இவர் இந்த வியாசத்தை அடியிற்கண்ட வார்த்தைகளுடைய பூர்த்தி செய்கிறார்.—"இவ்வழகிய நாடக சபையார், நம்முடைய

மனதை யெல்லாம் கவர்ந்துவிட்டு, நம்மைவிட்டு சென்னை போய்ச் சேர்ந்துவிட்டனர். போகும்போது நமக்கு நன்கொடையாக என்ன அளித்துச் சென்றனர்? இவர்கள் ரங்கத்தின்மீது ஆடியதினால் நாம் அறிந்த புத்திமதி என்ன? அவர்கள் போன பிறகு, மைதானத்தின் பக்கம் நான் போய் அவர்கள் ஆடிய நாடகக் கொட்டகையிருந்த இடத்தைப் பார்க்குங்கால், என் மனதின் கண் இரண்டு உருவங்கள் தோன்றுகின்றன. ஒன்று மிகுந்த அழகுடைய முகச் சின்னங்கள் உடையதும், கருமேகம் போன்ற கேசம் நிறைந்ததும், பட்டுப் புடவை யணிந்து பல விலையுயர்ந்த ஆபரணங்களணிந்த தாம்!— மற்றொன்று சௌம்யமாயிருந்தபோதிலும் திடசித்தத்தைக் குறிக்கின்ற முகத்தை யுடையது—சி. ரங்கவடிவேலு, ப. சம்பந்தன், ஆகிய இவர்களுடைய இனிய குரலானது எனக்கு என்ன சொல்லுகிற தென்றால் "நாடகமேடையானது எல்லாவற்றையும் வெல்லும் சக்தி யுடையது, யாழ்ப்பாணத்தில் உடனே ஒரு நாடக சபையை ஏற்படுத்துங்கள் என்பதே யாம்."

பிறகு மறுநாள் காலையில் எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காரும் நானும் கொழும்புக்குப் புறப்பட்டோம், சபையின் மற்ற அங்கத்தினர் அன்று யாழ்ப்பாணத்தில் தங்கியிருந்து மறுநாள் புறப்பட்டு வருவதாகச் சொன்னார்கள். என் உடம்பு அசௌகர்யத்தைப்பற்றி நான் ஒரு நாள் முன்னதாகப் புறப்பட்டு, கொழும்பில் ஒரு நாள் தங்கி, பிறகு எல்லோருடனும் பட்டணம் போக வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. நாங்கள் ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டபொழுது, எங்களுடைய யாழ்ப்பாணத்துப் புதிய நண்பர்களெல்லாம் அங்கு வந்து எங்களைக் கௌரவப் படுத்தி அனுப்பினார்கள்.

அன்று சாயங்காலம் கொழும்பு வந்து சேர்ந்து, மிஸஸ் திருநாவுக்கரசு அம்மாள் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தோம். எங்களைத் தனது அதிதிகளாக வரவழைத்து, அந்த அம்மையார் என்னை அன்றிரவு முதலில் பார்த்த பொழுது, "மிஸ்டர் சம்பந்தத்தின் அருவத்தைப் பார்ப்பது போலிருந்தது எனக்கு" என்று சொன்னார்கள் அவ்வளவு மெலிவடைந்து முகம் வெளுத்திருக்கவேண்டும் நான்!

ஆயினும் தேகபலம் குன்றியிருந்தபோதிலும் மனதில் மாத்திரம் எடுத்த காரியத்தை எப்படியாவது ஈசன் கருணையினால் முடித்திட்டோமே என்னும் சந்துஷ்டி குடிகொண்டிருந்தது.

இந்தத் திருநாவுக்கரசு அம்மாள், மிஸ்டர் ராக்வுட் என்னும் பிரபல வைத்தியரின் மூத்த மகள். ஆங்கிலம், சம்ஸ்கிருதம், தமிழ், மூன்று பாஷைகளிலும் மிகுந்த விற்பன்ன முடையவர்கள்; சாதாரணமாகவே கற்றறிந்த மாதர்களையுடைய இந்த இலங்கைத் தீபத்தில், இவர்கள் எல்லோராலும் மிகுந்த கல்வி செறிந்தவர்களாக மதிக்கப்பட்டவர்கள்; இவர்கள் இரண்டு நாள் தன் வீட்டில் என்னைத் தங்கச் செய்து, நோயாளியாகிய எனக்குச் செய்த உபசாரணை என் மரண பர்யந்தம் மறக்கற்பாலதன்று. என் அன்னையைப் போல என்னை ஆதரித்த இவர்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? என் மனமார்ந்த வந்தனத்தை இங்கு நான் எழுதி வைப்பது தவிர்த்து வேறொன்றும் செய்ய அசக்தனாயிருக்கிறேன்.

இம்மாதுசிரோமணி இம்முறை நான் இலங்கைக்கு வந்த பின் பரிசயமான பிறகு, நான் அப்போதைக்கப்போது அச்சிடும் புஸ்தகங்களை யெல்லாம் தவறாது இவர்களுக்கு அனுப்புவது என் வழக்கம். அவற்றையெல்லாம், படித்து அவைகளைப்பற்றி அப்போதைக்கப் போது இவர்கள் மதிப்புரை எனக்கு எழுதி அனுப்புவார்கள். எனக்கு எழுதியனுப்பும் எல்லோருடைய மதிப்புரையைவிட, இவர் மதிப்புரைக்கே நான் அதிக கௌரவம் பாராட்டுகிறேன்; ஏனெனில், மற்றவர்களைப் போலல்லாது ஏதாவது குற்றம் குறையிருந்தால் எனக்கு அவற்றை உடனே எடுத்துக்காட்டும் அபூர்வமான சிறந்த குணம், திருநாவுக்கரசு என்னும் சரியான பெயர் பெற்ற இம்மாதரசியிடம் உண்டு.

இம்முறை இலங்கைக்குச் சபை போய் வந்ததின் பலனாக, ரூபாய் 1500 கட்டட பண்டுக்குச் சேர்க்கப்பட்டது. அன்றியும் அதன் நேர்பலனாக, கொழும்பில், சுபோத விலாச சபை யென்ற நாடக சபை யொன்று ஸ்தாபிக்கப்பட்டது. யாழ்ப்பாணத்திலும் பிறகு ஒரு நாடக சபை ஏற்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

கொழும்பு சபை பல நாடகங்கள் ஆடி இன்னும் ஜீவித்திருக்கிற தென அறிவேன்; யாழ்ப்பாணத்து சபையைப்பற்றி நான் கேள்விப் பட்டு சில வருஷங்களாயது.

---

# 22 ஆவது அத்தியாயம்

---

1913ம் வருஷம் எங்கள் சபையின் வர்த்தமானத்தில் குறிக்க வேண்டியது எனக்கு ஞாபக மிருக்கிற வரையில் இரண்டு விஷயங் களே; ஒன்று சீமையிலிருந்து வந்த ராயல் கமிஷனுக்கு ஆனரபில் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் தன் வீட்டில் ஒரு விருந்தளித்த பொழுது, அவரது வேண்டுகோளின்படி அச்சமயம் எங்கள் சபை யார் "இந்திய தேசத்தின் சரித்திரம்" பல தோற்றக் காட்சிகளாகக் காட்டியது; மற்றொன்று காலஞ்சென்ற வி. கிருஷ்ணசாமி ஐயரு டைய உருவப்படத்தை சென்னை கவர்னர் லார்ட் பென்ட் லென்ட், திறந்து வைத்தது.

இவ்வருஷம் நான் இரண்டு சிறு நாடகங்களைப் புதிதாய் எழு தினேன். ஒன்று 'கோனேரி அரசகுமாரன்' என்பது, மற்றொன்று 'சிறுத்தொண்டர் சரித்திரம்' கோனேரி அரசகுமாரன் என்பது ஷேக்ஸ்பியர் மகாகவி ஆங்கிலத்தில் எழுதிய 'நான்காம் ஹென்றி' என்னும் நாடகத்திலிருந்து ஒரு சிறு பாகத்தை எடுத்து, ஹாஸ்ய ரூபமாக எழுதியதாம். சிறுத்தொண்டரின் கதை யாவருக்கும் தெரிந்ததே. ஒரு நாள் நானிருக்கும் ஆச்சாரப்பன் வீதியில் ஏதோ சிறுவர்களுடைய நாடகசபை யொன்று என்னைத் தங்கள் வருஷாந்தரக் கொண்டாட்டத்திற்கு அக்கிராசனம் வகிக்கும்படி யாகக் கேட்டுக்கொண்டது. அப்பொழுது அப்பிள்ளைகள், இக் கதையை ஒருவாறு நடித்தனர்; கதை நன்றாயிருக்கிறதென என் மனதில் தோன்றியது; அதன் பேரில் மறுநாள் இதை நான் நாடக ரூபமாக எழுத ஆரம்பித்து, இதன் முக்கியமான இரண்டு காட்சி களையும் இரண்டு நாட்களில் எழுதி முடித்தேன். உடனே எங்கள் சபையின் தசராக் கொண்டாட்டம் வரவே, அதன் முதல் நாள்

நான் முன்பே சொன்ன "கேர்னேரி அரசகுமரன்" நாடகத்தை ஆடி, இந்தச் சிறுத்தொண்டர் சரித்திரத்தை ஸ்திரீகளுக்கென்று ஏற்படுத்திய தினம் ஆடினோம்.

இச்சிறுத்தொண்டர் நாடகமானது நான் எழுதிய பல நாடகங்களுள் மிகச் சிறியதாயினும் அதன்மீது எனக்கு மிகவும் பிரியம் உண்டு. இதுவே ஒரு சிறிய நாடகம். இதிலும், சிறுத்தொண்டர் இரண்டு காட்சிகளில்தான் வருகிறார். இருந்தும், பெரிய நாடகப் பாத்திரங்களாகிய, அமலாதித்யன், மனோஹரன், ஸ்ரீதத்தன், சுந்தராதித்யன், முதலியவற்றை நடிப்பதைவிட, இச்சிறுத்தொண்டர் நாடகம் நடிப்பதில் எனக்கு சந்தோஷமதிகமாயுண்டு. என்னிடத்தில் வேறெந்த நற்குணமில்லாவிட்டாலும் பக்தி என்பது மாத்திரம் கொஞ்சம் இருக்கிறதென எண்ணுகிறேன். ஆகவே பக்திரசமமைந்த இச்சிறு நாடகத்தில் நடிப்பது எனக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுக்கிறது போலும்.

மேற்சொன்னபடி தசராவில் ஸ்திரீகள் தினத்தன்று இதை முதன் முதல் நடித்தபொழுது, எங்கள் சபையின் சட்டங்களின் பிரகாரம், அங்கத்தினராயிருந்தபோதிலும் ஆண்மக்கள் இந்நாடகத்தைப் பார்க்க முடியாமலிருந்தது. ஐகோர்ட்டு ஜட்ஜி ஹானரபில் சதாசிவ ஐயர் மாத்திரம் எங்கள் உத்திரவைப் பெற்று, விக்டோரியா பப்ளிக்ஹாலில், ரங்கத்தின் மீதிலிருந்து பார்த்தார். நான் இந்த சிறு நாடகத்தை முடித்துத் திரும்பியவுடன், பக்கப்படுதாவிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த அவர், அப்படியே என்னை ஆலிங்கனம் செய்துகொண்டு ஆசீர்வாதம் செய்து மிகவும் புகழ்ந்தார்! இதை நான் இங்கு தற்புகழ்ச்சியாக எடுத்து எழுதவில்லை. அச்சீமானது பேரன்பை எனது நண்பர்கள் அறியும் பொருட்டே இங்கு எழுதினேன். புகழ்ந்ததுமன்றி, "இதென்ன சம்பந்தம்? இப்படிப்பட்ட பக்திரசமமைந்த நாடகத்தை ஆண்மக்களாகிய அங்கத்தினர் பார்க்க இடமில்லாமற் போயிற்றே. இதை மறுதினம் நாங்களெல்லாம் பார்க்க ஆடவேண்டு" மென்று கூறி, காரியதரிசிகளிடம் பேசி, மறுநாள் வேறு ஏதோ நாடகம் வைத்திருந்ததை மாற்றி இதையே போடச் செய்தார்!

மறுநாள் எனது நண்பர்களெல்லாம் இதைப்பார்த்தபொழுது, மிகவும் நன்றாயிருக்கிறது, இதைக் கொஞ்சம் பெரியதாக எழுதி, அங்கத்தினர் மாத்திரமன்றி, அயலாரும் பார்க்கும்படியாக, பிரவேசக் கட்டணமுடைய நாடகமாக ஆடவேண்டுமென்று வற்புறுத்தினர். பிறகு அதனுடன் ஒரு ஹாஸ்யரசமமைந்த இடைக்காட்சியும், இன்னும் இரண்டு சிறு காட்சிகளும் சேர்த்து எழுதி அச்சிட்டேன். இதில் வெண்காட்டு நங்கையாக நடித்த எனதுயிர் நண்பர், சாதாரணமாக விலையுயர்ந்த சரிகை சேலைகளையும் ரவையிழைத்த நகைகளையுமே அணிய விரும்புபவர், சூரநாட்டுச் சேலை யொன்றை யணிந்து, தன் கூந்தலைச் சொருகிக் கொண்டையாகப் போட்டுக் கொண்டு தோன்றியது எனக்கு இப்பொழுதும் பிரத்யட்சமாகப் பார்ப்பதுபோல் என் மனதின்கண் தோன்றுகிறது. இதை இங்கெடுத்து எழுதியதற்கு இன்னொரு முக்கிய காரணமுண்டு. அதாவது அந்நாடகப்பாத்திரம் எப்படி உடை தரிக்கவேண்டுமென்பதை என் இளைய நண்பர்கள் அறியும் பொருட்டே. சில சபைகளில் இப்பாத்திரத்தைப் பூணும் ஆக்டர், விலை யுயர்ந்த சம்கி புடவையைக் கட்டிக்கொண்டு, ரவைசெட் நகைகளெல்லாம் அணிந்து கொண்டு, பிச்சாடாவாவது பின்னலாவது போட்டுக்கொண்டு தோன்றுவதைப் பார்த்திருக்கிறேன். அது முற்றிலும் தவறாகும். வெண்காட்டுநங்கை தெற்கத்திய ஸ்திரீ, தன்பொருளை யெல்லாம் அடியார்க்கு அமுதளிப்பதில் செல விட்ட ஒரு பக்தருடைய மனைவி. அதற்கேற்றபடி நடையுடை பாவனைகளிருக்க வேண்டும் என்பது திண்ணம். அன்றியும் முக்கியமாக சேலை தரிப்பதிலும் 'சென்னப்பட்டணத்து' பாஷன்போல் தரிக்காமல், தெற்கத்தியமாது சிரோமணிகள் தரிப்பது போல் தரிக்கவேண்டும்.

1914-ஷ சுகுணவிலாச சபை மிகவும் விர்த்தியடைந்த வருஷங்களிலொன்று. இவ்வருஷத்தில் எங்கள் சபை திருச்சிராப்பள்ளி கும்பகோணம் என்னும் இரண்டு இடங்களுக்குப் போய் நாடகங்கள் ஆடியது. திருச்சிராப்பள்ளியில் 5 நாடகங்கள் தமிழில் ஆடினேம். இவ்விடத்தில் எங்களுக்குவேண்டிய சவுகரியங்களை எல்லாம் தற்காலம் அசிஸ்டெண்ட் டிராபிக் இன்ஸ்பெக்டராயிருக்கும் எப். ஜீ. நடேச ஐயர் செய்தார். ஆயினும் நாங்கள் ஆடிய நாடகங்

களுக்கு ஜனக்கூட்டம் அதிகமில்லை. இவ்வூரில் ஒரு பக்கமாக இருந்த ரெயில்வே இன்ஸ்டிட்யூட் நாடக சபையில் நாங்கள் ஆடியது ஒரு வேளை ஒரு காரணமாயிருக்கலாம். ஆயினும் அது ஒரு முக்கிய காரணமென்று நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். இவ்விடத்தில் நாங்கள் நடத்திய மூன்றாவது நாடகமாகிய காலவரிஷி நாடகத்தின் ஆரம்பதில் நேரிட்ட ஒரு சமாசாரம் இப்பொழுதும் நினைத்துக் கொண்டால் எனக்கு நகைப்பைத் தருகிறது. இரவு 9 மணிக்கோ 9½ மணிக்கோ நாங்கள் குறிப்பிட்டபடி நாடகத்தை ஆரம்பம் செய்தோம். டிராப் படுதா மேலே போனவுடன், ஹாலில் பார்க்க, சரியாக பன்னிரண்டு பெயர்தான் உட்கார்ந்திருந்தார்கள் !

இதை நான் கவனித்தவனன்று; நான் இந்திரன் வேடம் பூண்டு சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தேன். என் அருகில் நின்று கொண்டிருந்த சித்திரசேனன் வேடம் பூண்ட எனது நண்பர் டாக்டர் டி. ஸ்ரீனிவாச ராகவாச்சாரி, இதைக் கவனித்து ஆடிக்கொண்டிருந்த அப்சர ஸ்திரீகளுடைய நடனத்திற்குத் தாளந் தட்டிக் கொண்டிருக்க வேண்டியவர், என் பக்கமாகத் திரும்பி, சபையோர் அறியாதபடி "என்ன வாத்தியார்! ஹாலில் வந்திருப்பவர்களைவிட, மேடையின் மீது நாம் அதிகப் பெயர்கள் இருக்கிறோமே!" என்று சொல்லி நகைத்து விட்டார்! அவர் கூறியதென்னமோ வாஸ்தவம் தான். ஏனெனில், இந்திரன் கொலுவில் திக்பாலர்கள், ரிஷிகள், முதலியோரையெல்லாம் கணக்கிட்டால் நாங்கள் 15 பெயர் இருந்தோம். "ஸ்! நமக்கென்ன இதனால்? நம்முடைய கடமை நாடகத்தை நன்றாய் நடத்தவேண்டியது. ஹாலில் ஜனங்கள் வந்திருக்கிறார்களா இல்லையா என்று நாம் கவனிக்கக்கூடாது" என்று கோபித்து மொழிந்ததை, இன்னும் எப்பொழுதாவது நாங்கள் வேடிக்கையாகச் சாப்பிட்டு விட்டுக்காலங்கழிக்கும் சமயங்களில், என்னைப்போல முகத்தைச் சுளித்து, அவ்வார்த்தைகளைக் கூறிக் காட்டுவார்.

கடைசி இரண்டு நாடகங்களுக்கும் 'காலவரிஷி'யைவிட ஜனங்கள் அதிகமாக வந்தனர். இருந்தும் திருச்சிராப்பள்ளிவரையில், வரவு செலவு கணக்குப் பார்த்தபொழுது, சபைக்குக் கொஞ்சம்

நஷ்டத்திலேயே யிருந்தது. ஆகவே, இவ்விடத்தைவிட்டு கும்ப கோணத்திற்குப் புறப்பட்டபொழுது, திருச்சிராப்பள்ளியிலே இப்படியிருந்ததே, இதைவிட சின்ன ஊராகிய கும்பகோணத்தில் எப்படியிருக்கப் போகிறது என்னும் மனவருத்தத்துடன் தான் புறப்பட்டோம்.

போஜனத்துக்குமேல் மத்யான ரெயிலில் புறப்பட்டு சாயங்காலம் கும்பகோணம் வந்து சேர்ந்தோம். ஸ்டேஷனிலிருந்து எங்கள் விடுதிக்குப் போகும் வழியில், நாடகக் கொட்டகை வாயிலில் அச்சமயம் கும்பகோணம் சப் ஜட்ஜாயிருந்த எனது பழய நண்பர் பாலசுப்பிரமணிய ஐயரைக் கண்டோம்; அவர் அச்சமயம், நாங்கள் முன்னதாகவே திருச்சிராப்பள்ளியிலிருந்து இவ்விடம் அனுப்பிய படுதாக்கள் முதலியவற்றை ஆட்கள் இறக்குவதை மேல்பார்வை பார்த்துக்கொண்டிருந்தார். அவர் புன்சிரிப்புடன் எங்களுக்கெல்லாம் நல்வரவு கூறியதை நான் ஒரு நற்சகுனமாகக் கொண்டேன். இந்த பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் மயிலாப்பூரில் எங்கள் சபை "விரும்பிய விதமே" என்னும் நாடகம் போட்டதுமுதல் எனக்கு அத்யந்த நண்பராயிருந்தவர். எங்கள் சபையின் பாக்கியத்தால் இச்சமயம் இவர் இவ்விடம் சப் ஜட்ஜாயிருக்கும்படி நேர்ந்தது. இவர் நாங்கள் கும்பகோணத்திற்கு வந்தது முதல் அதைவிட்டுப் பட்டணம் புறப்பட்ட வரையில், கோர்ட் வேளை தவிர, மற்றக் காலமெல்லாம் எங்களுடனேயே கழித்தார் என்று கூறுவது மிகையாகாது.

ஊரில் பெரிய உத்தியோகஸ்தராகிய இவர் எங்கள் சபை விஷயமாக இவ்வளவு சிரத்தை எடுத்துக்கொள்ளவே, ஊரிலுள்ள மற்றவர்களெல்லாம் எங்கள் சபையை மிகவும் மதிக்க வாரம்பித்தனர். இதன் பலன் என்னவென்றால், இவ்விடம் எங்கள் முதல் நாடகமாகிய "மனோஹரன்" ஆரம்பிப்பதற்கு ஒன்றரை மணி சாவகாசத்திற்கு முன்பாக, கொட்டகையில் நாங்கள் விற்பதற்காக அச்சிட்டிருந்த டிக்கட்டுகளெல்லாம் ஆய்விட்டன! அதன் பேரில் எங்கள் சபை காரியதரிசியாக இருந்த எனது தமயனார் ஆறுமுக முதலியார், டிக்கட்டுகளில்லாமல், கையில் ரூபாயை வாங்கிக்கொண்டு

கொட்டகையில் காலி இடங்களில் எத்தனை பெயரை நிற்கவிட முடியுமோ, அத்தனை பெயரை உள்ளே விட்டார்! கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அதுகூட முடியாமல், கொட்டகை நிரம்பிவிட்டபடியால் அதையும் நிறுத்தவேண்டி வந்தது. இதை யெல்லாம் அறிந்த எங்களுக்கு திருச்சிராப்பள்ளியில் பட்ட வருத்த மெல்லாம் பறந்து போய் அதிக சந்தோஷம் உண்டாச்சுது. இவ்வாறு குதூஹலத்துடனிருந்த நாங்கள் மிகவும் நன்றாய் நடித்தோம் என்று நான் கூறவே வேண்டியதில்லை. ஆயினும் ஒரு சமாசாரம். மேற்சொன்னபடி கொட்டகையில் நிற்க இடமில்லாமல் ஜனங்கள் நிறைந்திருந்த போதிலும், நாங்கள் எல்லாம் மிகவும் நன்றாய் நடித்த போதிலும், நாடக ஆரம்ப முதல் கடைசி வரையில் ஒரு கரகோஷமாவது என் செவியிற்படவில்லை! இதற்கு என்ன காரணம் இருக்கக்கூடும் என்று யோசித்துக்கொண்டிருந்த நான், நாடகம் முடிந்தவுடன், ஆக்டர்களுடன் அருகாமையிலிருந்த எங்கள் விடுதிக்குத் திரும்பிப் போகும்பொழுது, எங்கள் பந்தோபஸ்துக்காக நான்கு கான்ஸ்டபில்களுடன் எங்களோடு வந்த டெபுடி சூபரின்டென்டென்ட் ஆப் போலீஸ் அவர்களை, நாடகக் கொட்டகை முழுதும் நிரம்பியிருந்த ஜனங்களெல்லாம் சும்மாயிருந்தார்களே, என்ன காரணம் என்று மெல்ல கேட்க, அவர் "யாருக்காக சும்மா இருந்தார்கள்? எவனாவது கை தட்டிக்கேலி செய்திருந்தால், உடனே அப்படியே அவனை ஸ்டேஷனுக்கு இழுத்துக்கொண்டு போய்விடும்படி, அங்கங்கே கான்ஸ்டபில்களை நிறுத்திவைத்தேன்!" என்று பதில் உரைத்தார். அப்பொழுதுதான் எனக்கு காரணம் வெளியாயது. இவ்வூர் வழக்கம் என்னவென்றால், நாடகத்தில் ஏதாவது நன்றாகயில்லாவிட்டால் கைதட்டிக்கேலி செய்வதாம்! கரகோஷம் செய்வது, நன்றாயிருக்கிறதென உற்சாகப்படுத்துவது என்பதை அறிந்திலர் அச்சமயம்! சில வருஷங்களுக்குப் பிறகு இதெல்லாம் மாறிவிட்டது.

இரவில் போலீஸ் பந்தோபஸ்துடன் நாங்கள் வீட்டிற்குச் செல்வதைக் கண்ட ஜனங்கள், இதனின்றும் இன்னொரு தவறான ஊகை கொண்டனர். எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு முதலிய ஆக்டர்கள் அணிந்திருந்த நகைகளெல்லாம் மிகவும் விலையுயர்ந்தன, இந்நகைகளின் பந்தோபஸ்துக்காக போலீஸ் கான்ஸ்டபில்கள்

கூடப்போகிறார்கள், என்று பேசத்தொடங்கினர். என்னுடன் இதைப்பற்றிப் பேசிய இரண்டொருவருக்கு அந்நகைகளெல்லாம், வெள்ளைக் கற்களாலும் பித்தளையினாலும் ஆனவை என்று நான் கூறியபோதிலும், இப்படிச் சொன்னால்தான் அவற்றை யாரும் களவாடமாட்டார்கள் என்னும் காரணத்தினால் இவ்வாறு கூறுகிறீர்கள் என்று மறுத்தனர்! இந்த தர்ம சங்கடத்திற்கு நான் என்ன செய்வது? உலக வழக்க மீதாகும்! பணக்காரன் பித்தளையை யணிந்திருந்தால் அது பொன்னாக மதிக்கப்படுகிறது, ஏழை வாஸ்தவமாகப் பொன்னை யணிந்திருந்தாலும் அது பித்தளை என மதிக்கப்படுகிறது!

எங்கள் முதல் நாடகமானது இந்தச் சிறு ஊரில் ஒரு குழப்பத்தை யுண்டுபண்ணினதென்றே சொல்லவேண்டும்; பால சுப்பிரமணிய ஐயர் எனக்குத் தெரிவித்தபடி, ஊரில் எங்கே போனாலும் சுகுணவிலாச சபைப்பேச்சாக விருந்தது எனக்கு முக்கியமாக திருப்தியைத் தந்தது கற்றறிந்தவர்கள் எங்கள் சபையின் நாடகத்தைப் புகழ்ந்ததன்று; சாதாரண ஜனங்கள், அதாவது கடைசி வகுப்பு டிக்கட்டு வாங்கிக்கொண்டுவந்து பார்த்த ஜனங்கள் கூடச் சந்தோஷப்பட்டனர் என்பதேயாம். இதை நான் அறிந்த விதத்தை இங்கு எழுதுகிறேன். எந்த ஊருக்குச் சென்றாலும் நாடகமானவுடன் மறுநாள் எங்கள் சபை ஸ்டேஜ் அசிஸ்டெண்டாகிய கேசு (கேசவ முதலியார்) அந்த ஊரிலுள்ள பிரபலமான காப்பி ஹோட்டல்களுக்கெல்லாம் மெல்லப்போய்ச் சுற்றிவிட்டு வருவான். அங்கு ஜனங்கள் சபையைப் பற்றி ஏதாவது பேசிக்கொண்டிருந்தால் அதை யெல்லாம் எனக்குத் தெரிவிப்பான்; இந்தப் "பரதேசித் தபால்" மூலமாக சாதாரண ஜனங்களின் அபிப்பிராயத்தை நான் அறிவது வழக்கம். இதன்படி கேசு மறுநாள் எனக்குத் தெரிவித்ததாவது, "காபி ஹோட்டல்களில் சபைப் பேச்சு தவிர வேறு பேச்சு கிடையாது! இரண்டாவது நாடகத்திற்கும் நீங்கள் அதிக டிக்கட்டுகள் அச்சடிக்க வேண்டியதுதான். நாயினா கண்ணுவைப் பற்றியும் (நாயினாகண்ணு என்பது ரங்கவடிவேலுவின் வீட்டுச் செல்லப் பெயர்) பத்மாஸுரவைப்பற்றியும் பேசாத பெயர்களில்லை" என்பதேயாம். என்னுடைய ஆக்டிங்கைப்பற்றிப் புகழ்ந்ததாகவும்,

ஆயினும் இவர் ஏன் பாடுகிறதில்லை என்று அநேகம் பெயர் கேட்ட தாயும் தெரிவித்தான். அன்றியும், சில சாப்பாட்டு ஹோட்டல்களில், இனி சுகுண விலாச சபை நாடக தினங்களில் இரவில் ஏழு மணிக்கெல்லாம் சாப்பாடு போட்டாய் விட வேண்டியது என்று ஏற்பாடு செய்துகொண்டதாகவும் தெரிவித்தான்.

இவ்வூரில் நாங்கள் நடத்திய இரண்டாவது நாடகம் லீலாவதி சுலோசனு; அதற்காக அ. கிருஷ்ணசாமி ஐயரை, சென்னையிலிருந்து லீலாவதி வேஷத்திற்காக வரவழைத்தோம். டிக்கட்டுகள் அதிகமாக அச்சிட்டு, எல்லா ஏற்பாடுகள் செய்தும், நாடக ஆரம்பத்திற்கு அரைமணி முன்னதாக, டிக்கட்டுகள் போதாமற்போயின; கொட்டகையிலும் நிற்க இடமில்லாமற் போயிற்று. இந்நாடகத்தில் கிருஷ்ணசாமி ஐயருடைய பாட்டும், எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவின் ஆக்டும், மிகவும் கொண்டாடப்பட்டன.

இங்கு நடத்திய கடைசி நாடகம் "சாரங்கதரன்" நாடக தினத்தின் காலையிலேயே சிலர் முப்பது நாற்பது டிக்கட்டுகள் வாங்க ஆரம்பித்தனர். இதற்குக் காரணம் என்னவென்று பிறகுதான் அறிந்தேன். முதல் இரண்டு நாடகங்களுக்கும் டிக்கட்டுகள் ஆய்விட்டபடியால் காலையிலேயே இவைகளை வாங்கி, பிறகு சாயங்காலம் அவைகளை ஒன்றுக்கு இரண்டு விலையாக விற்று லாபம் சம்பாதித்தார்களாம்! சாயங்காலம் எங்கள் வழக்கம்போல் ரங்கவடிவேலும் நானும் 5½-மணிக்கு நாடகக் கொட்டகைக்குப் போக, டிக்கட்டு ஆபீசுக்கு எதிரில் வழக்கம்போல் மேளம் வாசிக்கும் வாத்தியக்காரர்கள் தங்கள் வாத்தியங்களை உறையில் போட்டுக்கொண்டு வீட்டிற்குத் திரும்பிக்கொண்டிருந்தனர். இதற்குக் காரணம் என்னவென்று என் தமயனார் ஆறுமுக முதலியாரை வினவ, அவர் "டிக்கட்டுகளெல்லாம் விற்றுயது; இனி மேளம் வாசித்துக் கொண்டிருந்தால் வந்து கேட்பவர்களுக்கு யார் பதில் சொல்வது? அதற்காக மேளத்தை நிறுத்திவிட்டேன்" என்று விடை பகர்ந்தனர்.

இந்த சந்தோஷ சமாசாரத்தைக் கேள்விப்பட்ட என்னுருயிர் நண்பர் ரங்கவடிவேலு, அன்றைத்தினம் நடித்ததுபோல் 'சித்ராங்கி' யாக, முன்னும் நடித்ததில்லை, பிறகும் நடிக்கவில்லை. 'ராத்திரி

யெல்லாம் அப்படியே பார்த்துக் கொண்டிருக்கலாம்போலிருக்கிறதே' என்று வந்திருந்த ஒரு மாதுசிரோமணி கூறினார்களாம். எனது நண்பர் பால சுப்பிரமணிய ஐயர் நாடகம் முடிந்தவுடன், உள்ளே வந்து 'என்ன முதலியார், நாடகமெல்லாம் முடிந்து விட்டதே!' என்று முகவாட்டத்துடன் கூறியது எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது.

இவ்வூரிலுள்ள பெரிய மனிதர்களெல்லாம் எங்களுக்கு ஒரு பார்ட்டி கொடுத்தனர். அதில் எங்கள் சபைக்குப் பரிசாக சித்திர வேலை செய்யப்பட்ட ஒரு ஷீல்ட் கொடுத்தார்கள். இதை இன்றும் சபையின் தமிழ் ஒத்திகை அறையில் காணலாம். இத்தனை குதூஹலத்துடன் எங்கள் சபையை ஆதரித்த கும்பகோணவாசிகளுக்கு, நாங்கள் மறுநாள் பிரதி விருந்து கொடுத்தோம். அப்போது 'சபாபதி' நாடகத்தை ஆடினோம். அது ஆடி முடிவதற்குள் நேரமாகி விட்டபடியால், நாங்கள் புறப்பட எண்ணியிருந்த ரெயில் போய்விட்டது. அதன்பேரில் இவ்வூரில் இன்னொரு நாள் தங்கிவர வேண்டியதாயிற்று. இதற்காக நாங்கள் ஒருவரும் துக்கப்படவில்லை. காலஞ்சென்ற பாலகிருஷ்ண உடையார் தன் வீடுதியில் எங்களுக்கு அன்றைத்தினம் விருந்து அளித்தார். அன்று சாயங்காலம் எங்கள் நண்பர்களிடமெல்லாமிருந்து விடைபெற்றுக் கொண்டு ரெயிலேறி பட்டணம் போகப் புறப்பட்டோம். பால சுப்பிரமணிய ஐயர், கடைசி வரையில் எங்களுடனிருந்து ரெயில் ஸ்டேஷனுக்கு வந்து எங்களைப் பிரயாணப்படுத்தினர். இவர் எங்கள் சபைக்குச் செய்த பேருதவி என்றும் மறக்கற்பாலதன்று! மற்றவர்கள் மறந்தாலும் என்னால் மறக்க முடியாது.

கும்பகோணத்திலிருந்து புறப்பட்டு வரும்பொழுது, ஒரு தேசத்தின் மீது படையெடுத்து, வென்று திரும்பும் வெற்றியினால் எவ்வளவு மனோசந்துஷ்டியிருக்குமோ, அவ்வளவு மனோ சந்துஷ்டியுடையவனாயிருந்தேன் சர்வேஸ்வரன் கிருபையால்.

இந்த இரண்டு ஊர்களுக்கும் எங்கள் சபை சென்று நாடகமாடியதற்கு இன்னொரு பலன் கிடைத்தது. பெங்களூருக்குப் போய்வந்த பிறகு எப்படி அவ்விடம் ஒரு நாடக சபை ஏற்படுத்தப்

பட்டதோ, கொழும்புக்குப் போய்வந்த பிறகு கொழும்பில் சுபோத விலாச சபையென்னும் நாடக சபை எப்படி அங்கு ஸ்தாபிக்கப் பட்டதோ, அம்மாதிரியாகவே, திருச்சிராப்பள்ளியில் "ரசிக ரஞ்சனி சபை" என்றும், கும்பகோணத்தில் "வாணி விலாச சபை" யென்றும் ஸ்தாபிக்கப்பட்டன. இவ்விரண்டு சபைகளும் நாளது வரையில் வளர்ந்து வருகின்றன.

இந்த 1914-ம் வருஷம் ஐரோப்பிய மஹாயுத்தம் ஆரம்பித்த விஷயம் எல்லோரும் அறிந்ததே. அதன் பொருட்டு சென்னையில் வார் ரிலீப் பண்டு ஏற்படுத்திய பொழுது, அதற்காக எங்கள் சபையார் ரூபாய் 1000 நன்கொடையாகக்கொடுத்தனர். அன்றியும் பெல்ஜியம் தேசத்து உதவி பண்டுக்காக, தசராக் கொண்டாட்டத்தில், பத்து நாளும் யாசகம் செய்து, சுமார் ரூபாய் 250 அனுப்பினோம்.

மேலும் இவ்வருஷத்தின் கடைசியில் "தென் இந்தியா ஆர்ட்ஸ் (கலைகள்) எக்சிபிஷன்" ஒன்று சபையில் நடத்தினோம். அதற்கு மாட்சிமை தங்கிய கவர்னர் அவர்கள் ஒரு தினம் வந்திருந்தார்; மிகவும் நன்றாயிருக்கிறதெனப் புகழ்ந்து பேசினார்.

இவ் வருஷத்தின் கடைசியில் கிறிஸ்ட்மஸ் விடு முறையில் மொத்தமாக நாற்பது நாட்களுக்கு விக்டோரியா பப்ளிக் ஹால் மேல்மாடியை வாடகைக்கு வாங்கிக்கொண்டு தமிழிலும் தெலுங்கிலும் அநேக நாடகங்கள் நடத்தினோம். அதன் மூலமாக செலவு போக, லாபத்தில் ரூ. 1500, கட்டட பண்டுக்குச் சேர்த்தோம்.

இவ்வருஷம் நான் புதியதாக, "ரஜபுத்ரவீரன்" என்னும் ஒரு சிறு நாடகத்தை எழுதினேன். இதை எழுதும்படி நேரிட்ட காரணம் வருமாறு:—கனம் பி. ஆர். சுந்தர ஐயர், காலமான பிறகு, அவருக்குப் பதிலாக ஹைகோர்ட் ஜட்ஜாகிய டி. வி. சேஷகிரி ஐயர் அவர்கள் எங்கள் சபைக்கு பிரசிடென்ட் ஆனார். சேஷகிரி ஐயர் அவர்கள் தசராக் கொண்டாட்டத்தின் கடைசி நாள் செலவையெல்லாம் ஒப்புக்கொண்டு, இவ்வருஷ முதல் தன் மரணகாலம் வரையில், அதை நடத்தி வந்தார். இதில் ஒரு வேடிக்கையென்னவென்றால், அத்தினம்தான் அவர் பிறந்ததினம். இக் கொண்டாட்

டத்திற்காக, தன்னுடைய சினேகிதர்களாகிய ஐகோர்ட் ஜட்ஜுகளை யெல்லாம் வரவழைக்கப் போகிறதாகக்கூறி, என்னை அவர்களுக்காக ஒரு புதிய நாடகம் நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். நான் உடனே யோசித்து, பட்டணமெங்கும் ஐரோப்பாவில் நடக்கும் பெரும் யுத்தத்தைப்பற்றியே பேச்சாயிருப்பதால், யுத்த வீரர்களைப்பற்றிய கதையாயிருக்கவேண்டும் என்று தீர்மானித்து, டாட் என்பவர் ராஜஸ்தானத்துச் சரிதையில் எழுதியிருக்கும் சில சந்தர்ப்பங்களை ஒருங்கு சேர்த்து, 'ரஜபுத்ரவீரன்' என்னும் இந் நாடகத்தை விரைவில் எழுதி முடித்தேன். ஆயினும் இது உண்மையில் நடந்த சரித்திரமன்று. இந்நாடகத்தில் குறிப்பிட்ட ஒவ்வொரு சந்தர்ப்பமும் வேறு வேறு சமயத்தில் நேரிட்டதாயினும், ஏக காலத்தில் ஒன்றாய் இவைகள் சம்பவித்தவைகள் அல்ல; கதாநாயகனை ரணவீர்சிங் என் மனதால் நிர்மாணிக்கப்பட்ட பாத்திரமே. இந்நாடகத்தின் கடைசி காட்சியை நாடக தினத்தின் காலைதான் எழுதி முடித்தேன். ஆயினும் எனது ஆக்டர்களெல்லாம் நன்றாகப் படித்து தங்கள் பாத்திரங்களை மிகவும் அருமையாக நடித்தனர். நான் ரணவீர் சிங்காகவும், ரங்கவடிவேலு என் மனைவியாகிய சந்திராபாயாகவும் நடித்தோம். ஆயினும் வயோதிகத்தினால் கண் குருடாகிய ஜ்வாலாபாய் என்னும் ரணவீர்சிங்கின் தாயார் வேடம் பூண்ட எனது நண்பர் பத்மநாபராவ் ஆக்டு செய்ததுதான் எல்லோருடைய மனதையும் கவர்ந்தது. அன்றைத்தினம் வந்திருந்த பல ஹைகோர்ட்டு ஜட்ஜுகளும், நாடகத்தை மிகவும் புகழ்ந்ததாக சேஷகிரி ஐயர் எனக்குத் தெரிவித்தார். அக்காலம் "நியூ இந்தியா" என்னும் தினப்பத்திரிகையைப் பிரசுரம் செய்து வந்த, பெசண்ட் அம்மை, இந்நாடகத்தைப் பார்த்து, மறுநாள் இதைப் பற்றிப் புகழ்ந்து பேசியது மன்றி, இந்தியா தேசத்தில் தற்காலம் மழுங்கிப் போயிருக்கும், ஜனங்களின் வீர உற்சாகத்தை அபிவிருத்தி செய்ய இந்நாடகமானது இந்தியா தேச முழுவதும் ஆங்காங்கு ஆடவேண்டுமென்று எழுதினார்கள். இந் நாடகத்தில் ஒரு காட்சி முக்கியமாக மிகவும் ரசமாயிருந்ததென எல்லோரும் புகழ்ந்தனர்; அது ரஜபுத்ர வீரர்களுடைய பத்தினிகளெல்லாம், மஞ்சள் வஸ்திரம் தரித்து, அக்னியை வலம் வந்து அதில் பாய்ந்து மரித்த 'ஜோஹர்' என்னும் சடங்குக் காட்சியேயாம். ராணாவின் மனைவி, சிதையை

மூட்டக்கையில் கற்பூரத் தட்டை யேந்தி முன்பு செல்ல, பிறகு எல்லா ராஜபுத்ர ஸ்திரீகளும் வர, அவர்கள் பின்னால், சிறுமிகளும், குழந்தைகளும் மஞ்சள் வஸ்திரமணிந்து சென்றனர். இந்தக் காட்சியை மத்யானம் நான் ஒத்திகை செய்த பொழுது, நான் எழுதிய பொழுது தோன்றாத ஒரு யோசனை எனக்குத் தோன்றியது. அதன்படி அக்குழந்தைகள் இரண்டின் கையில், அவர்கள் அருமையாய் விளையாடிக்கொண்டிருந்த இரண்டு மரப்பொம்மைகளை, அவைகளுக்கும் மஞ்சள் வஸ்திரம் தரித்து, தீயில் மூழ்கக் கொண்டு போகச் செய்தேன். நாடகமானது அன்று சாயங்காலம் நடிக்கப்பட்டபொழுது, இவ்வாறு சிறு குழந்தைகள் தங்கள் பொம்மைகளையும் கையிலேந்தி தீப்புக ரங்கத்தைக் கடந்து சென்றதைக் க்ண்ட பொழுது, இம்மாதிரி ராஜஸ்தானத்தில் வாஸ்தவமாக நடக்கும்பொழுது, தன் அருமைக் குழந்தை அதன் பொம்மையையும் கையிற்கொண்டு தீப்புகப் போனதைக்கண்ட தகப்பன் மனம் எவ்வாறு பதறியிருக்கும் என்று நினைத்தேன்; உடனே என்னையுமறியாதபடி எனக்குக் கண்ணீர் ஆறாகப் பெருகியது! நாடகத்தில் ஏதோ நான் நடித்தாக இதை வந்தவர்கள் எண்ணினர். இதை நான் இங்கு எடுத்து எழுதியதற்கு ஒரு முக்கிய காரணம், இந்தக் காட்சியை ஆக்டு செய்யும் ஆக்டர்களும், அல்லது இம்மாதிரியான சோககரமான காட்சிகளை நடிக்கும் ஆக்டர்களும், நடிக்கவேண்டிய கதையின் சந்தர்ப்பத்தை மனதில் நன்றாய்க் கொள்வார்களானால், கண்ணீர் அவர்களுக்குக் தானாகப் பெருகும்; அழவேண்டிய சந்தர்ப்பங்களில், கண்ணுக்குக் கற்பூரத்தூள் முதலியன போட்டுக் கொள்ள வேண்டியதில்லை; அல்லது இன்னும் சில ஆக்டர்கள் செய்கிறபடி, ஸ்பிரிட் கம் தடவிக்கொள்ள வேண்டியதில்லை!

இதை முதன் முறை நடித்த பொழுது பல்லாரி ராகவாசார்லு என்னும் சிறந்த தெலுங்கு ஆக்டர் மஹம்மதிய அரசனாகிய பஹதூர்ஷா வேடந் தரித்தார். அவர் நான் தமிழில் எழுதிய வார்த்தைகளையெல்லாம் ஹிந்துஸ்தானியில் மொழி பெயர்த்துப் பேசினார். இவர் கடைசி காட்சியில் மிகுந்த புத்தி சாதுர்யமாய் நடித்த ஓர் விஷயத்தை, நாடகத்தை நான் அச்சிட்டபொழுது, அதையும் சேர்த்து அச்சிட்டேன். கதாநாயகனை ரணவீர்சிங், மகம்மதிய

வீரர்களால் கொல்லப்பட்ட பிறகு, இவனது வீரத்தை யறிந்த பஹாதூர்ஷா, தன் வீரர்களைக்கொண்டு மடிந்த ரஜபுத்ரவீரனது சவத்தை எடுக்கச்சொல்லி, அதைத்தானே பின்தொடருகிற தரு வாயில், தான் மேலே அணிந்திருந்த விலையுயர்ந்த போர்வையை அச்சவத்திற்குப் பெருமையாக அதன்மீது போர்த்தியதாக நடித் துக் காட்டினார் எனது நண்பராகிய ராகவாசார்லு. இது மிகவும் நன்றாயிருக்கிறதென, அவரது அனுமதியைப்பெற்று அச்சிடுங்கால் இதையும் சேர்த்து எழுதினேன். புத்தி சாதுர்யமுடைய சிறந்த ஆக்டர்கள், கிரந்த கர்த்தாக்களுக்கும் பல அருமையான விஷயங் களைக் கற்பிக்கின்றனர்!

1915-ம் வருஷமும் எங்கள் சபையின் சரித்திரத்தில் ஒரு முக் கியமானதெனக் கூற வேண்டும். இவ்வருஷத்தில் மாத்திரம் 363 புதிய அங்கத்தினர் சபையைச் சேர்ந்தனர். இதுவரையில் இத்தனை பெயர் ஒரே வருஷத்தில் சபையைச் சேர்ந்ததில்லை. இனிமேலும் அப்படி நடப்பது மிகவும் கடினம் என்றே எண்ணுகிறேன்.

இவ்வருஷம், முன்பே இருந்த தமிழ் தெலுங்கு பிரிவுகளுடன் எங்கள் சபைக்கு ஒரு இங்கிலீஷ பிரிவும் ஏற்படுத்தப்பட்டது. அதற்கு என் நண்பரான கே. ஆர். சீதாராமையரைக் கண்டக்ட ராக ஏற்படுத்தினார்கள். இவர் என்னுடன் கலாசாலையில் படித்த வர். பிறகு போலீஸ் இன்ஸ்பெக்டராக விருந்தார். ஆங்கிலத்தில் ரெசிடேஷன் ஒப்புவிப்பதில் மிகவும் நிபுணர். ஆங்கிலத்தில் நாட கம் நடிப்பதிலும் மிகவும் கெட்டிக்காரர். இவரது ஆங்கில உச்ச ரிப்பு இங்கிலீஷ்காரர்களும் மெச்சும்படியாக அவ்வளவு சுத்தமா யிருக்கும். ஷேக்ஸ்பியர் நாடகங்களில், ஒதெல்லோ நாடக பாத்தி ரத்தையாடுவதில் பெரும் கீர்த்திபெற்றார். எம். சுந்தரேச ஐயரை விட, இதில் சில பாகங்களில் அதிக விமரிசையாய் நடித்தார். தமிழ் நாடகங்களிலும் சிலவற்றுள் நடித்தார் எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் எழுதியுள்ள எட்டு ஒன்பது சிறு ஆங்கில நாடகங்களிலெல்லாம் முக்கியமான பாத்திரங்களை இவர்தான் நடித்தார். அவைகளெல்லாம் இவருக்கென்றே எழுதப் பட்டனபோல், அவைகளிலெல்லாம் அவ்வளவு சாதுர்யமாக நடித்

தார். எனது பால்ய நண்பர்களிலொருவராகிய இவரைப்பற்றி யெழுதவேண்டியபோதும், இறந்த காலத்தில் எழுதவேண்டியதா யிருக்கிறது; நிகழ் காலத்தில் எழுதுவதற்கில்லாதது என் துர்ப் பாக்கியங்களிலொன்றும்.

இவ்வருஷம் எங்கள் சபையின் முன்னூறாவது நாடகம் நடத் தப்பட்டது. இதற்காக "சவுத் இந்தியன் ஆத்லெடிக் அசோசியே ஷன்" மைதானத்தில் ஒரு பெரிய கொட்டகை போட்டு, அதில் "காதலர் கண்கள்" நாடகத்தையும், "நன்றி மறவா வறிஞர்கள்" என்னும் ஒரு ஹாஸ்யத்தையும் நடத்தினோம். இதற்கு கவர்னர் லார்ட் பென்ட்லென்ட் விஜயஞ் செய்தார். இந்நாடகத்தின் வரும் படி ரூபாய் 302-13-5, "சென்னை ஆஸ்பத்திரி கப்பல்" பண்டுக்கு நன்கொடையாகக் கொடுத்தோம். இதன்றி பத்துமாதங்களுக்கு, மாதம் 100 ரூபாய் விகிதம் அந்தக் கப்பல் செலவுக்காக அனுப்பி னோம். ஐரோப்பிய யுத்தத்திற்கு இந்தியாவிலிருந்து பல பெரிய ராஜாக்கள் முதலியோர் செய்த உதவியுடன், எங்கள் சபையும், ஸ்ரீராமர் சேதுபந்தனம் செய்ததற்கு, அணிப்பிள்ளைகளும் உதவி யதுபோல், தன்னாலியன்றளவு உதவி செய்தது.

அன்றியும் ஹைகோர்ட்டு பிரதம ஜட்ஜ் சர்ஜான் வாலிஸ் மனை வியார் சேப்பாக்கத்தில் ஏற்படுத்திய கொண்டாட்டத்திற்காக, இவ் வருஷம் "சபாபதி" யின் பாகமொன்றை, ஆங்கிலத்திலும் தமிழி லும் எழுதினேன். இதை "சபாபதி நான்காம் பாகம்" என்று இப்பொழுது தான் அச்சடித்து வெளிப்படுத்தியிருக்கிறேன். ஒரு சிறு நாடகமாயிருந்தபோதிலும், ஆங்கிலமும் தமிழும் கலந்திருந்த போதிலும், இதைப் பார்த்தவர்கள் இது நன்றாயிருக்கிறதெனப் புகழ்ந்தார்கள். அதற்கு அத்தாட்சியாக, இந்நாடகமானது அச் சிடப்படுமுன்னமே, அநேகம் தடவைகளில், என் ஏட்டுப் பிரதியைக் கொண்டு, அநேக சபையார்களும் சங்கத்தார்களும் இதை ஆடி யதை எடுத்துக் கூறுவேன்.

அன்றியும் இவ்வருஷம் சென்னை கவர்னர் அவர்கள் பார்க்கும் படி பாங்க் வெடிங் ஹாலில் யுத்த பண்டுக்காக ஏற்படுத்திய விநோ

தக் காட்சியில், என்னுடைய 'சபாபதி' நாடகத்தின் ஒரு பாகமும், "பிரமேளா" எனும் தெலுங்கு நாடகத்திலிருந்து ஒரு காட்சியும் ஆடப்பட்டது.

இவ்வருஷம் எங்கள் சபை திருநெல்வேலிக்குப்போய் எட்டு நாடகங்கள் அங்கே நடத்தியது. இவ்வூருக்குப் போனபோது, பாளையங்கோட்டை பாலத்தருகிலுள்ள எட்டையாபுரம் ராஜா அவர்களுடைய பங்களாவில் தங்கியிருந்தோம். இங்கிருந்து நாடகத் தினங்களிலெல்லாம் இரண்டு மயில் கடந்து திருநெல்வேலி டவுனுக்கு வரவேண்டியிருந்தது. இருந்தும் எட்டையாபுரம் ஜமீன்தார் அவர்களுடைய சிறிய தகப்பனார் (பிறகு இவர் பட்டத்துக்கு வந்தார்.) எங்களுடன் இருந்து எங்களுடைய சவுகர்யங்களை யெல்லாம் மிகவும் கவனித்து வந்தார். இவர் எங்கள் சபையின் நாடகங்களைப்பார்க்க வேண்டுமென்றே எட்டையாபுரத்தை விட்டுத் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தார். எங்கள் நாடகங்கள் முடிந்தபின் தன் ஊருக்குப் போய்ச் சேர்ந்தார்; எங்கள் சபையின் நாடகங்களில் அவ்வளவு அபிமானமுடையவராயிருந்தார். எங்கள் சபையின் அங்கத்தினராகவும் சேர்ந்தார். நாங்கள் ஒத்திகை செய்யும் பொழுதெல்லாம் எங்களுடனேயே யிருப்பார். சாப்பிடுகிற வேளை தூங்குகிறவேளை தவிர, மற்றக் காலமெல்லாம் எங்களுடனேயே கழிப்பார். 'மனோஹரன்' நாடகக் கதையைப்பற்றி எந்நேரமும் நான் லஜ்ஜைப்படும்படி, என் முன்னிலையிலேயே அதிகமாகப் புகழ்ந்து பேசுவார்; அந் நாடகத்தில் அவருக்கு அவ்வளவு பிரீதி.

இவ்விடத்தில் முதல் மூன்று நாடகங்கள் செம்மையாக நடந்தன. கூட்டமும் அதிகமாக வந்தது. நான்காவது நாடகம் 'லீலாவதி சுலோசனா' வைத்துக்கொண்டோம். மறுநாள் நாடகம் என்றிருக்க, முந்தியதினம் நாங்கள் எல்லாம் சாப்பிட்டு விட்டு வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தபொழுது, திடீரென்று கோடை காலத்தில் இடி விழுந்தாற்போல், சென்னையிலிருந்து, எனது ஆருயிர் நண்பர் ரங்கவடிவேலுவுக்கு அவர் தங்கை மரணவஸ்தையிலிருப்பதாகத் தந்தி வந்தது! இன்னது செய்வதென்று தோன்றாதவனாய்த் திகைத்துப் போனேன். ஆயினும் யாவும் அவன்

பாரம் என்று, பரமேஸ்வரன் பேரில் பாரத்தைச் சுமத்தி என் மனதை ஒருவாறு தேற்றிக்கொண்டு, நாம் செய்யவேண்டிய கடமையை முதலில் செய்வோம், பிறகு மற்ற விஷயங்களைப்பற்றி யோசிப்போம் என்று தீர்மானித்தவனாய், உடனே ரங்கவடிவேலுவைப் பிரயாணப்படுத்தி சென்னைக்கு அனுப்பிவிட்டு, எங்கள் பங்களாவிற்கு வந்து சேர்ந்து, எனது ஆக்டர்களையெல்லாம் வரவழைத்து, நாங்கள் இரண்டு பெயரும் ஆக்டு செய்யாவிட்டாலும், அதன் பொருட்டு நாடகம் நின்று விடலாகாதென்று சொல்லி, என் பாகத்தை டாக்டர் ஸ்ரீனிவாசராகவாசாரிக்குக் கொடுத்து, ரங்கவடிவேலுவின் பாகத்தை எம். ராமகிருஷ்ண ஐயருக்குக் கொடுத்து அவர்களைப் படிக்கச்செய்தேன். அவர்களும் தங்களாலியன்ற அளவு செய்வதாக ஒப்புக்கொண்டு, கஷ்டப்பட்டு தங்கள் பாடங்களைப் படித்து, மறுநாள் நடித்தார்கள். இதைப்பற்றி நான் சற்று விவரமாய் இங்கு எழுதியதற்கு அநேகம் காரணங்களுண்டு; முதலாவது, என் அனுபவத்தில் அநேக சபைகளில், ஒரு நாடகம் நடத்துவதாக விளம்பரம் செய்த பிறகு, "ஒரு ஆக்டர் வரவில்லை, அரை ஆக்டர் வரவில்லை" என்று போக்கைச் சொல்லி, நாடகத்தை நிறுத்தியிருக்கிறதைப் பார்த்திருக்கிறேன். அப்படிச் செய்தல் தவறு என்பது என் துணிபு. எந்த ஆக்டர் வர அசந்தர்ப்பப்பட்டாலும் ஒரு முறை தீர்மானித்தபின், அந்நாடகத்தை ஆடியே தீருவது ஒழுங்காகும். லீலாவதி சுலோசனா ஒரு பெரிய நாடகம், அதில் ஸ்ரீதத்தன் வேடமும், சுலோசனையின் வேடமும் மிகவும் முக்கியமானவை என்பதை அந் நாடகத்தை வாசித்தவர்களும் படித்தவர்களும் நன்றாய் அறிவார்கள்; அப்படியிருக்க, 24-மணி நேரத்திற்குள்ளாக, அவ்விரண்டு ஆக்டர்களைத் தயார் செய்ய சாத்தியமானபோது, மற்ற நாடகங்களிலும் யாராவது ஆக்டர்கள் வராமற் போனால், மற்றவர்களைக்கொண்டு கண்டக்டர்கள் ஏன் நடத்தக் கூடாது? இரண்டாவது எனது நண்பர்களாகிய ஸ்ரீனிவாசராகவாசாரியும் எம். ராமகிருஷ்ண ஐயரும், அவ்வளவு குறுகிய காலத்தில் அவ்விரண்டு பாத்திரங்களையும் படித்து நடிக்கச் செய்ததற்கு முக்கியமான அநுகூலமாயிருந்தது, அவர்களிருவரும் நானும் ரங்கவடிவேலும் அப்பாத்திரங்களைப் பன்முறை மேடையின்மீது நடித்த

போதெல்லாம், அருகிலிருந்து எங்களை அவர்கள் கவனித்து வந்ததேயாம், என்பதற்குத் தடையில்லை. இவ்வாறு அவ்விருவர்களும் கவனித்து வந்ததின் பயனாக திடீரென்று அப்பாத்திரங்களை அவர்கள் நடிக்கவேண்டிவந்தபொழுது, தைரியமாய் அப்பாத்திரங்களை அவர்கள் எளிதிற் கற்று நடிக்கச் செய்தது. இதனால் இதை வாசிக்கும் நாடகமேடையில் பெயர் பெற வேண்டும் என்று விரும்பும் எனது இளைய நண்பர்கள் அறியவேண்டியதென்னவென்றால், மற்றவர்கள் நடிக்கும்பொழுது, நாம் அவர்களைக் கவனிப்பதினால் மிகவும் லாபமுண்டென்பதேயாம். மூன்றாவது, நாம் நடிப்பதற்கில்லையென்று அன்றைத்தினம் நாடகத்தை நான் எளிதில் நிறுத்தியிருக்கக்கூடும். எப்படியாவது நாடகம் தடைபடலாகாது என்று நான் வற்புறுத்தியிராவிட்டால், நாடகம் நடந்திராது வாஸ்தவமே. ஆயினும் அப்படி என் சுய நன்மையைப் பாராட்டி நான் நிறுத்தியிருந்தால் என்னவாயிருக்கும்? சபைக்குப் பெயர் நஷ்டமும் பண நஷ்டமும் உண்டாயிருக்கும். அன்றைத்தினம் ஆயிரம் ரூபாய்க்கு மேல் வசூலானது வந்திராது; அன்றியும் அக்கம்பக்கத்திலிருந்து அநேக ஜனங்கள் வந்திருந்தவர்களெல்லாம், அன்று நாடகமில்லையென்று அறிந்து திரும்பிப் போயிருப்பார்களானால், மற்றொரு நாள் நாடகம் என்று பிரசுரம் செய்தால், அன்றைத் தினம் போல் இன்றும் நிறுத்திவிடுகிறார்களோ என்னவோ என்று மனஞ் சலித்து வராமலிருந்தாலுமிருப்பார்கள்; எங்கள் சபையின் நற்பெயரும் கெட்டிருக்கும். சுகுணவிலாச சபையார் ஒரு முறை நாடகம் என்று பிரசுரம் செய்தபின், என்ன இடையூறுகள் வந்தபோதிலும், என்ன மழை இடியாயிருந்தபோதிலும், எப்படியும் ஆடித்தான் தீர்ப்பார்கள் என்கிற பெயர் நிலைத்திராது. ஆகவே இவ்விஷயத்தை நாடகக் கம்பெனித் தலைவர்களும் நாடக சபை கண்டக்டர்களும் சற்றே கவனிப்பார்களாக.

அன்றைத்தினம் நாடக ஆரம்பத்திற்குமுன், வேஷம் தரிக்கும் இடத்தில் எந்நேரமும் எனக்கு ரங்கவடிவேலுவின் ஞாபகமே வந்துகொண்டிருந்தபடியால், ஜனங்கள் உட்காரு மிடத்திற் போயிருந்தால், கொஞ்சம் இந்த வருத்தத்தை மறந்திருக்க முடியுமென்று எண்ணினவனாய் அங்கு போனேன், வெளியிற் போனவுடன்

னைக்கு மற்றொரு சங்கடம் நேர்ந்தது. அங்கு நாடகத்தைப் பார்க்க வருபவர்களெல்லாம், இவர் இன்று நாடகமாடவில்லையா என்று கேட்க ஆரம்பித்தனர். உலையிலிருந்து எரியில் வீழ்வது போல் இதென்ன பெரும் கஷ்டமாய் முடிந்ததென வெண்ணி, திரும்பி நாடக மேடைக்குள்ளே போய்ச்சேர்ந்தேன். அன்றைத் தினம் அ. கிருஷ்ணசாமி ஐயர் லீலாவதியாக நன்றாய் நடித்த போதிலும், அநேகர் எனதுயிர் நண்பர் சி. ரங்கவடிவேலு சுலோசனையாக நடிக்க வில்லையே யென்று குறை கூறியதாகக் கேள்விப் பட்டேன். புதிதாய் நாடக பாத்திரங்கள் எடுத்துக்கொண்ட, ஸ்ரீனிவாசராகவாசாரிக்கும், எம். ராம கிருஷ்ண ஐயருக்கும், அவர்கள் பாகத்தை புராம்ட் செய்வதில் கவனத்தைச் செலுத்தினவனாய், ரங்கவடிவேலு இல்லாத குறையை மறந்திருந்தேன். நாடகம் பூர்த்தியானவுடன், எப்படியாவது சபையின் பெயர் கெடாமல், மற்றவர்களைக்கொண்டு நாடகத்தைப் பூர்த்தி செய்து வைத்தோமேயென்று சந்தோஷப்பட்டேன். இருந்தபோதிலும் இதைத்தான் ஒருவாறு முடித்தோம், இன்னும் நடத்தவேண்டிய இரண்டு மூன்று நாடகங்களுக்கு ரங்கவடிவேலு இல்லாமல் என் செய்வது என்னும் திகில் என் மனதில் குடிகொண்டது.

மறுநாள் எனது நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயர் எழுதிய "பீஷ்மர் ஜனனம்" என்னும் நாடகத்தை நடத்தினோம். இதில் ரங்கவடிவேலுவுக்கு பாத்திரம் ஒன்று மில்லாத படியால், கஷ்டமில்லாமற் போயிற்று. ஆயினும் இந்நாடகத்திற்கு ஜனங்களே வரவில்லை. முப்பது நாற்பது ரூபாய் தான் வசூலாயது! ரங்கவடிவேலு இல்லாத குறையின் அளவை அப்பொழுதுதான் எங்கள் சபையோரும் நானும் அறிந்தோம். இன்றைத்தினம் நாடக ஆரம்பத்தில், திருச்சிராப்பள்ளியில் காலவரிஷி நாடக சம்பவம் மாதிரி, நாடகம் பார்க்க வந்திருந்த ஜனங்களைவிட, நாடகமாடும் ஆக்டர்கள் அதிகமாயிருந்தனர். அதன் பேரில் முக்கிய ஆக்டர்களெல்லாம் தளர்ந்த மனமுடையவர்களாய், நான் என்ன சொல்லியும் கேளாமல், ஒன்று பாதியாக நாடகத்தை ஆடிமுடித்தனர். போதாக்குறைக்கு அன்று இரவு நெல்வேலியப்பர் கோயிலில் ஐந்தாம் நாள் ரிஷப வாகன உற்சவம்; கோயிலதிகாரிகளில் சிலர் எங்களுக்கு தெரிந்தவர்

களாயிருந்த படியால், ஓரிடத்தில் சுவாமியை நிறுத்தி வைத்து, தர்சனத்திற்காக எங்களை யெல்லாம் வரும்படி சொல்லியனுப்பினர். இதைக் கேட்டவுடன் சாதாரணமாக மூன்றரை நான்கு மணி பிடிக்கும் நாடகத்தை 2-மணி நேரத்திற்குள் முடித்துவிட்டார்கள்; எனக்கு நகைப்பையும் வருத்தத்தையும் உண்டு பண்ணின ஒரு சமாசாரத்தை இங்கெழுதுகிறேன். தாசராஜனுடைய மகளாகிய பரிமளகந்தியை சந்தனு மணக்கும் காட்சியானது சாதாரணமாகக் குறைந்த பட்சம் பத்து நிமிஷமாகும். இதை தாசராஜனாக வேஷம் பூண்ட எம். துரைசாமி ஐயங்கார், ஒரு நிமிஷத்தில் முடித்து விட்டார்! காட்சி ஆரம்பித்தவுடன், தாசராஜன் ஒரு சேவகனைப் பார்த்து, "அடே பூமாலையைக் கொண்டுவாடா" என்று கட்டளையிட்டு, அதை வாங்கித் தன்மகள் கையில் கொடுத்து சந்தனு கழுத்திற் போடச் செய்து, காட்சியை முடித்து விட்டார்! படுதா இறங்கியவுடன் "இது, என்ன துரைசாமி இப்படிச் செய்தாயே!" என்று கேட்க, "எல்லாம் இவ்வளவு போதும் வந்திருக்கும் ஜனங்களுக்கு" என்று பதில் கூறினர். அதைக்கேட்டபோது, எனக்கு நகைப்பு அதிகமாயிருந்ததோ துக்கம் அதிகமாயிருந்ததோ சொல்ல அசக்தனாயிருந்தேன்! உடனே ஆக்டர்களெல்லாம் வேஷங்களைக் களைந்து விட்டு, மாடவீதிக்குப்போய் ஸ்வாமி தரிசனம் செய்தோம். அப்பொழுது என் வழக்கப்படி நெல்வேலியப்பரை ஸ்தோத்திரஞ் செய்து விட்டு, முடிவில், "என் அப்பா, எங்கள் சபையின் பெயர் இவ்வாறு கெடாவண்ணம் கடாட்சித் தருளவேண்டும் எப்படியாவது" என்று பிரார்த்தித்தேன்.

மறுநாள் காலையில் நான் துயில் நீத்து எழுந்தவுடன் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு சென்னையிலிருந்து மறுபடியும் திருநெல்வேலிக்கு வருவதாகத் தந்தி வந்தது. இதற்கு முன்பாக ரங்கவடிவேலு இல்லாததால் நேர்ந்த கஷ்டங்களையெல்லாம் எடுத்து எழுதி என் தமயனார் ஆறுமுக முதலியாருக்கு, எப்படியாவது ரங்கவடிவேலுவின் சகோதரிக்கு சஞ்சயனம் முடிந்ததும், மறுபடி திருநெல்வேலிக்கு வரும்படியாகப் பிரயத்னம் செய்து பாருங்கள் என்று ஒரு நிருபம் அனுப்பியிருந்தேன். அதன்மீது அவர், தன் மாமனாராகிய திவான்பஹதூர் ராஜரத்தின முதலியார் மூலமாக, ரங்கவடி

வேலுவின் நெருங்கின பந்துக்களுக்குச் சொல்லி, நடந்தது நடந்து விட்டது அதற்காக வருத்தப்பட்டுக்கொண்டிருப்பதில் என்ன பிரயோஜனம்; ரங்கவடிவேலு போகாததால் ஒரு சபையின் காரியங் கெட்டுப்போய்விடலாகாது, இதில் தவறொன்றுமில்லை, சஞ்சயனம் ஆனவுடன் ரங்கவடிவேலு மறுபடி திருநெல்வேலிக்குப் போகலாம், என்று சொன்னாராம். அதன்மீது தனது பந்துக்களும் ஒப்புக் கொள்ள ரங்கவடிவேலு மறுநாள் நெல்வேலிக்குப் போவதாகத் தந்தி கொடுத்தார்.

இங்ஙனம் நேர்ந்தது தெய்வாதீனம், தெய்வ கடாட்சம், என்று நினைக்கிறேன்; நெல்வேலியப்பர் என் பிரார்த்தனைக்கிணங்கி இவ் வாறு செய்தார் என்று நான் உறுதியாய் நம்புகிறேன். இதை வாசிக்கும் நண்பர்களில், யாராவது நாஸ்தீகர்களாயிருந்தால் அவர் கள் இதைப்பற்றி "என்ன மூட புத்தியுடையவனாயிருக்கிறான் இவன்" என்று நகைக்கலாம். அப்படிச் செய்வார்களாயின் அவர் கள் மீது நான் குறை கூற மாட்டேன். ஆயினும், என் தீர்மா னத்தை நான் விடமாட்டேன்! ஜகதீசனைக் குறித்துப் பிரார்த்திக் கும் விஷயத்தில், டெனிசன் என்னும் பெயர்பெற்ற ஆங்கிலக் கவி, இவ்வுலகமானது கனவிலும் கருதாத பல விஷயங்கள் பிரார்த்தனை யினால் முடிவு பெறுகின்றன என்று எழுதி யிருக்கிறார். அதை உறுதியாய் நம்புவோர்களில் நான் ஒருவன்.

ரங்கவடிவேலு திருநெல்வேலி வந்து சேருமுன் மற்றொரு நாடகம் நடத்தினோம். அதாவது 'நற்குலதெய்வம்' என்பதேயாம். இதற்கும் வரும்படி மிகவும் குறைவாக விருந்தது. "ரங்கவடிவேலு இல்லாத குறைதானோ இப்படி ஜனங்கள் வாராதது?" என்று சந்தே கித்த சிலருடைய சந்தேகமும் இந்த இரண்டாவது நாடகத்தினால் அறவே நீங்கியது.

எனதுயிர் நண்பர் வந்து சேர்ந்தபின், "வேதாள உலகம்" என்னும் நாடகத்தை வைத்துக் கொண்டோம். அதற்கு ஜனங்கள் அதிகமாய் வந்திருந்தனர். பணவசூலும் அதிகமாயிருந்தது; நாட கமும் நன்றாய் இருந்ததெனப் புகழ்ந்தனர். சிலர் இந்நாடகத்தை மறுபடியும் இவ்விடம் ஆடவேண்டுமென்றும் கேட்டனர். ஆயினும்

இதைவிட "லீலாவதி சுலோசனா" நாடகத்தில் ரங்கவடிவேலு சுலோசனையாக நடிப்பதைப் பார்க்க வேண்டுமென்று, அதிக நாடக அபிமானிகள் விரும்புகின்றனர் என்பதை கேட்டறிந்தவர்களாய் எங்கள் நிர்வாக சபைக் கமிட்டியார் அதையே மறு சனிக்கிழமை போடவேண்டுமென்று தீர்மானித்தனர். இதனிடையில், பதினொரு நாட்களுக்குள் ஏழு நாடகங்கள் நடத்திய எங்கள் ஆக்டர்களுக்குச் சிரமபரிஹாரமாகவும், ரங்கவடிவேலு தன் துயரத்தைச் சற்று மறந்திருக்கக் கூடுமென்றும் யோசித்து, எங்கள் சபை ஆக்டர்களை யெல்லாம், குற்றாலத்திற்கு அழைத்துக்கொண்டு போக ஏற்பாடு செய்தேன். அவ்வாறே திருக்குற்றாலம் சென்று, அங்கு நீர் விழும் அருவியில் எல்லோரும் பன்முறை ஸ்நானம் செய்து, கோயிலுக்குப் போய் ஸ்வாமி தர்சனம் செய்து அங்கு மலைக்காட்சிகளையெல்லாம் சுற்றிப்பார்த்து இரண்டு தினம் கழித்தோம். நாடக தினம் சாயங்காலம்தான் திருநெல்வேலி வந்து சேர்ந்தோம். அன்றிரவு, ஒரு வாரத்துக்கு முன்தான் ஆடிய நாடகமாயிருந்தபோதிலும், மறுபடியும் நாடகக் கொட்டகை நிரம்ப ஜனங்கள் வந்திருந்தனர்; சற்றேறக்குறைய 800 ரூபாய் வசூலாயது. வந்திருந்தவர்களெல்லாம் நாடகத்தை மிகவும் மெச்சினர்.

மறுநாள் திருநெல்வேலி வாசிகள் எங்கள் சபையாருக்கு ஒரு விருந்தளித்தனர். பிறகு சென்னபட்டணம் வந்து சேர்ந்தோம். இம்முறை திருநெல்வேலியில் நாடகமாடினதின் வரும்படியில் செலவுபோக நிகரம் ரூபாய் 673-3-7 எங்கள் கட்டடபண்டுக்குச் சேர்த்தோம். இதன்றி நாங்கள் இங்கு நாடகம் நடத்தியதின் பலனாக எங்கள் சபையைப் போன்ற ஒரு சபை இங்கும் சீக்கிரம் ஸ்தாபிக்கப்பட்டது. இதற்கு எங்கள் சபையின் பெயரை ஒட்டி சற்குண விலாச சபை என்றே பெயர் வைத்தனர். இதன் முக்கிய ஆக்டர் ஸ்ரீமான் சுப்பராயலு நாயுடுவின் விடாமுயற்சியினாலும் ஊக்கத்தினாலும், இச்சபை இன்றளவும் வளர்ந்தோங்கி வருகிறது; இச்சபையார் பெரும்பாலும் நான் எழுதிய நாடகங்களையே ஆடி வருகின்றனர்.

இவ்வருஷம் எங்கள் சபையானது மொத்தத்தில் 50 நாடகங்கள் ஆடியது; இதற்கு முந்தியும் இத்தனை நாடகங்கள் ஒரே வரு

ஷத்தில் ஆடியதில்லை; இதற்குப் பிந்தி ஒரு வருஷந்தான் இந்த எண் மீறப் பட்டது. தமிழில் மாத்திரம் 31 நாடகங்கள் ஆடினோம், இதை வாசிக்கும் எமது சபை அங்கத்தினருட் சிலர், தற்காலம் இரண்டு மூன்று நாடகங்கள் கொடுப்பதே கஷ்டமாயிருக்கிறதே யென்று, கொஞ்சம் பொறுமை கொள்ளக்கூடும். டிசம்பர் மாத விடுமுறையில், எங்களுக்கு விக்டோரியா பப்ளிக் ஹால் மேல்மாடி கிடைக்காதபடியால், நாங்களிருக்கும் கீழ் ஹாலிலேயே, ஒரு ரங்கம் ஏற்படுத்தி, அதில் 10 நாடகங்கள் ஆடினோம். இந்தச் சிறிய ரங்கத்தில் முக்கோடி ஏகாதசியன்று "காதலர் கண்கள்" என்னும் நாடகத்தை நடத்தினோம். இதைப்பற்றிய சிறு கதையொன்றுண்டு. முக்கோடி ஏகாதசியன்று என்ன நாடகம் போடுவது என்று எங்கள் நிர்வாக சபையில் பேச்சு வந்தபொழுது, எனது நண்பர் சத்தியமூர்த்தி ஐயர் அவர்கள் "எந்த நாடகமாவது சம்பந்தம் போடட்டும். சாரங்கதரா நாடகம் மாத்திரம் வேண்டாம்" என்று சொன்னார். "அப்படியே ஆகட்டும்" என்று தலை யசைத்து, சாரங்கதர நாடகத்தை விடச் சிருங்கார ரச மதிகமாயுள்ள "காதலர் கண்கள்" என்னும் நாடகத்தைப் போட்டேன்! அக்காலம் எனக்கு நாற்பத்திரண்டு வயதாகியும் பால்யக்குறும்பு என்னை முற்றிலும் விட்டகலவில்லை போலும்!

எங்கள் சபையின் அங்கத்தினரெல்லாம் வந்தாலே இடம் போதாத இச்சிறிய ரங்கசாலையில், எப்படி நமக்குப் பணம் வசூலாகும் என்றுபலர் சந்தேகித்தனர்; ஆயினும், இங்கு நடத்திய நாடகங்களில் செலவுபோக ரூபாய் 500 கட்டிட பண்டுக்குச் சேர்த்தோம். நாடகங்கள் எங்கு ஆடினாலும் என்ன, ஜனங்களை ஆகர்ஷிக்கும் சக்தி ஆக்டர்களிடம் இருக்கையில், எங்கும் வந்து சேர்வார்கள்; பழுத்த பழங்கள் நிறைந்திருக்கும் மரத்திற்குப் பட்சிகள் தாமாகப் போய்ச் சேருகின்றன.

1916-ஆம் வருஷமும் எங்கள் சபையின் சரித்திரத்தில் ஒரு முக்கியமான வருஷமாம். ஏனெனில், இவ்வருஷம் சபை ஆரம்பித்து 25 வருஷங்கள் பூர்த்தியானபடியால், சபையின் "சில்வர் ஜுபிலி" கொண்டாட்டம் நடைபெற்றது. இக்கொண்டாட்

டத்தை சவுத் இந்தியன் ஆத்லடிக் அசோசியேஷன் மைதானத்தில் ஒரு பெருங் கொட்டகையில் நடத்தினோம். மாட்சிமை தங்கிய சென்னைக் கவர்னர் அக்கிராசனாதிபதியாக விஜயம் செய்தார். சென்னையிலுள்ள சீமான்களையும் சீமாட்டிகளையும் வர வழைத்தோம். சபையின் "முற்கால நிலை, தற்கால நிலை, பிற்கால நிலை" என்பதைப் பற்றி ஓர் வியாசம் எழுதி, அதை நான் வாசித்தேன். பிறகு தெலுங்கு இங்கிலீஷ் தமிழ் நாடகங்களில், சில காட்சிகளை ஆடினோம்.

இவ்வருஷம் எங்கள் சபையின் பிரசிடெண்டாகவிருந்த டி. வி. சேஷகிரி ஐயர் அவர்கள் ஐகோர்ட்டு ஜட்ஜாக நியமிக்கப்பட்ட படியால் அவருக்கு சபையில் ஒரு விருந்தளித்தோம். அவர் அதற் காக சபையோருக்கு வந்தனம் அளித்த பொழுது கூறிய ஒரு வேடிக்கையான சமாசாரத்தை இங்கெடுத்தெழுத விரும்புகிறேன். "யாருக்காவது ஹைகோர்ட்டு ஜட்ஜாகவேண்டுமென்று விருப்ப மிருந்தால், அவர்களை சுகுணவிலாச சபையைச் சேரும்படி நான் கேட்பேன். காலஞ்சென்ற பி. கிருஷ்ணசாமி ஐயர் சபையின் அங் கத்தினரானார்; உடனே ஹைகோர்ட்டு ஜட்ஜானார். பிறகு பி. ஆர். சுந்தர ஐயர், சபையைச் சேர்ந்தார்; உடனே ஹைகோர்ட் ஜட் ஜானார். குமாரசாமி சாஸ்திரியாரும் கே. ஸ்ரீனிவாச ஐயங்காரும்மப் படியே! அவருக்குப் பிறகு நான் வந்தேன்; எனக்கும் இப்பதவி கிடைத்தது! ஆகவே உங்களுள் யாருக்காவது உயர்ந்த உத்யோகம் வேண்டுமென்றால், சுகுணவிலாச சபையைச் சேருங்கள்!" என்று வேடிக்கையாய்க் கூறினார். அவர் கூறியது ஒரு விதத்தில் உண் மையே; பிறகு ஹைகோர்ட்டு ஜட்ஜுகளாகிய, கனம் சி. கிருஷ் ணன், வெங்கடசுப்பராவ், ராமேசம், மாசிலாமணி பிள்ளை முதலி யோரும் ஒருகால் சுகுணவிலாச சபையின் அங்கத்தினராயிருந்தவர் களே!

இவ்வருஷம் மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியின் பிறப்புநாள் கொண்டாட்டத்தில், கௌரவப்பட்டம் அளிக்கும் பொழுது, எனக்கு ராவ் சாஹெப் என்கிற பட்டம் கொடுக்கப்பட்டது. இது போன்ற பட்டங்களைப் பெற அநேகர் பெரும் பிரயத்னப்படுவதா

கக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆயினும் நான் இதன்பொருட்டு ஒரு பிரயத்தனமும் எடுத்துக்கொள்ளவில்லையென்பதை நம்பும்படி என் நண்பர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். கெஜட்டில் இந்த விளம்பரம் வந்தபொழுது நான் கொழும்பில் நாடகமாடிக் கொண்டிருந்தேன். இதில் எனக்கு அதிகத் திர்ப்தியைத் தந்தது என்னவெனில், எனது பந்துக்களுக்கும் நண்பர்களுக்கும் இது சந்தோஷத்தைத் தந்ததேயாம். அன்றியும் இதை எங்கள் சபைக்குச் செய்த ஓர் கௌரவமாகக் கொண்டேன். எனக்கு இப்பட்டம் கொடுத்ததைப்பற்றி, மதராஸ் டைம்ஸ் என்னும் அக்காலம் பிரசுரிக்கப்பட்டுவந்த தினசரிப்பத்திரிகையில் அதன் பத்திராதிபராகிய கிளின்பார்லோ என்பவர், நான் தமிழ் நாடகத்திற்காக எடுத்துக்கொண்ட சிரமத்தைப்பற்றி ஏதோ (நான் எண்ணுகிறபடி அதிகமாய்) புகழ்ந்து பேசி, எனக்குப் பட்டம் கொடுத்தது, தமிழ் நாடகத்திற்கே ஒரு கௌரவமாகும் என்று கூறி, கடைசியில் "தற்காலம் இங்கிலாந்தில் வருஷா வருஷம் கௌரவப்பட்டங்கள் கொடுக்கும்பொழுதெல்லாம், சிறந்த நாடகமாடுபவர்களுக்கும், 'சர்' என்கிற பட்டம் கொடுப்பது வழக்கமாயிருக்கிறது. இந்தியா தேசத்திலும் இவ்வாறு வழக்கம் ஆரம்பித்தது சிலாகிக்கத் தக்கதே" என்று எழுதியுள்ளார். அவர் ஆங்கிலத்தில் எழுதியதை நான் தமிழில் மொழி பெயர்த்துள்ளேன். இவர் மாத்திரமன்று, இதைப் பற்றி எழுதிய ஒவ்வொரு பத்திராதிபரும் நான் சுகுண விலாச சபைக்காக உழைத்ததைப்பற்றிப் புகழ்ந்தெழுதினார்கள். இப்பட்டத்தின் சன்னதை எனக்கு சென்னை கலெக்டர் அவர்கள் தர்பாரில் கொடுத்தபொழுது சுகுண விலாச சபைக்காகவும் தமிழ் நாடகத்திற்காகவும் நான் உழைத்ததைப்பற்றி எடுத்துப் பேசியதுதான் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. எனக்குத் தெரிந்தவரை இந்தியாவில் நாடக சம்பந்தமாக ஒருவருக்குப் பட்டப்பெயர் கொடுத்து இதுதான் முதன்முறை என்று எண்ணுகிறேன்.

இவ்வருஷம் சபையின் 25-ம் ஆண்டு நிறைவேறிய கொண்டாட்டத்திற்கேற்றபடி 52 நாடகங்கள் ஆடினோம். இதில் இரண்டு நாடகங்கள், எங்கள் சபைக்காக பல வருஷங்களாக உழைத்துவந்த அ. கிருஷ்ணசாமி ஐயர், உதவிக்காக ஆடி அவற்றின் வரும்படியா

கிய ரூபா 863-12-0 அவருக்குக் கொடுத்தோம். மேற்கண்ட 52 நாடகங்களுள், 22 வெளியூர்களில் ஆடப்பட்டன. அவற்றைப் பற்றி சற்று விவரமாய் எழுதவேண்டியவனாயிருக்கிறேன்.

ஈஸ்டர் விடுமுறையாகிய ஆறு நாட்களில் நெல்லூருக்குப் போனோம். தெலுங்கு கண்டக்டராகிய டி. வெங்கடாமண ஐயர் சபையின் தெலுங்குப் பிரிவு இவ்வருஷம் தெலுங்குப் பிரதேசமாகிய நெல்லூருக்கும் போகவேண்டுமென்று ஏற்பாடுசெய்தார். நான் ஒருவேளை இதற்கு ஏதாவது ஆட்சேபனை செய்வேன் என்று நினைத்தாரோ என்னவோ; அவர் என்னை இதைப்பற்றிக்கேட்டபொழுது, சுகமாய்ப் போய் வாருங்கள் என்று விடைகொடுத்தேன். அதன் பேரில் நெல்லூரில் நான்கு நாடகங்கள் கொடுக்கவேண்டுமென்று சபையில் தீர்மானிக்கப்பட்டது. அதன்மீது நெல்லூர் வாசிகளுக்கு சபை அங்கு வருவதைப்பற்றி எழுதிய பொழுது அவர்களில் அநேகர் ரங்கவடிவேலுவையும் என்னையும் பார்க்கவேண்டுமென்று விருப்பமிருப்பதாகவும், அதன் பொருட்டுத் தமிழ் நாடகம் ஒன்றும் அங்கு ஆடவேண்டுமென்றும் தெரிவித்தார்கள். அப்படிப்பட்ட காகிதங்கள் சிலவற்றை நான் நேரில் பார்த்தேன்; எங்கள் நிர்வாக சபையார், இதை யோசித்து, தமிழ் நாடகமொன்றும் இருக்கவேண்டுமென்று தீர்மானித்தார்கள். ஆகவே முடிவில், நான்கு தெலுங்கு நாடகங்களும், ஒரு தமிழ் நாடகமும் ஆடவேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டது. எனக்கு மாத்திரம் ஆரம்பமுதல் இப்பிரயாணத்தினால் சபைக்கு நஷ்டம் நேரிடுமென்றே தோன்றியது. ஆயினும் அதை வெளியிடுவேனாயின், சபையின் தெலுங்கு பிரிவின்மீது ஏதோ விருப்பமில்லாதபடியால் இவன் இப்படிச் சொல்கிறான் என்று நினைக்கிறார்களோ என்று, சும்மா இருந்துவிட்டேன். நெல்லூருக்குப் போவதைப் பற்றிச் சபையில் முதலில் பேச்சு வந்தபொழுதே, எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு "நாமும் போய் ஒரு தமிழ் நாடகமாடலாமே" என்று கேட்டார். அதற்கு நான் "நாமாக இதில் தலை நுழைத்துக்கொள்வது அழகல்ல, அன்றியும், இப்பிரயாணத்தினால் சபைக்கு நஷ்டம் வரும் என்று எனக்குள் ஏதோ சொல்கிறது. வேண்டாம், இதைப்பற்றிப் பிரஸ்தாபம் கூட செய்யாதே" என்று தடுத்தேன். அதன்பேரில் அவரும்

சும்மா இருந்துவிட்டார். பிறகு அகஸ்மாத்தாக மேற்சொன்னபடி ஒரு தமிழ் நாடகமும் போடவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்ட பொழுது, என்னுயிர் நண்பருக்கு மிகவும் சந்தோஷம்; எனக்கு மாத்திரம், இதனால் தெலுங்கு பிரிவினர்க்கு மனஸ்தாபம் உண்டாகி எப்படி முடியுமோ என்று நிம்மதியில்லாமலிருந்தது.

நெல்லூரில், எங்கள் சபைபிரசிடென்ட் சேஷகிரி ஐயர் அவர்கள் தமயனார் பங்களாவில் தங்கினோம். அவ்வூரில் லட்சுமிநரசா ரெட்டியார் டவுன் ஹாலில் நாடகங்கள் நடத்தினோம். முதல் நாடகம் "வரூதனி" என்பது. இது எனது நண்பர் ராமமூர்த்தி பந்துலுவால் தெலுங்கில் எழுதப்பட்டது; மனு சரித்திரக் கதையிலிருந்து எடுக்கப்பட்டது. சென்னையில் எங்கள் சபையார் இதைப் பன்முறை ஆடியிருக்கின்றனர்.

சென்னையில் இதை ஆடும்பொழுதெல்லாம் நல்ல வசூலாவது வழக்கம். இதில் எனது நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயர் மிகவும் நன்றாக வரூதினியாக நடிப்பார். கதாநாயகனாக நாடகாசிரியனாகிய ராமமூர்த்தி பந்துலு நடிப்பது வழக்கம்; அவர் மதுரைக்குப் போய் விட்டபடியால், அவருக்குப் பதிலாக எனது நண்பர் டாக்டர் டி. ஸ்ரீனிவாச ராகவாசாரியார் நெல்லூரில் நடித்தார். இது நெல்லூர் வாசிகளுக்குப் பிடிக்கவில்லை போலும். முதலில் நாடகம் பார்க்க வந்த ஜனங்கள் மிகவும் குறைவாயிருந்தது; இரண்டாவது வந்தவர்களில் அநேகர் என்னிடம் நன்றாயில்லையென்று தெரிவித்தார்கள். இதற்குக் காரணம் என்னவென்று நான் விசாரித்ததில், ஸ்ரீனிவாச ராகவாசாரி ஆக்டு செய்வது நன்றாயிருந்த போதிலும், அவரது தெலுங்கு உச்சரிப்பு சரியாகவில்லை என்று பலர் கூறினர். என்னிடம் இவர்கள் கூறுவது வாஸ்தவம் என்று நான் ஒரு விதத்தில் ஒப்புக் கொள்ளவேண்டியவனாயிருந்தேன். சென்னையிலும் தெலுங்கு நாடகங்களில், தமிழர்கள் ஏதாவது பாத்திரங்களை எடுத்துக்கொண்டு நடிக்கும்போதெல்லாம், அவர்கள் ஆக்டு செய்வது எவ்வளவு நன்றாயிருந்தபோதிலும், தெலுங்குபாஷை பேசுவது சரியாயில்லை என்று தெலுங்கு அபிமானிகள் பலர் கூறக்கேட்டிருக்கிறேன்.

இவ்வூரில் இரண்டாவது நாடகமாக தெலுங்கில் "நந்தனர்" ஆடப்பட்டது. இதற்காக வேண்டி எம். துரைசாமி ஐயங்காரை, வேதியர் வேஷத்திற்காக வரவழைத்தோம். தெலுங்கில் "நந்தனர்" சென்னையில் ஆடும்பொழுதெல்லாம், ஜனக்கூட்டம் அதிகமாய் வருவது வழக்கம். ஆகவே இங்கும் அப்படி இருக்குமென வெண்ணி தெலுங்கு கண்டக்டராகிய வெங்கடரமண ஐயர், இதைத் தேர்ந்தெடுத்தார். இங்கு நாடகமாடியபொழுது எனக்கு ஞாபக மிருக்கிறபடி சுமார் 50 ரூபாய்தான் வசூலாயது! இதைக் கண்ட துரைசாமி ஐயங்கார் தான் பட்டணத்திலிருந்து வந்துபோகக் கொடுத்த ரெயில் சார்ஜுகூட ஆகாதுபோலிருக்கிறதே என்று துக் கப்பட்டார். அன்று நான் டிக்கட்டுகள் விற்குமிடத்தில் கொஞ்ச நேரம் நின்று கவனித்தேன். டிக்கட்டு வாங்க வந்த ஒரு தெலுங்கு மனிதர், நாடக விளம்பரத்தை வாங்கிப் படித்துப் பார்த்துவிட்டு அதில் "நந்தனர் சரித்திரமு" என்று அச்சிட்டிருப்பதைக்கண்டு "நந்தனர் ஏமிரா? நந்தனர்!" என்று நான் கேட்கும்படியாகக் கூறினர். பிறகு நான் விசாரித்ததில் சுத்த தெலுங்கில் நந்துடு என்று இருக்கவேண்டும் என்றும், நந்தனர் என்பது தமிழுக்குரிய தொடர் என்றும் சொன்னர்கள். ஆந்திர தேசத்தில் தங்கள் தேச பாஷையின்மீது அவ்வளவு அபிமான முண்டு அத்தேசத்தாருக்கு; இது நான் தவறு என்று சொல்ல மாட்டேன்.

இவ்விடம் மூன்றாவது நாடகம் "விஜயநகர ராஜ்யத்தின் அழிவு" என்பதை வைத்துக்கொண்டார் எங்கள் தெலுங்கு கண் டக்டர். இது கோலாசலம் ஸ்ரீனிவாசராவ் என்பவரால் எழுதப் பட்ட ஒரு மிகச் சிறந்த நாடகம். எனது நண்பர் பல்லாரி ராகவா சார்லு இதில் "பதான் ருஷ்தம்" என்னும் வேடம் தரிக்கும் போதெல்லாம், சென்னையில் தெலுங்கர்கள் ஒருவர் பாக்கியில்லா மல் வந்து பார்ப்பார்கள். தற்காலம் ஆந்திர நாடகங்கள் ஆடுவதில் இவரை விடக் கீர்த்தி பெற்றவர்கள் இல்லை என்னும்படி அவ்வளவு பிரசித்தி வாய்ந்தவர். இவருக்கு இணையான தெலுங்கு ஆக்டரை நான் கண்டதேயில்லை, இனி என் ஆயுளில் காணப்போகிறதுமில்லை யென்றே நினைக்கிறேன். எந்த வேஷம் தரித்தாலும், அந்தப் பாத் திரத்திற்கேற்றபடிச் சரியாக வேஷம் பூண்டு, அதை இப்படி நடிக்க

வேண்டுமென்று முன்னதாகவே தீர்க்காலோசனை செய்து, மிகவும் விமரிசையாக நடிப்பார். இவர் ஆடும் அநேக நாடகங்களில் இந்த ருஷ்தம் என்னும் பாத்திரமானது ஒரு மிகச்சிறந்ததென்பது என்னுடைய கொள்கை மாத்திரமல்ல, எல்லா தெலுங்கர்களுடைய கொள்கையுமாம். அன்றியும் இவர் தெலுங்கு நாட்டில் பிறந்து வளர்ந்து, "ஆந்திர நாடக பிதாமகன்" என்னும் பட்டப்பெயர் பெற்ற காலஞ்சென்ற கிருஷ்ணமாசாரியார் அவர்களுடைய நெருங்கிய பந்து. இப்படிப்பட்டவர் வந்து இந்நாடகத்தில் ஆக்டு செய்யப் போகிறாரே இதற்கு எப்படியும் தெலுங்கர்கள் அதிகமாக வருவார்கள் என்று எங்கள் கண்டக்டர் நம்பியிருந்தார். இந்த நாடகத்திற்கும் முதல் தெலுங்கு நாடகத்தைவிடக் குறைவாக ஜனங்கள் வந்தார்கள்! ஜனங்கள் வராமற் போனாற் போகிறது; நாடகமாடியது நன்றாயிருந்ததென ஒருவனாவது சொல்லவேண்டுமே! அதுவும் இல்லை. நாடக ஆரம்ப முதல் கடைசிவரை ஒரு கரகோஷமாவது கிடையாது! பாதி நாடகம் ஆடினபிறகு, எனது நண்பர் ராகவாசார்லு உள்ளே வேஷம் தரிக்கும் அறையில் நானிருக்குமிடம் வந்து ஆங்கிலத்தில் "சம்பந்தம், இனி இந்த ஊரில் நான் நாடகமே ஆடமாட்டேன்! ஒரு ரசிகனாவது கிடையாதா? எல்லாம் முண்டங்களாயிருக்கின்றனரே! இதற்காக என்னைப் பல்லாரியிலிருந்து ஏன் வரழைத்தீர்கள்?" என்று கோபத்துடனும் வருத்தத்துடனும் கூறினார். பிறகு நான் அவரைச் சமாதனப்படுத்தி, "அவர்கள் சந்தோஷிக்காமற் போனாற் போகிறது; நாங்கள் எல்லாம் பார்த்து சந்தோஷிக்கிறோம், நீ வா" என்று சொல்லி அவரை மிகுதி பாகத்தையும் ஆக்டு செய்யும்படிச் செய்தேன். பிறகு, ஸ்ரீநிவாச ராகவாசாரி துரைசாமி ஐயங்கார் முதலியோர்க்குத்தான், இவர்கள் தமிழர்கள் தெலுங்கு சரியாக உச்சரிக்க முடியவில்லை என்று கூறினார்கள். ராகவாசார்லு தெலுங்கராயிற்றே, இவரிடம் என்ன குறை என்று விசாரித்ததின் பேரில் இன்னொரு விஷயம் வெளியாயிற்று. இவ்வூரில் இதற்கு முன்பாகவே ஒரு தெலுங்கு நாடகசபை யிருந்ததாம். அதன் அங்கத்தினரில் சிலர், எங்கள் சபையின் தெலுங்கு நாடகங்களுக்கு அவ்வூரார் யாரும் போகக்கூடாது என்று கட்டுப்பாடு செய்ததாகக் கேள்விப்பட்டேன். "அரசமரத்தைப் பிடித்த சனி,

அதன் கீழிருந்த பிள்ளையாரையும் பிடித்தது" என்பதற்கிலக்காக எங்கள் சபை தெலுங்குப்பிரிவைப் பிடித்த சனி, ராகவாசார்லுவை யும் பிடித்தது.

நான்காவது நாடகம் 'புத்திமதி' என்பதை வைத்துக்கொண் டோம். இது சிறுத்தொண்டர் கதையைப்போன்றதாம்; இந்நாடக மானது சாயங்காலத்தில் ஆடப்பட்டது. "நல்லநாளிலேயே நாழிப் பால், கன்று செத்தால்?" என்னும் பழமொழிக்கிணங்க, இரவு நாடகத்திற்கே ஜனக்கூட்டம் வரவில்லையென்றால், சாயங்கால நாடகத்திற்கு என்ன வரப்போகிறது?

இவ்விடம் நாங்கள் கடைசியாக ஆடிய நாடகம் "லீலாவதி-சுலோசனு" எனும் எனது தமிழ் நாடகம். தெலுங்கு நாடகங் களின் கதியே இப்படியிருந்ததே, தமிழ் நாடகத்திற்கு யார் வரப் போகிறார்களென்று நான் வாஸ்தவமாய்ப் பயந்திருந்தேன். ஆயி னும் இந்நாடகத்திற்கு ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர். அன் றியும் ஆரம்பமுதல் கடைசிவரை நாடகம் நன்றாயிருக்கிறதெனப் புகழ்ந்தனர்! தெலுங்கு நாடகங்கள் எல்லாவற்றையும் விட, இந்தத் தெலுங்கு தேசத்தில் தமிழ் நாடகத்திற்கு வசூல் அதிகமாக வந் தது! நெல்லூரில் ஒரு தமிழ் நாடகமாடலாமா என்கிற கேள்வி, எங்கள் நிர்வாக சபை முன்பாக வந்த பொழுது, தெலுங்கு அங்கத் தினர் அதற்கு ஆட்சேபணை செய்தனர். அப்படி ஆட்சேபணை செய் தவர்களுக்குப் புத்திமதியாக எல்லாம் வல்ல இறைவன் இவ்வாறு செய்து வைத்தார்போலும்!

இங்கு, நெல்லூர் புரொக்ரெசிவ் யூனியன் என்னும் சபையார், எங்கள் சபைக்கு ஒரு விருந்தளித்தனர். மறுநாள் புறப்பட்டு சென்னைவந்து சேர்ந்தோம். இந்த நெல்லூர் பிரயாணத்தில், எங் கள் சபைக்குண்டான நஷ்டம் ரூபாய் 535-1-3 இதன் பிறகு எங் கள் சபையின் தெலுங்கு பிரிவினர், எந்த ஊருக்கும் தாங்களாகப் போகவேண்டுமென்று பிரயத்னப்படவில்லை. எங்கள் சபை நெல் லூர் பிரயாணம் போய் வந்ததில், நான் அறிந்து கொண்ட இரண்டு புத்திமதிகள் என்னவென்றால், ஒன்று எந்த நாடகத்தையாவது ஆடவேண்டுமென்றால் கூடுமானவரையில் நாடகமெழுதப்பட்டுள்ள

பாஷையையே தாய்பாஷையாக உடையவர்களைக்கொண்டே அதை நடத்தவேண்டுமென்பது; இரண்டாவது, ஏதாவது ஒரு விஷயம் ஒருவரால் பிரேரேபிக்கப்பட்டால் அதற்கு, நியாயமின்றி பொறுமையினால் ஏதாவது நாம் ஆட்சேபனை செய்தால், அதன் பலனை நாம் அநுபவிக்கவேண்டுமென்பதாம்.

பிறகு இவ்வருஷம் கோடைகால விடுமுறையில் மறுபடியும் லங்கைக்கும் போகவேண்டுமென்று தீர்மானித்தோம். இரண்டாம் முறை லங்கைக்கு நாங்கள் போய்த் திரும்பும் பொழுது, அங்குள்ள எமது நண்பர்கள் மறுமுறை எப்பொழுது இங்கு வருவீர்கள் என்று கேட்டதற்கு இரண்டு வருஷம் கழித்து வருகிறோம் என்று சொல்லியிருந்தோம். அதன்படியே அங்கு போகத் தீர்மானித்து, வாரிக் மேஜர் என்பவருக்கு, முன் மாதிரியே அவர் ஏற்பாடுகளை யெல்லாம் ஒப்புக்கொள்ள முடியுமா, என்று எழுத அவர் "அப்படியே ஆகட்டும். மிகவும் சந்தோஷம்" என்று ஒப்புக்கொண்டு தந்தி கொடுத்தார். அதன்பேரில் மனதில் ஒரு கவலையுமில்லாமல் ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தோம். இம்முறை லங்கைக்குப் போகும் வழியில் மதுரையில் தங்கி, அங்கு நான்கு நாடகங்கள் ஆடவேண்டுமென்று தீர்மானித்தோம். லங்கையில் யாழ்ப்பாணத்திற்கும் போகவேண்டுமென்று முதலில் தீர்மானித்தோம். ஏதோ சில காரணங்களால் யாழ்ப்பாணம் போக முடியாமற் போயிற்று. அதற்குப் பதிலாகத் திரும்பி வரும்பொழுது கும்பகோணத்தில் சில நாடகங்கள் ஆடினோம். இதுதான் எங்கள் சபை எடுத்துக் கொண்ட வெளியூர் பிரயாணங்களில் மிகவும் நீடித்தது. சென்னையிலிருந்து புறப்பட்டுத் திரும்பிவர சுமார் 45 நாட்கள் பிடித்தன. இப் பிரயாணத்தில் மொத்தத்தில் 17 நாடகங்கள் ஆடினோம். தற்காலத்தில் வெளியூருக்குப் போய் இரண்டொரு நாடகங்கள் ஆடுவதென்றால் பிரமாதமென்று நினைக்கும் எனது இளைய நண்பர்கள் இதைக் கொஞ்சம் கவனிப்பார்களாக. உற்சாகமிருந்தால் எதையும் முடித்து வைக்கும் என்பது என் கருத்து.

மதுரையில் ஆடிய நான்கு நாடகங்களுக்கும் ஜனங்கள் ஏராளமாய் வந்திருந்தனர். நான்காவது நாடகத்தின் முடிவில், ஹானரபில்

கே. ராம ஐயங்கார், மதுரை வாசிகள் சார்பாக அவ்விடம் நாடகங்களாடினதற்காகச் சபையைப் புகழ்ந்து வந்தனம் அளித்தனர். எனது நண்பர்கள் கே. வைகுண்டம் ஐயரும், பி. ராமமூர்த்தி பந்துலுவும், சபையோருக்கு விருந்து அளித்தனர். எட்டையாபுர ஜமீன்தார் அவர்கள் தன்னுடைய பெரிய வீடு ஒன்றை நாங்கள் தங்கியிருப்பதற்காகக் கொடுத்தார். இவ்விடத்தில் நாடகங்கள் ஆடினதில் எனக்கு இரண்டு மூன்று சமாசாரங்கள் நான் நன்றாய் ஞாபகமிருக்கின்றன. கடைசி நாடகமாகிய லீலாவதி-சுலோசனை நடத்திய தினம் மறுநாள் மதுரையை விட்டுப் போகவேண்டியிருக்குமே, ஆகவே, இன்று போய் மீனாட்சி சுந்தரேஸ்வரரைத் தெரிசித்து விடைபெற்றுப் போகவேண்டுமென்று யோசனை பிறந்தது. இதன்பேரில் சாயங்காலம் எல்லோரும் சாப்பிட்டுவிட்டு, நாடகக் கொட்டகைக்கு ஆக்டர்களெல்லாம் புறப்பட, நான் மாத்திரம் நீங்கள் போங்கள் நான் கோயிலுக்குப் போய் வருகிறேன் என்று சொல்லிவிட்டு, கோயிலுக்குப் போனேன். கோயிலில் தெரிசனம் செய்துகொண்டு திரும்புவதற்குள் கொஞ்சம் இருண்டு விட்டது. அதன் பேரில், கொட்டகைக்குப்போக வழி தெரியாதவனாய், ஏறக்குறைய ஒருமணி நேரம் தெருத் தெருவாய் சுற்றிக்கொண்டிருந்தேன்! எந்தெந்தத் தெருக்களில் அலைந்தேனோ மீனாட்சிக்குத் தான் தெரியும்! நாழியாய் விட்டதே, நம்மைக் காணோமென்று கொட்டகையில் தேடுவார்களே, காலம் பொறுத்துச் சென்றால் வேஷம் தரிக்க நாழிகையாகுமே, என்ன செய்வது என்று மிகக்கலங்கினேன். சென்னையில் நான் பிறந்து வளர்ந்து இத்தனை வருஷம் பழகியபோதிலும், இன்றைக்கும் சில தெருக்கள் தவிர மற்றத் தெருக்களில் கொண்டு போய்விட்டால், இராக்காலத்தில் நட்சத்திரங்களைப் பார்த்துக்கொண்டு, ஏதாவது தெரிந்த தெரு வருகிற வரையில் போய், பிறகு தான் வீட்டுக்குப்போக முடியும்! இதை நான் ஒரு பெருமையாகச் சொல்லவில்லை; இது பெரும் தப்பிதம்; இது நான் வெட்கப்படவேண்டிய விஷயமே யொழிய வேறன்று; சென்னையிலேயே இப்படியிருக்க, புது ஊராகிய மதுரையில் நான் வழியறிவது அசாத்தியமாயிருந்தது. புது ஊரில், நாடகக்கொட்டகைக்கு வழியெப்படி யென்று கேட்பதென்றால் மிகவும் வெட்கமாயிருந்தது. எங்கு சுற்றிவந்தாலும் கோயிலுக்கு கொண்டு

போய் விட்டது! இதென்னடா கஷ்டம் என்று நான் கலங்கிக் கொண்டிருக்கையில், தெய்வாதீனத்தால், யாரோ ஒரு பெரிய மனிதர் (அவர் இன்னாரென்று எனக்கு இன்றளவும் தெரியாது) ஒரு மோட்டார் வண்டியில் வந்து, என்னைப்பார்த்து அதை நிறுத்தி, "எங்கே நடந்து போகிறீர்கள்?" என்று கேட்டார். அதன்பேரில், எனது வெட்கத்தையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கி, அவரிடம் நாடகக் கொட்டகைக்குப் போக வழி தெரியாது தடமாடிக்கொண்டிருக்கிறேன் என்று உண்மையை உரைத்தேன். அதன் பேரில் அவர் நகைத்து, 'வாருங்கள் என்னுடன்' என்று சொல்லி, என்னைத் தன் வண்டியில் ஏற்றிக்கொண்டு என்னை நாங்கள் நாடகமாடிய மீனாட்சி நாடக சாலைக்கு கொண்டுபோய்விட்டார். போகிறவழியில், என்னுடன் அவர் பேசியவார்த்தைகளால், அவர் என்னை நாடகமாடும் பொழுது, ஒவ்வொருதினமும் மேடையின்மீது பார்த்தவர் என்பதை அறிந்தேன். அவர் என்னை நன்றாயறிந்தவராய்த் தோன்றிய போது, 'நீங்கள் யார்?' என்று அவரை நான் கேட்க வெட்கப்பட்டேன். நாடகசாலையண்டை நான் இறங்குவதன்முன் அவருக்கு நான் அவர் செய்த உதவிக்காக வந்தனம் அளிக்க, இதை ஒரு பொருட்டாக வந்தனம் அளிக்கவேண்டுமோ என்று சிரித்துவிட்டு, இராத்திரி உங்களை மேடையின்பேரில் காண்கிறேன் என்று சொல்லி விட்டுப்போனார். மறுபடி நான் மதுரைக்குப் பன்முறை போன போதிலும், அவரை என் துர் அதிர்ஷ்டத்தால் மறுபடி சந்திக்க நேரிடாமலிருக்கிறது.

இவ்விடத்தில் இரண்டாவது நினைவு என்னவென்றால்- "லீலாவதி-சுலோசனா" நாடகத்தில் நான் ஸ்ரீதத்தனாக "கைவளை" காட்சியின்ஆரம்பத்தில் நடித்துக்கொண்டு வரும்பொழுது, ஸ்ரீதத்தன் தகப்பனார் அவளை மணம் செய்து கொள்ளும்படியாகச் சொல்லும் பொழுது, மூர்ச்சையாக வேண்டியிருக்கிறது; இக்காட்சியை எனது நண்பர் ஸ்ரீநிவாசராகவாசாரியுடன் பன்முறை ஆடியிருக்கிறேன்; நான் மூர்ச்சையாகும் போதெல்லாம் என் பக்கலில் பின்னால் நின்று கொண்டிருந்து, தன் கரங்களில் என்னைத் தாங்கிக் கொள்வார்; அன்றைத்தினமும் அவர் பின்னால் இருக்கிறோன நினைத்து மூர்ச்சையானதுபோல் நடிக்க, அவர் ஏதோ கார

ணத்தினால் வேறொரு இடத்தில் நின்று கொண்டு ஏதோ வேறு கவனமாய் இருக்க, 'படால்' என்று கீழே விழுந்தேன். விழுந்த வேகத்தில் காலிலும் தோளிலும் இரண்டு இடங்களில் நன்றாய் காயம்பட்டு, ரத்தம் பெருக ஆரம்பித்தது. நான் எந்து சன்யாசிச் சட்டையின் கீழாகப் பனியனும், காலுக்கு சாக்ஸும் போட்டுக் கொண்டிருந்தபடியால், ரத்தம் பெருகியது அவ்வளவாக வெளியில் தெரியவில்லை. நான் விழுந்தபொழுது, அங்கு மேடையின் பேரில் வைத்திருந்த தோட்டச் சட்டம் ஒன்றில், என் தலைபடாமல், ஒரு மயிரிழை தவறியது. உடம்பில் பட்டகாயம் தலையில்பட்டிருந்தால் பெரும் ஆபத்தாய் முடிந்திருக்குமென்று எண்ணுகிறேன். இந்த ஆபத்தினின்றும் மீனாட்சி சுந்தரேஸ்வராள் காப்பாற்றினார்கள் என்னை என்று சந்தோஷப்பட்டேன். உடனே எனது நண்பர் ஓடிவந்து தான் செய்த தப்பிதத்தை அறிந்தவராய், என்னைக் கை கொடுத்துத் தூக்கும்பொழுது, 'வாத்தியார் என்னை மன்னிக்க வேண்டும்' என்று வேண்டினார் மெல்லிய குரலுடன், நானும் அதே குரலில் ஹாலில் வந்திருப்பவர்கள் அறியாதபடி, 'அது போனால் போகிறது. உன் பாடத்தைப் பார்' என்று சொல்லிவிட்டு, மறு காட்சியில் நான் ராஜகுமாரன் உடையில் வரவேண்டியிருந்தபடியால், என் சன்யாசியுடையைக் கழற்றும் பொழுதுதான், எனக்குப் பட்ட காயங்களைப் பார்த்தேன். உடனே அந்தக் காயங்களைக் கட்டிக்கொண்டு, பிறகு மற்றக் காட்சிகளை நடத்தினேன்.

இவ்விடத்தில் நடந்தவற்றுள் மூன்றாவதாக ஞாபகமிருக்கும் விஷயம், எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவின் நர்த்தனமானது மதுரை நாடகப் பிரியர்களுக்கு விளைத்த உற்சாகமே. மூன்றாவது நாடகமாகிய "காலவரிஷி"யில் ஊர்வசியாக அவர் நர்த்தனம் செய்த பொழுது அதைப்பார்த்தவர்கள் பெரு மகிழ்ச்சி யடைந்தார்கள் என்று சொல்வது அதிகமாகாது. நர்த்தனம் முடிந்தவுடன், "இன்னும் கொஞ்சம் நர்த்தனம் செய்யவேண்டும்" என்று கரகோஷம் செய்து தெரிவித்தனர். அதன்பேரில், தனக்கு மிகவும் இளைப்பாயிருப்பதாகவும் தன்னால் இனி முடியாதென்றும் எனது நண்பர் எனக்குத் தெரிவிக்க, நான் அவரை மன்னிக்கும்படி வெளியில் உள்ளவர்களுக்குச் சொல்லி யனுப்பினேன். அதன்பேரில் வருகிற

கடைசி நாடகத்திலாவது மறுபடியும் ரங்கவடிவேலு நாட்டியத் தைப் பார்க்கவேண்டுமென்று சொல்லியனுப்பினார்கள். அன்றியும் இதைப்பற்றிக் கேள்விப்பட்ட சிலர், மறுநாள் என்னிடம் வந்து, "எப்படியாவது லீலாவதி—சுலோசனு நாடகத்தில் ரங்கவடி வேலுவை, நர்த்தனம் செய்யச் சொல்லுங்கள்" என்று கேட்டார் கள். "இந்த நாடகத்தில் நர்த்தனம் செய்வதற்கு இடமில்லையே" யென்று நான் கூறியும், கேளாதவர்களாய் வற்புறுத்தவே, "இந் நாடகம் முடிந்ததும் பிரத்யேகமாக நர்த்தனம் செய்யச் சொல்லு கிறேன்" என்று அவர்களுக்குச் சமாதானம் சொல்லி, அங்ஙனமே நாடகம் முடிந்ததும், இரவு இரண்டு மணிக்குமேல் ஆனபோதிலும் ரங்கவடிவேலுவை நாட்டியம் ஆடச்செய்தேன்.

மதுரையில் எனது நண்பர் நர்த்தனம் செய்ததைப் பார்த்த சிலர் இத்தனை வருடங்களாகியும், அதைப்பற்றிச் சிலாகித்துப் பேசு வதை நான் கேட்டிருக்கிறேன். எனதுயிர் நண்பர் நாட்டியமானது ஜனங்களின் மனதை இவ்வளவு கவர்ந்ததற்குக் காரணம் என்ன வென்று யோசிக்குமிடத்து, இதுதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது. கடினமான நாட்டிய வித்தையை ஒருவன் கற்ற போதிலும், அதை ஆடி, பார்ப்பவர்களின் மனதைச் சந்தோஷிப் பிப்பதற்கு அதற்கு ஏற்றதான உருவம் இருக்கவேண்டும். அதிக ஸ்தூல தேகமும் உதவாது, அதிக மெல்லிய தேகமும் உதவாது; அதிக ஸ்தூல தேகமுடையவர்கள் ஆடுவதைப் பார்த்திருக்கிறேன், அப்பொழுது, ஆப்பிரிக்கா தேசத்திலுள்ள ஹிப்பபோடமஸ் ஆடு வதுபோல் என் மனதிற்குப் பட்டுள்ளது. மிகவும் மெலிந்த எலும்பு களெல்லாம் வெளியில் தெரிந்து கொண்டிருப்பவர்கள் ஆடுவதைப் பார்க்கும்பொழுது எலும்புக்கூடு நர்த்தனம் செய்வதுபோல் தோன் றுகிறது. அன்றியும் ஆடுபவர் மிகவும் குட்டையாயுமிருக்கலாகாது, நெட்டையாயுமிருக்கலாகாது. மிகவும் குட்டையாயிருப்பவர்கள் ஆடுவதை யானைக் குட்டி ஆடுவதற்குச் சமானமாகச் சொல்லலாம். மிகவும் நெட்டையாயிருப்பவர்கள் ஆடுவதை ஒட்டகம் ஆடுவதற்கு ஒப்பிடலாம். இக்குறைகளெல்லாமின்றி, சரியான உயரமுடைய வர்கள் இந்நாட்டிய சாஸ்திரத்தைப் பயின்றபோதிலும், அவர்க ளுக்கு ஜகனபாகம் கொஞ்சம் பெருத்திருக்கவேண்டும்; இது ஸ்திரீ

களுக்குரிய கலை; பெண்டிருக்கு சுபாவத்தில் ஜகனமானது பெருத்திருக்குமென்பது அனைவரும் அறிந்த விஷயமே. இவ்வங்கபூர்த்தியில்லாத சிலர் ஆடிவரும்போது பின்புறம் திரும்புங்கால் சப்பையாகத் தோன்றுவதை நான் பார்த்திருக்கிறேன். இதற்காகச் சிலர் நர்த்தனம் செய்யும்பொழுது சிறு குஷ்டு துணிகளை வைத்துக் கட்டிக்கொண்டு ஆடுவதை நான் பார்த்திருக்கிறேன்! மேற்கூறிய குறைகளெல்லாமின்றி, நர்த்தனஞ்செய்வதற்குத் தக்க உருவம் எனதுயிர் நண்பரிடம் சுபாவமாகப் பொருந்தியிருந்தமை யாற்றான் அவரது நர்த்தனம் சென்னை ராஜதானியில் நாங்கள் போயிருந்த இடங்களிலெல்லாம் சிலாகிக்கப்பட்டதென்று நான் நம்புகிறேன். அன்றியும் இவ்வரிய கலையில் பெயர்பெற வேண்டுமென்று விரும்புவோர் கவனிக்கவேண்டியது இன்னொன்றுண்டு. அதாவது நர்த்தனம் செய்யுங்கால் பாதவின்யாசங்கள் மிகவும் மிருதுவாயும் அழகாயுமிருக்க வேண்டும். பாரசீக நாடகத்தில் பேய்கள் கூத்து ஆடுவதுபோல் ரங்கத்தில் "தும்தும்" என்று துமுக்கலாகாது. இக் குறைகளையெல்லாம் நான் எடுத்துக் கூறியதின் முக்கிய காரணம், நாளுக்கு நாள் க்ஷீணித்துவரும் இக்கலையைக் கற்கவிரும்பும் எனது இளைய நண்பர்கள், மேற்சொன்ன குற்றங்களையெல்லாம் களைந்து, இவ்வரிய சாஸ்திரத்தை ஆதரிப்பார்கள் என்பதேயாம்.

மதுரையில் எங்கள் நாடகங்களை முடித்துக்கொண்டு புறப்படும்பொழுது, மறுபடியும் இவ்வூருக்கு வந்து நாம் நாடகமாடக் கொடுத்து வைத்திருக்கிறோமோ என்னவோ என்னும் கவலையுடன் நான் புறப்பட்டேன். அக்கவலையை நீக்கி, மறுபடியும் இந்த மதுரைமா நகரிலேயே எங்கள் சபையாருடன் நாடகங்கள் ஆடும்படியும், அன்றியும், இந்நகரத்தில் ஸ்தாபிக்கப்பட்ட மதுரை டிராமாடிக் கிளப்புக்காக, பன்முறை இவ்விடம் வந்து நாடகமாடும்படியான பாக்கியம், எனக்களித்த நான் வழிபடுதெய்வங்களாகிய மீனாட்சி சுந்தரேஸ்வரர்களுக்கு நான், அவர்கள் பாதங்களைத் தினம் மறவாது துதித்தலன்றி, வேறென்ன கைம்மாறு செய்யக்கூடும்?

நாங்கள் மதுரையை விட்டுப் புறப்படக் குறித்த தினத்திற்கு முந்தியநாள் வெங்கா நதியில், நாங்கள் போகவேண்டிய ரெயில் பாதை

யானது பெரும் மழையினால் உடைந்து சேதப்பட்டதாகவும், ரெயில் அம்மார்க்கத்தில் வழக்கம்போல் போக இன்னும் சில தினம் பிடிக்குமென்றும் பத்திரிகைகள் மூலமாகக் கண்டோம்! இந்த தெய்வாதீனத்தால் நேரிட்ட கஷ்டத்திற்கு என்ன செய்வதென்று யோசித்து, எப்படியும் எடுத்துக்கொண்ட பிரயாணத்தைக் கைவிடலாகாதென்று தீர்மானித்து, மண்டபத்தில் அப்பாதை செப்பனிடப்படுகிற வரையில் தங்கிப் பிறகு லங்கைக்குப் போகவேண்டுமென்று தீர்மானித்தோம். இவ்வாறு சமுத்திர மணல் தவிர வேறெதுவும் கிடைக்காத இச்சிற்றூரில் நான்கு நாள் தங்கவேண்டியிருந்தது. நான்காவது தினம் ரெயில்பாதை செப்பனிடப்பட்டு ரெயில் வழக்கம்போல் போகிறதெனச் சேதிவரவே, உடனே புறப்பட்டு தனுஷ்கோடிவரையில் புதிதாய் ஏற்படுத்தப்பட்ட ரெயில் மார்க்கமாகப் போய் அங்கிருந்து சிறிய ஸ்டீமர் ஏறி, இரண்டு அல்லது இரண்டரைமணி சாவகாசத்திற்குள்ளாகத் தலைமன்னார் என்னும் லங்கைத் தீவிலுள்ள ரெயில்வே ஸ்டேஷன் போய்ச் சேர்ந்தோம்.

கொழும்பு ஸ்டேஷன் போய்ச் சேர்ந்ததும் முகத்தில் நகையுடன் எங்களை வரவேற்ற, எங்கள் பழைய நண்பர்களின் நல்வார்த்தைகளால், வழியில் நாங்கள் பட்ட கஷ்டங்களையெல்லாம் க்ஷணத்தில் மறந்தோம்.

இம்முறை, எங்களுடன், முதலிரண்டு முறை வருவதற்குத் தடைப்பட்ட, எனது நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயர் வந்தார். இம்முறை இங்கு எட்டு நாடகங்கள் நடத்தினோம். அவற்றுள் ஒன்று யாழ்ப்பாணத்து ஸ்திரீகள் சங்கத்தின் சார்பாகக் கொடுத்து அதன் வரும்படியை அச்சங்கத்தாருக்குக் கொடுத்தோம். இம்முறை தினம் யாராவது ஒருவர் வீட்டில் விருந்து நடந்ததென்றே சொல்ல வேண்டும். டாக்டர் ஜான்ராக்வுட், என்பவரும் கொழும்பில் பெரிய அட்வகேட்டாயிருந்த, ஜெயவர்த்தன் என்பவரும், திருநாவுக்கரசு அம்மாளும், மூத்த தம்பி என்பவரும், எங்கள் சபைக்கும் பெரும் விருந்தளித்தனர். அன்றியும் எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவும் நானும் தினம் காலை மாலைகளில் எங்காவது [illegible]

டிக்கோ அல்லது போசனத்திற்கோ அழைக்கப்பட்டோம். ஆயினும், ஒரு முறை பட்டதுபோதுமென்று இம்முறை மிகவும் ஜாக்கிரதையாகவிருந்து, நோயில் விழாதபடி என் உடம்பைக் காப்பாற்றிக்கொண்டேன்.

இங்கு நடந்த நாடக தினங்களில், ஏறக்குறைய தினம் மழை பெய்தபோதிலும், நல்ல வசூலாயிற்று. முன்முறை போலவே வாரிக் மேஜர் என்பவர் எங்கள் சவுகரியத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்தார்.

இவ்விடத்தில் நடந்த நாடகங்களைப்பற்றி இங்கு எழுதத் தக்க விசேஷங்கள் ஒன்றும் எனக்கு ஞாபகம் வரவில்லை. எனது நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயருடைய சங்கீதம் மிகவும் மெச்சப்பட்டது. ஆயினும் ஆக்டிங் விஷயத்தில் ரங்கவடிவேலுக்கிருந்த புகழ் கொஞ்சமேனும் குன்றவில்லை.

இங்கு நானிருந்தபொழுது தான், எனக்கு சக்ரவர்த்தியின் பிறந்ததினம் கொடுக்கும் கௌரவ பட்ட ஜாபிதாவில், "ராவ்சாஹெப்" என்கிற பட்டம் கொடுத்ததாக, சென்னையிலிருந்து வந்த தந்தி மூலமாகத் தெரிந்தது. இதை நான் ஒரு பொருட்டாகப் பாராட்டாவிட்டாலும், இந்த சமாசாரம் எங்கள் சபையின் அங்கத்தினர் மூலமாகக் கொழும்பி லுள்ள நாடகாபிமானிகளுக் கெல்லாம் தெரிந்து விட்டது. அதன் பேரில், "சபாபதி" என்னும் இங்கு நாங்கள் நடத்திய நாடகத்தில் ஒரு காட்சியில், எனது நண்பர் ராகவாச்சாரியார், நாடகத்தின் நடுவில் கதையோடு ஒட்டி ஏதோ கூறுவது போல், இதை வெளியிட்டார். உடனே ஹாலில் வந்திருந்தவர்களெல்லாம் இரண்டு நிமிஷம் வரையில் இடைவிடாது கரகோஷம் செய்தனர். அப்பொழுதுதான் சிங்கள வாசிகளின் மனதை எனது நாடகங்களினால் நான் திர்ப்தி செய்ததின் திறத்தைக் கண்டேன். ஆயினும் இதை எங்கள் சபைக்கு அவர்கள் செய்த கௌரவமென்றே கொண்டேன்.

இங்கு நாடகங்களை முடித்துக் கொண்டு, சில காரணங்களால் யாழ்ப்பாணம் போக வேண்டு மென்றிருந்த ஏற்பாடு முடியாமற் போகவே, அதற்குப் பதிலாகச் சென்னைக்குத் திரும்பிப் போகும்

போது கும்பகோணத்தில் தங்கி 5 நாடகங்கள் ஆடவேண்டு மென்று தீர்மானித்தோம். அதன் மீது எங்கள் சிங்கள நண்பர் களிட மிருந்து பிரிய மன மில்லாதவராய், விடைபெற்று வந்த வழி யாகவே இந்தியாவுக்குத் திரும்பினோம். மறுபடியும் நான் இலங் கைத் தீவிற்குப் போவேனோ என்னவோ சந்தேகம். இம்முறை போய் பதினைந்து வருடங்களாய் விட்டன; எனக்கும் வயதாகி விட்டது. இந்த சந்தர்ப்பத்தில், நான் இங்கெழுதுவதின் மூலமாக, எங்கள் ஸபைக்கும் முக்கியமாக எனதுயிர் நண்பர் ரங்க வடிவேலுக் கும் எனக்கும், எமது லங்கை நேசர்கள் செய்த பேருதவிக்கும், அவர்கள் பாராட்டிய பேரன்பிற்கும், கைம்மாறாக என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன். இங்கெழுதப்பட்டது எமது லங்கை நேசர்களின் நேத்திரத்திற் படுமாயின், இதையே எனது கைம்மாறாகக் கொள்வார்களாக! நான் நடமாடும் சிற்றுலகில், சுய நன்மையைப் பாராட்டும் மனிதர்களின் செய்கைகள் என் மனதில் புண் படுத்தும் போதெல்லாம், எனது லங்கை நண்பர்களை நினைத்து, சுய நன்மையைப் பாராட்டாத ஜனங்கள் சிலரேனும் இவ்வுலகில் இருக்கின்றனர் என்றெண்ணிச் சந்தோஷித்து, என் மனதைத் தேற்றிக் கொள்ளுவது தற்காலம் எனக்கு வழக்கமாய் விட்டது.

இனி கும்பகோணத்தில் இரண்டாம் முறை நாங்கள் நாடக மாடிய கதையை எழுதுகிறேன். இம்முறை நாங்கள் நாடகமாடியது பழைய இடத்திலன்று; புதிதாகக் கட்டப்பட்ட வேறொரு நாடக சாலையில். இது பழைய நாடக சாலையைப்போல் இவ்வூரின் மத்தியில் இல்லாது ஒரு புறமாகக் கட்டப்பட்டது. இக்காரணத்தினாலோ வேறெக்காரணத்தினாலோ முதன்முறை இங்கு நாடக மாடியபோது வந்த ஜனக்கூட்டம் இம்முறை வரவில்லை. போதாக்குறைக்கு முன்பு எங்கள் சௌகர்யங்களை எல்லாம் மிகவும் சிரத்தையுடன் கவனித்த பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் இவ்வூரில் இல்லை இப்பொழுது. ஆயினும் இங்கு நாடகமாடியதால் எங்கள் சபைக்கு நஷ்டம் நேரிட வில்லை. வரவுக்கும் செலவிற்கும் சரியாய் போய்விட்டது. இவ் விடம், எங்கள் சபையைப்போல ஸ்தாபிக்கப் பட்ட வாணி விலாச சபையாரும், லட்சுமிவராஹ ஐயங்கார் அவர்களும், அநந்தாசாரி யார் அவர்களும், எங்களுக்கு நல்ல விருந்தளித்தனர். ஐந்து நாட

கங்களை இங்கு முடித்துக் கொண்டு சென்னைக்குப் போய்ச் சேர்ந்தோம். இதுதான் எங்கள் சபை வெளியூர்களில் நெடுநாள் கழித்த பிரயாணம். சென்னையை விட்டு ஏறக்குறைய 45 நாட்கள் வெளியூரிலிருந்தோம் ; 17 நாடகங்கள் ஆடினோம் ; பெரும்பாலும் அவைகளெல்லாம் இரவு நாடகங்களாயிருந்த படியால் மிகவும் சிரமமாயிருந்தது. இருந்த போதிலும் எனக்கும் மற்ற ஆக்டர் களுக்கும் தேகத்தில் ஒரு குறையுமின்றி, இந்நாடகங்களை யெல்லாம் பூர்த்தி செய்து கொண்டு, பரமேஸ்வரன் அருளால் சென்னைக்கு வந்து சேர்ந்தேன். இதில் ஒரு சிறிய வேடிக்கை. 45 நாட்கள் கண்டக்டராகவும், நாடகங்களில் கதா நாயகனுகவும் இரவு பகலாகக் கஷ்டப்பட்டு, நாடகங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு, திரும்பி வந்தவுடன், சென்னையிலிருந்து சபையின் காரியதரிசி எழுதிய கடிதம் ஒன்றிற்கு ஏன் உடனே பதில் எழுதவில்லை என்று ஒரு அங்கத்தினருடைய பிரேரேபணையினுல், என் மீது குற்றங் கூறினர் சிலர்! அந்த மெம்பரின் பெயரை இங்கு எழுத எனக்கு இஷ்டமில்லை. அவர் மீது குற்றமில்லை. "பெற்ற வட்கே தெரியும் அந்த வருத்தம், பிள்ளை பெறுப் பேதை அறிவாளோ?" இந்தச் சந்தர்ப்பத்தில் தாயுமான ஸ்வாமிகள் பேதை என்னும் பதத்தை யுபயோகித்துள்ளது கவனிக்கத் தக்கது. சபையின் வெளிப் பிரயாணத்தில் செலவு போக, லாபம் 2638-8-6 கிடைத்தது. இதினின்றும் நெல்லூர் பிரயாணத்தில் நான் முன்பு கூறியபடி நேர்ந்த நஷ்டமாகிய 535-13-3 கழித்து, மிகுதி நிகரலாபம் 2102-9-3 எங்கள் சபையின் கட்டட பண்டுக்குச் சேர்த்தோம்.

இவ் வருஷம் டிசம்பர் விடு முறையில், 45 நாட்களுக்கு விக்டோரியா பப்ளிக்ஹால் மேல் மாடியை வாடகைக்கு அமர்த்தி, சாயங்காலங்களில் நாடகமாடி வந்தோம். பல தினங்களில் ஜனங்கள் உட்கார இடமில்லாமல், டிக்கட்டுகள் விற்பதை நிறுத்த வேண்டியிருந்தது. இந் நாடகங்களினுல் செலவு போக 3088 ரூபாய் லாபம் கிடைத்தது. அதில் ரூபாய் 3000 கட்டட பண்டுக்குச் சேர்த்தோம். ஆகவே, பல விதத்திலும் எங்கள் சபை ஸ்தாபித்து 25 ஆண்டு பூர்த்தியாகிய இவ்வருஷம், சபையானது மிகவும் நன்னை ஸ்திதியை யடைந்தது என்றே கூறவேண்டும்.

இவ் வருஷம் இந்நாடக மேடை நினைவுகளில் நான் குறிக்க வேண்டிய, என்னைப் பற்றிய நிகழ்ச்சி யொன்றுண்டு. அதாவது சபை ஆரம்பித்தது முதல் இந்த இருபத்தைந்து வருடங்களும் (ஒரு வருஷம் தவிர) சபையின் தமிழ் நாடகங்களை சூத்திர தாரனுகப் பார்த்து வந்த நான், இவ் வருஷம் அவ் வேலையினின்றும் விலகிக் கொண்டேன். சபையின் ஆரம்பத்தில் வி. திருமலை பிள்ளை அவர்கள் கண்டக்டராகவிருந்தபோதிலும், அவர் வேலை யெல்லாம் நான் பார்த்து வந்தேன் என்பது எங்கள் சபையோர் அனைவரும் அறிந்த விஷயமே. இந்த இருபத்தைந்து வருஷங்களில் கடைசி சில வருஷங்களில், வர்ஷாந்திரம் எங்கள் சபையில் கண்டக்டர் வேலைக் கொருவரைத் தேர்ந்தெடுக்கும் கூட்டத்தில், எனக்குப் போட்டியாகச் சிலர் நின்றனர். அச்சமயங்களிலெல்லாம் சபையின் பொதுஜனக் கூட்டமானது என்னையே தேர்ந் தெடுத்தது. அச்சமயங்களிளெல்லாம் எனது நண்பர்களிற் பலர் ,, சம்பந்தம், நீ யேன் இவ்வாறு வருஷா வருஷம் கஷ்டப் படுகிறாய்? உனக்கோ வயதாகி வருகிறது. இச் சுமையை இளையவர்கள் தோள் மேற் சுமத்திவிட்டு ஆயுமென் றிருக்கிறது தானே?" என்று என் நலத்தைக் கோரிக் கூறி யிருக்கின்றனர். அப்போது அவர்களுக் கெல்லாம் "நான் இன்னும் சபைக்குக் கண்டக்டராகச் சில வருஷங்கள் உழைக்க வேண்டு மென்று எண்ணி யிருக்கிறேன். இத்தனை வருஷம் உழைப்பது என்று ஒரு நிச்சயம் வைத்திருக்கிறேன். அது வரையில் கண்டக்டர் வேலைக்கு வருஷா வருஷம் நின்று தான் தீருவேன். அதற்குள்ளாக, சபையின் பொது ஜனக் கூட்டத்தார், தாங்களாக என்னை விலக்கி விட்டால் நலமாயிற்று" என்று பதில் கூறியுள்ளேன். என்னை நீக்கி மற்றவர்களைக் கண்டக்டராக நியமிக்க வேண்டு மென்று பிரயத்னப் பட்டு, முனிசிபல் எலெக்ஷனிலும் சட்ட சபை எலெக்ஷனிலும் வோட் சம்பாதிப்பதில் மிகவும் தேர்ச்சிபெற்றவர்கள் என்று பெயர் பெற்ற எனது நண்பர்களிற் சிலர். அங்கத்தினருடைய வீடு வீடாய்ப் போய் பிரயத்னப்பட்டனர், அச்சமயங்களிலெல்லாம் நான் கண்டக்டர் வேலைக்கு நிற்கப் போகிறேன் என்பதை அறிவித்ததன்றி, ஒருவரையும் தங்கள் வோட் எனக்குக் கொடுக்கும் படி நான் கேட்டவனன்று. இதற்குச் சில

முக்கிய காரணங்களுண்டு. முதலாவது, இம்மாதிரியான தேர்ந் தெடுத்தல் களிலெல்லாம் அவர்களாகப் பார்த்து என்னை நியமிக்க வேண்டுமே யொழிய, நாம் போய் அவர்களைப் பலவந்திக்க அதனால் அவர்கள் வோட் கொடுப்பார்களானால், அதில் என்ன மகிமை? அப்படிச் செய்வது தவறு என்பது என்னுடைய கோட்பாடு களி லொன்று. இரண்டாவது, நான் எந்த மனிதனையும், எனக்காக ஒன்றைக்கொடு என்று யாசிக்கக்கூடாது என்கிற நியமமுடையேன்; இக் காரணம் பற்றியே, அநேக வருஷங்களில் என்னுடைய நண்பர் கள் என்னை, முனிசிபல் கார்ப்பரேஷன், லெஜிஸ்லெடிவ் கவுன்சில் முதலிய சபைகளுக்கு நிற்கும்படிக் கேட்டும், நான் வேண்டா மென்று மறுத்திருக்கிறேன். எனக் கேதாவது வேண்டியிருந்தால், என்னைப் படைத்த ஈசனை வேண்டுவேனே யொழிய அவர் படைத்த மக்களை யாசியேன். மூன்றாவது காரணம் இவ்விஷயங்களி லெல் லாம் ஈசன் விதித்த படியாகின்றது, நம்முடைய பிரயத்னத்தில் ஒன்றும் பயனில்லை யென்று என் தீர்மான மான எண்ணம்.

நான் முன்னால் தீர்மானித்த படி, சபை ஆரம்பித்து இருபத் தைந்து வருஷங்கள் வரை கண்டக்டராகச் சபைக்கு உழைத்தேன். அந்த இருபத்தைந்து வருடங்களும் கழிந்த வுடன், "நாம் உழைத் தது போதும். இனி மற்றவர்கள் உழைக்க வேண்டியது நியாயம், அவர்களும் இவ் வேலையில் பயிற்சி யடைய வேண்டியது; அப் பொழுது தான் அவர்களுக்கும் இதன் கஷ்ட நஷ்டங்களும், அருமை பெருமையும் தெரியும்" என்று, தீர்மானித்து, இவ் வேலை க்கு மறு வருஷத் தேர்ந் தெடுத்தல் வந்த போது, நிற்காமல் வில கிக் கொண்டேன். இனிமேல் இந்த வேலைக்கு நான் நிற்கப் போகி றதில்லை யென்பதை எனது நண்பர்களுக்கும் தெரிவித்து நான் கண் டக்டராக நடத்திய கடைசி நாடகம் முடிந்ததும் மேடையின் பேரில் அவர்களை யெல்லாம் ஒருங்கு சேர்த்து, "இத்தனை வருடங்க ளாக நான் கண்டக்டராக யிருந்த போதெல்லாம் உங்களில் அநே கரைக் கஷ்டப் படுத்தி யிருக்கக் கூடும். தெரிந்தும் தெரியாமலும் உங்களுக்கு அபராத மிழைத்திருக்கக் கூடும்; அவற்றை யெல்லாம் மன்னியுங்கள்" என்று பிரார்த்தித்து, இத்தனை வருடங்களாக என் னுடன் ஒத்து உழைத்து, சபையின் கீர்த்தியைக் காப்பாற்றிய நற்

காக அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனத்தை யளித்து, அவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டேன். எனது நண்பர்களாகிய என்னுடன் இது காறும் உழைத்த ஆக்டர்களும் நான் கூறியதை அங்கீகரித்து, சபையின் முதல் அங்கத்தினராகிய ஜெயராம் நாயகர் மூலமாக, எனக்கு மரியாதை செய்தனர். ஆயினும் அச்சமயம் எனது நண்பர்களுக்கு நான் வாக்களித்தபடி நான் இந்த வேலையினின்றும் விலகியபோதிலும், இன்று வரை, சபையின் ஆக்டர்களுக்காவது, கண்டக்டர் களுக்காவது, என்னுற் செய்யக் கூடிய உதவி ஏதாவது இருந்தால் அதைச் செய்து வருகிறேன்.

மேற் சொன்னபடி நான் விலகி விட்ட பிறகு துரைசாமி ஐயங்கார், கண்டக்டராகச் சபையோரால் நியமிக்கப் பட்டார் இவ் வருஷம்.

இவ்வருஷம் நான் புதிதாய் எழுதிய நாடகம் 'விஜய ரங்கம்' என்பதாம். இதைப் பற்றி நான் சற்று விவரமாய் எழுத வேண்டியது அவசியம். இருபத்தைந்தாம் ஆண்டு பூர்த்திக் கொண்டாட்டத்தின் சம்பந்தமாக எங்கள் சபையார், தமிழிலும் தெலுங்கிலும் புதிதாய் எழுதப் படுகிற சிறந்த ஜனசமூக நாடகங்களுக்குத் தங்கப் பதக்கங்கள் அளிப்பதாக விளம்பரம் செய்தனர். இப்பரீட்சைக்கு நாடகங்கள் அனுப்புவோர் தங்கள் சொந்தப் பெயரை வெளியிடக் கூடாதென்றும், மாறு பெயர் வைத்தனுப்ப வேண்டுமென்றும் நிர்ணயஞ் செய்திருந்தனர். நாடக கர்த்தா தன் சுயமான பெயரை வெளியிட்டால், பரி சோதகர்கள், அவன் மீதுள்ள பட்சபாதத்தினுல் அவனுக்கு ஒருவேளை பரிசளிக்கக் கூடு மென்று, இந்தக்கட்டுப்பாடு செய்தனர். யாரைக் குறித்து இந்த நிபந்தனை முக்கியமாக ஏற்படுத்தப் பட்ட தென்று இதை வாசிக்கும் என் நண்பர்கள் எளிதில் ஊகித்துக் கொள்ளலாம். இப் பரீட்சையில் "டெஸ்டி காடோ" என்கிற பெயரை வைத்து இந்த "விஜயரங்கம்" என்னும் நாடகத்தை எழுதியனுப்பினேன். டெஸ்டி காடோ, என்கிற பதத்திற்கு, "பிதுரார்ஜிதத்தி லிருந்து விலகப்பட்டவன்" என்று ஒருவாறு பொருள் கூறலாம். இம்மாறு பெயர் சர் வால்டர் ஸ்காட் என்னும் பிரபல இங்கிலீஷ் ஆசிரியர் எழுதிய "ஐவான்

ஹோரா" என்னும் கதையில், கதா நாயகனை 'ஜவான் ஹோரா' பூண்ட மாறு பெயராம். சிறு வயதில், இக்கதையைப் பன் முறை படித்து நான் மிகவும் மகிழ்ந்திருக்கிறேன். ஆகவே, இப் பெயரையே என் மாறு பெயராக வைத்து என் புதிய நாடகத்தை அனுப்பினேன். இதை எழுதச் சற்றேறக்குறைய எனக்கு நான்கு ஐந்து மாதங்கள் பிடித்தன. கடைசியில் எப்படி நாடகத்தை முடிப்பது என்று யோசித்துக் கொண்டிருந்து விட்டு, நாடகத்தை அனுப்ப வேண்டிய காலத்திற்கு ஒருவாரம் வரையில், காலஹரணம் செய்து கொண்டிருந்து விட்டேன். பிறகு ஏழு நாட்களுக்குள் நாடகத்தைப் பூர்த்தி செய்து, (என் வழக்கப்படிப் பென்சிலினால் எழுதிய காட்சிகளை யெல்லாம்) இங்கியில் எழுதி, அனுப்ப வேண்டுமே யென்று அவசரப் பட்டு, ஒரு வகையாக முடித்து நானாக இங்கியில் பிரதி செய்து அனுப்பினேன். இந்த அற்ப விஷயத்தை ஒரு பொருட்டாக இங்கு எடுத்தெழுதியதற்கு ஒரு காரண முண்டு நான் அச்சிடும் புஸ்தகங்களிலெல்லாம் ஒரு பிரதி, கொழும்பில் வசிக்கும் கற்றறிந்த மாது சிரோமணியாகிய திருநாவுக்கரசு அம்மாளுக்கு அனுப்பும் வழக்கப்படி, இப் புஸ்தகம் அச்சிட்டவுடன் ஒன்றையனுப்ப, அவர்கள் நாடகத்திலுள்ள சாராம்சங்களை எடுத்துக் கூறி, கடைசியில், "நீர் நாடகத்தைக் கடைசியில் முடித்தது எனக்கு அவ்வளவு திருப்தி கரமாயில்லை. ராஜேஸ்வரியும் ரங்கநாதமும்......கடைசியில் சந்திக்கும்காட்சி ஏதோ நீர் அவசரப்பட்டு எழுதியது போல் எனக்குத் தோற்றுகிறது" என்று, நான், 'யார், இதை அறியப் போகிறார்கள் ?' என்று இருந்த மர்மத்தை வெளியிட்டனர். ஆகவே, கிரந்த கர்த்தாக்கள் "நம்முடைய மனதிலிருப்பது மற்றவர்களுக்கு என்ன தெரியப் போகிறது ?" என்று இறுமாந்திருக்கலாகாது ! என்பதை யறிந்தேன். ஆகவே, கிரந்த கர்த்தாக்கள் இதைச் சற்று கவனிப்பார்களாக; அவசரப் பட்டு எதையும் எழுதாதிருப்பார்களாக. இந்த சந்தர்ப்பத்தில் என்னிடமுள்ள ஒரு கெட்ட குணத்தை எழுதுகிறேனிங்கு. நான் எழுதும் புஸ்தகங்களில் என்ன குற்றங்களை நானே கண்டாலும் அல்லது பிறர் எனக்கு எடுத்துக் காட்டினாலும் அவற்றை யெல்லாம், அப்புஸ்தகம் அச்சிடுமுன் மாற்றி விடுவேன்; ஒரு முறை அச்சிட்ட

பின், "அச்சாசிரியர் பிழை" எனக் கூறப்பட்ட எழுத்துப் பிழைகள் தவிர, மற்றவைகளை மாற்றுவதில்லை என்னும் ஒரு மூடப் பிடிவாதம் என்னிடம் உண்டு இன்றளவும். இது என்னை விட்டு முற்றிலும் அகல வில்லை என்று நினைக்கிறேன். ஆகவே இந்த "விஜயரங்கம்" என்னும் நாடகத்தில் கடைசி காட்சியின் முன் காட்சியைச் சற்று மாற்றி எழுதினால் நன்றாயிருக்கும் என்று எனக்குப் புத்தியில் நன்றாய்ப் பட்ட போதிலும், அங்ஙனம் செய்யாதிருக்கிறேன்.

இந்தப் பரீட்சைக்கு 15 தமிழ் நாடகங்கள் அனுப்பப்பட்டன இவைகளுள் எது சிறந்ததெனத் தேர்ந்தெடுக்க, ம-ா-ா-ஸ்ரீ செல்வ கேசவராய முதலியார் அவர்கள் எம். ஏ., திவான்பஹதூர் பவாநந்தம் பிள்ளை அவர்கள், பி. ஆர். கிருஷ்ணமாசாரியார் அவர்கள் மூவரும் கமிட்டியாக ஏற்படுத்தப்பட்டனர். இவர்கள் இப்பதினைந்து நாடகங்களையும் பரிசோதித்துப் பார்த்து, "விஜயரங்கம்" என்னும் எனது நாடகத்திற்குத்தான் பொற்பதக்கமளிக்கவேண்டுமென்று தீர்மானித்தார்கள். அவர்களுடைய தீர்மானம் கைக்கெட்டியபிறகே, எங்கள் நிர்வாக சபையார், ஒவ்வொரு மாறு பெயரும் இன்னாருடையது என்று சீல் வைத்து அனுப்பப்பட்டவைகளைப் பிரித்துப் பார்த்து, 'விஜயரங்கம்' என்னும் நாடகம் என்னால் அனுப்பப்பட்டது என்று கண்டனர்.

இந்த விஜயரங்கம் என்னும் நாடகத்தைப்பற்றி எனது நண்பர்களுக்குச் சில விஷயங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

இது நான் எழுதியுள்ள நாடகங்களுக்குள் ஒரு சிறந்த நாடகம் என்பது என் கருத்து. இதைத் தற்புகழ்ச்சியாக எனது நண்பர்கள் எண்ணலாகாது. ஒரு கிரந்த கர்த்தா எழுதியுள்ள புஸ்தகங்களில் அவன் மனதிற்கே பிடித்ததாகச் சில எப்படியும் இருந்துதான் தீரவேண்டும். நான் எழுதியுள்ள நாடகங்களில் என் மனதிற்கே அதிகத் திருப்தியைச் சில கொடுத்திருக்கின்றன. அவற்றுள் "விஜயரங்கம்" ஒன்றாம். நான் எழுதியுள்ள நாடகங்களுள் பலவற்றை நான் இரண்டாம் முறை கூடப் படிப்பதில்லை. இந்த விஜயரங்கத்தைப் பன்முறை நான் படித்தும், இப்பொழுது

எனக்கு அவகாச மிருக்கும்பொழுதெல்லாம் மற்றொருமுறை படிக்க என் மனம் நாடுகின்றது.

இந்த நாடகத்தின் கதையை நான்மனதில் கோர்த்த பொழுது, இந்நாடகத்தின் கதாநாயகனுக்கும், இந்நாடகத்திற்கும், என் தகப்பனாருடைய பெயரை வைக்கவேண்டுமென்று நிர்மானித்து அப்பெயரை வைத்தேன். இப்படி வைத்ததற்குக் காரணம் என் தகப்பனார் மீது எனக்கு இந்நாளளவும் இருக்கும் பேரன்பே; இது நான் சாமளவும் குறையாதிருக்க வேண்டு மென்பது என் பிரார்த்தனை. என் தகப்பனாருடைய ஜீவிய சரித்திரத்திற்கும் இக்கதைக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. சிலர் இந்நாடகத்தில் என் அனுபவத்தைப் பெரும்பாலும் எழுதியிருப்பதாக எண்ணுகிறார்கள்; என்னிடம் நேராகவும் சொல்லியிருக்கிறார்கள்; அது தவறாகும். ஏதோ ஒன்றிரண்டு சிறு சந்தர்ப்பங்களை என் அனுபவத்தினின்றும் இதில் எழுதியிருக்கலாம். அவற்றுள் ஒன்று எனக்கு முக்கியமாக ஞாபகமிருக்கிறது. என்னுடைய பிள்ளை வரதன் ஏழெட்டுவயதுக் குழந்தையாயிருக்கும்பொழுது, ஏதோ துஷ்டத்தனம் செய்தான் என்று அவன் கன்னத்தில் ஒரு முறை நான் 'பளீர்' என்று அடிக்க, அவன் அப்படியே துடித்துப் போனான். கன்னத்தில் அடித்தால் இவ்வளவு நோயுண்டாகிறதா என்று சந்தேகித்தவனாய், நான் என் வீட்டின் மேல்மாடிக்குச் சென்று, ஒருவருமில்லாத சமயம் பார்த்து என் கன்னத்தில் நானே 'பளீர்' என்று அடித்துக்கொண்டு பார்த்தேன். உடனே எனக்குண்டான நோயினால், கன்னத்தில் அடிப்பதினால் இவ்வளவு கஷ்டமுண்டாகிறதென அறிந்தேன்! நான் கன்னத்தில் அடிபட்டதில்லை. சுயமாக இதை அனுபவித்த பிறகு, சிறு பிள்ளைகளை கன்னத்தில் அடிக்கக்கூடாதென்பதை அறிந்தேன்! இந்த அனுபவத்தை, கதாநாயகனான விஜயரங்கம் சுயமாக அறிந்ததாக எழுதியுள்ளேன். இம்மாதிரியான இரண்டொரு சந்தர்ப்பங்கள் என்னையுமறியாதபடி இக்கதையில் வந்திருக்கலாம். என்னுடைய சொந்த அனுபவங்களையெல்லாம் இக்கதையில் எழுதியிருக்கிறேன் என்று எண்ணுவது முற்றிலும் தவறாகும். அப்படி வாஸ்தவமாயிருந்தால், நான் அப்படிச் செய்திருக்கிறேன் என்று இங்கு எழுதத் தடையில்லை. விஜயரங்கத்தினிடத்

தில், வெட்கப்படத்தக்க குணம் ஒன்றும் கிடையாது. ஆயினும் எனது நண்பர்களுட்சிலர் இவ்வாறு ஏன் எண்ணவேண்டும் என்று யோசித்துப் பார்த்தேன். எனக்குத் தெரிந்த வரையில், கதாநாயகனை விஜயரங்கத்தை ஒரு நாடக ஆசிரியனாக நான் வர்ணித்ததும், இந்நாடகத்தில் சில காட்சிகள் நாடகமேடையிலே நடக்கிறதாக நான் எழுதியுள்ளதும், மற்றவர்களை இவ்வாறு எண்ணும்படிச் செய்திருக்கலாம் எனத்தோன்றுகிறது எனக்கு. அன்றியும் உலகத்தைப்பற்றிய என்னுடைய சில அபிப்பிராயங்களை, கதாநாயகன் அபிப்பிராயங்களாக நான் எழுதியிருப்பது, அவ்வாறு எனது நண்பர்களுட் சிலர் சந்தேகிக்கும்படி இடங்கொடுத்திருக்கலாம். மேற்கூறிய சில ஒற்றுமைகள் நீங்க, இந்நாடகக்கதை முழுவதும், என் மனதால் நிர்மாணிக்கப்பட்டதுஎன்பதை எனது நண்பர்கள் நம்பும்படிக் கேட்பேன்.

இந்நாடகத்தில் சில காட்சிகள்—முக்கியமாக, விஜயரங்கம் திருவெஞ்ஞான முதலியார் வீட்டில் வேலையாளாக இருந்து நீங்கும் காட்சியும், விஜயரங்கம் ராஜேஸ்வரியுடன் சம்பாஷிக்கும் காட்சியும், விஜயரங்கம் தன் மனைவியிடம் மன்னிப்பு கேட்கும் காட்சியும்—நான் எழுதியவற்றுள் மிகச் சிறந்தன என்பது என் அபிப்பிராயம். இந்நாடகத்தை வாசித்த எனது நண்பர்கள் பலருடைய அபிப்பிராயமும் அதுவே. இந்நாடகத்தைப் பற்றி நான் பெற்ற நன்மதிப்புக் கடிதங்களைப்போல மற்றெந்த நாடகத்திற்கும் பெற்றேனில்லை.

இந்நாடகமானது மறு வருஷம் எங்கள் சபையோரால் ஆடப்பட்டது. அப்போது எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு, மங்கையர்க்கரசியாக நடித்தார். நான் விஜயரங்கம் பிள்ளையாக நடித்தேன். சத்யமூர்த்தி ஐயர், ரங்கநாதம் ஆகவும், சுந்தர வரத ஐயங்கார் ராஜேஸ்வரியாகவும் நடித்தார்கள். புதிய நாடகமாயிருந்தபடியாலும் பொற்பதக்கமளிக்கப்பட்ட நாடகமானதினாலும், எங்கள் சபையின் அங்கத்தினர் ஏறக்குறைய எல்லோரும் வந்திருந்தனர். அன்றியும் வெளியார் வந்ததனால் பணவசூலும் அதிகமாயிருந்தது.

இரண்டும் ஒன்றாய்ச்சேர்ந்தபடியால் வந்தவர்களுக்கெல்லாம் விக்டோரியா பப்ளிக் ஹாலில் இடம் இல்லாமற் போக, நாடக மேடையின் மீது பிடிக்கக்கூடிய வரையில் எங்கள் சபையின் அங்கத்தினருக்கு இடங்கொடுக்கும்படி நேர்ந்தது. நாடகமானது நன்றாய் நடிக்கப்பட்டது என்பது வந்தவர்களுடைய அபிப்பிராயம்; என்னுடைய அபிப்பிராயமும் அப்படியே.

இந்நாடகத்தில் நன்றாய் நடித்தவர்களுள் முதல் பரிசு கொடுப்பதென்றால், விஜயரங்க பிள்ளையின் குமாரனாகிய சாமிநாதனாக நடித்த வி. வி. ராமதுரைக்குத்தான் அதைக்கொடுப்பேன். ராமதுரை எனது பால்ய நண்பராகிய வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்காருடைய பிள்ளை; சாமிநாதன் வேஷத்திற்குச் சிறு பிள்ளையாகவும் இருக்கவேண்டும், நன்றாய் நடிக்கும் திறமை வாய்ந்தவனாயுமிருக்க வேண்டுமே என்று நான் கவலைப்பட்டுக்கொண்டிருக்கும்போது, ஒரு நாள் எனது நண்பர் குமாரனாகிய ராமதுரையைச் சந்தித்தேன். உடனே இப்பிள்ளை சாமிநாதன் வேடத்திற்குத் தக்கவனாயிருப்பான் என்று என் மனதில் உதிக்க ராமதுரையை இந்த வேஷம் "நீ எடுத்துக்கொள்கிறாயா?" என்று கேட்க, ராமதுரையும் ஒப்புக் கொள்ள அதன்மீது வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் அனுமதியைப் பெற்று, ராமதுரைக்கு ஒத்திகை நடத்தி வந்தேன். நான் சொன்ன சூட்சுமமான விஷயங்களையெல்லாம் மிகவும் எளிதில் கிரஹித்து, நாடகதினம் எல்லோரும் (அவரது தகப்பனார் உட்பட) மெச்சும்படியாக மிகவும் நன்றாய் நடித்தான். அக்காலம் சிறுவனாய் நடித்த ராமதுரை, இப்பொழுது பெரியவனாகி, வக்கீலாகி, தகப்பனாருமாகி விட்டான்! காலம் எவ்வளவு விரைந்து செல்கிறது! இந்நாடகத்தைப் பிறகு எங்கள் சபையில் நடத்தியபோதெல்லாம் எனது நண்பர் கே. நாகரத்தினம் ஐயருடைய குழந்தை 'மணி' நன்றாய்நடித்தான். ஏறக்குறைய ராமதுரையைப் போலவே நடித்தான் என்று நான் சொல்ல வேண்டும். இந்த "சாமிநாதன்" பாகம் இந்நாடகத்தில் ஒரு முக்கியமானது. இதை சரியாக நடிக்காவிட்டால் நாடகமே நன்றாயிராது என்பது என் துணிபு. ஆகவே, இதை நடிப்பதற்கு, ராமதுரை, மணி ஆகிய இரண்டு பால ஆக்டர்கள் கிடைத்தது நான் செய்த அதிர்ஷ்டமே.

ராமதுரைக்குப் பிறகு நன்றாய் நடித்த ஆக்டர், ஒரு சிறு நாய்க் குட்டியே! இந்நாடகத்தை வாசித்தவர்கள் இதில் ஒரு சிறு நாய்க் குட்டி வருகிறது என்பதை நன்றாய் அறிவார்கள். இதற்காக, எனது நண்பர் துரைசாமி ஐயங்காரிடமிருந்து ஒரு சிறிய நாய்க் குட்டியை வரவழைத்து, அதை எங்கள் சபையில் இரண்டு வாரம் வைத்திருந்து ராமதுரையின் கையினால் அதற்குப் பால் குடிக்கச் செய்து அதை "ஒத்திகை" செய்து பழக்கி வந்தேன்! அவன் கூப்பிடாமலே அவனைப் பின்தொடரச் செய்தேன். நாடக தினத்தில் அது அப்படியே செய்ய, சபையில் வந்திருந்தவர்கள் அதிகக் கரகோஷம் செய்தனர். இந் நாடகத்தைப் பிறகு நடிக்கும் போதெல்லாம் இதற்காக ஒரு சரியான நாய்க்குட்டியை வாங்கிப் பழக்க வேண்டி வந்தது.

எனதுயிர் நண்பர் ஆயுட் காலத்தில் மிகவும் அருமையாய் நடித்த வேடங்களில், இந் நாடகத்தின் கதாநாயகியாகிய மங்கையர்க் கரசியின் வேடம் ஒரு முக்கியமானதாம். இவருக்குப் பிறகு எனது நண்பர் கே. நாகரத்தினம் ஐயர், இந்த வேடத்தை ஏறக் குறைய அவரைப் போலவே மிகவும் விமரிசையாகப் பன்முறை நடித்திருக்கின்றனர்.

இந் நாடகத்தில் எனது நண்பராகிய டி சுந்தரவரத ஐயங்கார், நடிப்பதற்கு மிகவும் கஷ்டமான "ராஜேஸ்வரி" யாக மிகவும் நன்றாய் நடித்துச் சபையோரைத் திருப்தி செய்தனர்.

இவர் யாழ்ப்பாணத்து ஸ்திரீயைப் போல் ஆடையாபரணங்கள் அணிந்து தோன்றியது எல்லோராலும் மெச்சப் பட்டது. இவருக்குப் பாடும் சக்தி யில்லாவிட்டாலும், இப்படிப் பட்ட ஸ்திரீ பாகங்களை நடிப்பதில் மிகவும் சமர்த்தர் என்றே நான் கூறவேண்டும். இவர் இதன் பிறகு மிகவும் சில தடவைகளில்தான் ஸ்திரீ வேடம் பூண்டு எங்கள் சபையில் நடித்திருக்கின்றனர். தற்காலம் இவர் ஸ்திரீ வேடம் பூணாதது எங்கள் சபையின் துர்ப்பாக்கியமென்றே சொல்ல வேண்டும்.

இந்நாடகம் முதன்முறை நடத்தப்பட்டபொழுது, எனது பால்ய நண்பர்களுள் ஒருவராகிய கே. ஆர். சீதாராமய்யர் திருமெஞ்

ஞான முதலியாராக நடித்தார். அன்றியும் அவரது இளங் குமா ரத்தியாக அப்பொழுது சுமார் 9 வயதுடையவளாயிருந்த என் குமா ரத்தி, சி. சௌ. தர்மாம்பாள் நடித்தாள். இதுதான் எங்கள் சபை தோன்றி முதன் முறை எங்கள் நாடகமேடையின் பேரில் பெண் பால் ஆடியது. இதைக் கொண்டாட வேண்டுமென்று கூறி, எங் கள் சபை பிரசிடென்டாகிய ஆனரபில் டி. வி. சேஷகிரி ஐயர் அவர் கள், ஒரு பெரிய புஷ்பச் செண்டை வரவழைத்து ஹானரபில் ஜஸ் டிஸ் சி. கிருஷ்ணன் மூலமாக, என் பெண்ணுக்குக் கொடுக்கச் செய்தார். பிறகு சில தடவைகளில் இந்நாடகம் எங்களால் ஆடப் பட்டபொழுது என் பெண் பெரியவளாய்விடவே, எனது நண்பர் கே. நாகரத்தினம் ஐயர் சகோதரியின் பெண் பத்மா இந்த வேடம் தரித்திருக்கிறது.

இந்த நாடகத்தில் தோன்றிய மற்றொரு பாத்திரத்தைப் பற் றிக் கொஞ்சம் எழுத விரும்புகிறேன்; அதாவது ஒரு நாட்டுக் கோட்டை செட்டியாரின்பாகம். இதைக் காலஞ்சென்ற எனது நண்பர் சோமசுந்திரம் பிள்ளை அவர்கள் பி. ஏ., பி. எல். தத்ரூப மாய் நடித்தார். சுபாவத்திலேயே இவரது தலை மொட்டையா யிருக்கும்; நிறம் கருப்பாயிருக்கும்; ஆகவே உருவம் நாட்டுக் கோட்டை செட்டியார் வேடத்திற்கு மிகவும் தகுதியா யிருந்தது; அன்றியும் இவர் பலநாள் நாட்டுக் கோட்டை செட்டிகளுடன் பழகி யதால், அவர்களைப் போலவே பேசுவார். இதையறிந்த நான் இவருக்கென்றே நாட்டுக்கோட்டை செட்டியார் பாத்திரம் எழுதி னேன் இந்த நாடகத்தில். இவர் அன்று இப்பாத்திரத்தில் நடித் தது எல்லோருக்கும் இடைவிடா நகைப்பைத் தந்தது. இதற்கப் பாலும் இந்நாடகத்தில் இவ்வேடம் தரித்தவர்களுக்குள் தற்காலம் மதுரையில் இருக்கும் டாக்டர் வரதராஜஐயரே சிறந்தவர் என்று கூறவேண்டும்.

இந்நாடகமானது எனது நாடகங்களுக்குள் நடிப்பதற்குக் கஷ்டமானது; இதுகாரணம்பற்றியே நாடகக் கம்பெனிகளும், இதர சபைகளும் இதை அதிகமாய் ஆடியதில்லை.

இந்த 1919-ம் ஆண்டில் எங்கள் சபை தசராக்கொண்டாட் டத்தில் ஒரு விசேஷ மென்னவென்றால், சி. பி. ராமசாமி ஐயர்

அவர்கள் நடத்தி வரும் "ஸ்திரீகள் தினம்" விக்டோரியா பப்ளிக் ஹாலில் வரும் ஸ்திரீகளுக்கெல்லாம் இடமிராதென்று சவுத் இந்தியன் அத்லெடிக் அசோசியேஷன் மைதானத்தில் ஒரு பெருங் கொட்டகையில் வைத்துக் கொண்டோம். சுமார் 1000 ஸ்திரீகளுக்குக் குறைவில்லாமல் வந்திருந்தனர்.

இவ் வருஷம் நிகழ்ந்த இன்னொரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி என்னவென்றால், எங்கள் சபையின் கட்டட பண்டுக்காகப் பொருள் சேர்க்கும் பொருட்டும், நாடகசாலையும் இருப்பிடமும் கட்ட மற்ற ஏற்பாடுகள் செய்யும்பொருட்டும் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அதற்கு என்னைக் காரியதரிசியாக நியமித்தார்கள். உடனே எங்கள் சபை அங்கத்தினர்க்கெல்லாம் எழுதிப் பொருள் சேகரிக்க ஆரம்பித்தேன். இவ்வருஷம் எங்கள் சபையின் அங்கத்தினர் சுமார் 8000 ரூபாய் வரைக்கும் கையொப்பமிட்டனர். அதில் பெரும் பாலும் வசூலிக்கப் பட்டது. இவ்வருஷத்தின் கடைசியில் எங்கள் கட்டட பண்டுத்தொகை 19628—4—6 ஆகியது. நான் இதற்காகக் கொஞ்சம் கொஞ்சமாகப் பொருள் சேர்த்த கதையை, பிறகு ஒரு சமயம் எழுதலாமென்றிருக்கிறேன்.



# 23 ஆவது அத்தியாயம்



இனி, 1917—ஆம் ஆண்டில் எங்கள் சபையில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளைப்பற்றி எழுதுகிறேன்.

இவ்வருஷத்தில் சென்னைக்கு வெளியில் நாங்கள் ஆடிய நாடகங்கள் உட்பட, 53 நாடகங்களாடினோம். இது தான் நாளது வரையில் எங்கள் சபையார் ஒரு வருஷத்தில் ஆடிய அதிக மொத்தமான நாடகங்கள். இவ்வருஷம் எங்கள் சபையின் நானூறாவது நாடகமாக ஆந்திர நாடக பிதாமகர் கிருஷ்ணமாச்சார்லு எழுதிய 'பிரஹ்லாதா' என்னும் நாடகத்தை நடத்தினோம். நான் இவ் வருஷம் புதிதாய் எழுதிய நாடகம் "ஊர்வசியின் சாபம்" என்பதாம்

இக் கதை மஹாபாரதத்தினின்றும் எடுக்கப் பட்டது; ஊர்வசியானவள் அர்ஜுனன் தனக்கு இணங்காததற்காக அவனைப் பேடியாகும் படிச் சபித்த கதையாம். இதை நான் நாடக ரூபமாக அமைத்ததற்கு முக்கிய காரணம் பின் வருமாறு :—எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு நாட்டியஞ் செய்யக் கற்றுக்கொண்ட பிறகு அடிக்கடி அவரை, சந்தர்ப்ப மில்லா இடங்களில் கூட, நடிக்கும்படிப் பலர் வேண்டினர். 'காலவரிஷி' நாடகத்தில் தவிர, மற்ற நாடகங்களின் இடையில் அவர் நடிக்க வேண்டிய சந்தர்ப்பம் வேறொன்று மில்லாதிருந்தது. இதை நிவர்த்திக்கும் பொருட்டு, அவர் நாடகத்தின் ஒரு பாகமாகவே நடிக்க வேண்டிய ஒரு கதையை நாடகமாக எழுத வேண்டு மெனத் தீர்மானித்து, இந்த ஊர்வசியின் சாபம் எனும் நாடகத்தை எழுதலானேன். இதில் ஒரு முக்கிய காட்சி, இந்திரன் சபையில் ஊர்வசியானவள் இந்திரன் மகனான அர்ஜுனன் மனதைக் கவர, தன் முழுத் திறமையும் கொண்டு நடிக்கிறாள். இது எனதுயிர் நண்பர் தனது நிர்த்தனகலையை, நன்கெடுத்துக் காட்ட மிகவும் சவுகரியமாயிருந்தது. இந்த ஒரு காட்சியை மாத்திரம் சில காலத்திற்கு முன் எழுதியிருந்தேன். அதனுடன், அர்ஜுனன் தவம் புரியும் காட்சியையும், பிறகு ஊர்வசியை வெறுக்கும் காட்சி முதலானதும் சேர்த்து ஒரு நாடகமாக எழுதி முடித்தேன். அதை முடித்தபோது ஒரு நாள் ஆடக் கூடிய நாடகத்திற்கு மிகவும் சிறிதாயிருந்த படியாலும், இதில் ஹாஸ்ய ரசம் இல்லாதிருந்த படியாலும், அதற்காகத் துர்யோதனன் அர்ஜுனன் தவத்தைக் கெடுக்க விரும்பி, தன் சாரணர்களை அனுப்பியதாக, மூன்று இடைக் காட்சிகளைச் சேர்த்து நாடகத்தைப் பூர்த்தி செய்தேன்.

எனதுயிர் நண்பர் ஊர்வசியாக நடித்தபடியால், இந் நாடகத்தில் நான் அர்ஜுனன் வேடம் பூண்டேன். இந்நாடகம் எங்கள் சபையோரால் இவ் வருஷம் ஜுலை மாதம் 29 ஆம் தேதி நடிக்கப் பட்டது மிகவும் நன்றாயிருக்கிறதென எங்கள் சபை அங்கத்தினரே மெச்சி, இரண்டு மூன்று வாரத்திற்குள் மறுபடியும் ஆட வேண்டு மென்று நிர்ப்பந்தித்தனர். இதற்கு முக்கிய காரணம், ரங்கவடிவேலு தன் நிர்த்தனத்தில் புதிதாய்க் கற்றுக் கொண்ட சில அபிநயங்களும், அர்ஜுனனுக்கு, பரமசிவன் பார்வதி சமேதராய்

காட்சி கொடுக்கும் காட்சியுமே என்று நம்புகிறேன். அர்ஜுனனை மல்யுத்தத்தில் தோற்கடித்த பிறகு, பார்வதியின் வேண்டு கோளுக் கிரங்கி, பரமசிவன் காட்சி கொடுத்த பொழுது, பிரம்மா, விஷ்ணு, சுப்பிரமணியர், விநாயகர், தேவேந்திரன் முதலியோரும் தங்கள் வாஹனங்களின் மீதூர்ந்து, ஆகாயத்தில் அவனுக்குக் காட்சி கொடுத்து தங்கள் தங்கள் ஆயுதங்களையும் அவனுக்கு அளித்த தாகப் பாரதக் கதையிருப்பதால், இக் காட்சியில் அத் தேவர்க ளெல்லாம், பரமேஸ்வரனைப் புடைசூழ்ந்திருப்பதுபோல், காட்சியை நிர்மாணிக்கச் செய்து, அதற்குரிய தேவதுந்துபி கோஷம் முதலி யனவும் தக்கபடி ஏற்பாடு செய்தது வந்திருந்தவர்களுடைய மன தை யெல்லாம் கவர்ந்ததென்பதற்குத் தடையில்லை. ரங்கவடி வேலுவின் நடனத்தைப் பார்ப்பதற்கும்,இக் காட்சியைக் காணவுமே பலர் இந் நாடகத்திற்கு வந்தனர் என்று கூற வேண்டும். இந் நாட கம் பிறகு பன்முறை சென்னையிலும், வெளியூர்களிலும் எங்கள் சபையோரால் ஆடப்பட்டது.

இந் நாடகம் நடிப்பதற்குக் கொஞ்சம் கஷ்டமானதினால் இதர சபைகள் இதை அதிகமாக ஆடுவதில்லை. ஊர்வசி வேடம் பூண்டு நர்த்தனஞ் செய்யத் தக்க ஆட்களையுடைய சபைகள் தான் இதை எடுத்துக் கொள்ளக் கூடும்.

இந் நாடகத்திற்காக நான் எழுதிய மூன்று இடைக் காட்சி கள், நான் எழுதி யிருக்கும் ஹாஸ்யரசம் பொருந்திய காட்சி களுள் சிறந்தன வென்று நான் நினைக்கிறேன். இவைகள் தனியா கப் பன்முறை ஆடப்பட்டிருக்கின்றன.

இவ் வருஷம், எங்கள் சபையில் சம்ஸ்கிருத நாடகப்பிரிவு ஒன்று ஏற்படுத்தப் பட்டது. அதற்குக் காலஞ் சென்ற டி. எஸ். நாராயண சாஸ்திரியாரைக் கண்டக்டராக ஏற்படுத்தினோம். இவர் சம்ஸ்கிருதத்தில் மிகுந்த பாண்டித்ய முடையவர். சம்ஸ்கிருதத் தில் "மத்தியம வியாயோகம்" என்னும் நாடகத்தை எழுதியவர். தமிழிலும் கற்றவர். "போஜ சரித்திரம்" என்னும் நாடகத்தை எழுதினார். இப்போஜ சரித்திர நாடகமானது அவரது காலத் தில் எங்கள் சபையில் ஆடப்படாது, அவர் காலமான பிறகு ஆடப்

பட்டது, ஓர் பெருங் குறையென நான் மதிக்கிறேன். இவர் நடு வயதிலேயே காலகதி யடைந்தது எங்கள் சபையின் சம்ஸ்கிருதப் பிரிவு செய்த தௌர்ப் பாக்கியமாகும்.

எங்கள் சபையானது இவ் வருஷம் வெளியூருக்கு இரண்டு முறை சென்றது; முதன் முறை பெங்களூருக்கும் இரண்டாம் முறை மாயவரத்திற்கும்; பெங்களூரில் 6 நாடகங்களும், மாயவரத்தில் 7 நாடகங்களும் ஆடினோம். இம் முறை பெங்களூருக்குப் போனது எங்கள் சபை அவ்வூருக்கு மூன்றாம் முறை சென்றதாகும். பெங்களூருக்குப் போகலாம் என்கிற விஷயம் பிரேரேபிக்கப் பட்டவுடன், நான், "அதில் பிரயோஜனமில்லை; சபைக்கு நஷ்டம் ஏற்படும்" என்று ஆட்சேபித்தேன். "சூடுண்ட பூனை அடுப்பங்கரை ஏறாது" என்னும் பழமொழிக்கிலக்காக, இரண்டு முறை அங்கு போய்வந்த அனுபவத்தைக் கொண்டு, வேண்டாம் என்று தடுத்தேன். அதன்பேரில், அங்கு போகவேண்டுமென்று விரும்பிய எங்கள் சபையின் ஆக்டர்களிற் சிலர், என்னுடன் பேசுவதிற் பிரயோஜன மில்லை யென்று கண்டவராய், எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுவிடம் போய் அவர் மனதைக் கலைத்தனர். அதன் பேரில் எனது நண்பர் என்னிடம் வந்து, "எப்படியாவது சபை இவ்வருஷம் பெங்களூருக்குப் போகவேண்டும். நீங்கள் ஆட்சேபம் செய்யக் கூடாது" என்று தன்னாலியன்றவளவு வாதித்துப் பார்த்தனர்; அவர் வாதித்தது ஒன்றும் பலிக்காமற் போகவே, கடைசியில், "எனக்குப் போகவேண்டு மென்று மிகவும் இஷ்டமாயிருக்கிறது அதற்காக நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும்" என்று கேட்டார். அவர் கூறிய வேறு நியாயங்களுக் கெல்லாம் பதில் கூறி வந்தேன்; இந்தக் கடைசி நியாயத்திற்கு நான் என்ன பதில் சொல்வது? மனோகரன் விஜயாளுக்குக் கூறியபடி, "என்னை வெல்வதற்கு இந்த பாணம் ஒன்று வைத்துக் கொண்டிருக்கிறாயே !" என்று கூறி, "நிர்வாக சபையில் இதைப்பற்றி அபிப்பிராயம் தேர்ந்தெடுக்கப் படும் பொழுது நான் இதற்கு மாறாக என் வோட் கொடுக்கவில்லை. ஆயினும் என் மனதிலிருப்பதை மாத்திரம் கூறி விடுவேன்" என்று சொன்னேன். அதன் படியே நிர்வாக சபைக் கூட்டத்தில் இந்தப் பிரஸ்தாபம் வந்த போது, பெங்களூருக்குப் போவதினால் எங்கள்

சபைக்கு நஷ்டம் தான் கிடைக்கும் என்பதற்கு என் நியாயங்களை யெல்லாம் எடுத்துக் கூறி, கடைசியில், "இந்தப் பாரம் உங்கள் தலை மீது" என்று ஸ்பஷ்டமாய்ச் சொன்னேன். மற்றவர்களெல்லாம், "அம்மாதிரி ஒன்றும் நேரிடாது; நாம் பயப்பட வேண்டியதில்லை" என்று கூறினவர்களாய் பெங்களூருக்குப் போக வேண்டும் என்று தீர்மானித்தார்கள். அப்படியே அங்கு போனதினால் சபைக்குச் சுமார் 800 ரூபாயிக்கு மேல் நஷ்டம் உண்டாச்சுது. நான் சொன்னபடியே நடந்ததெனச் சந்தோஷப்படவில்லை. நான் எண்ணியபடி நேராது, சபைக்குலாபம் வந்திருக்குமாயின், அதிக சந்தோஷப் பட்டிருப்பேன். நான் முக்கியமாக வருத்தப்பட்டதெல்லாம், என் அனுபவத்தைக் கொண்டு நான் சபையின் நன்மைக்காகக் கூறியதை சபையோர் கவனியாது பிறகு கஷ்டப்பட்டார்களே என்பது தான்.

இந்த பெங்களூர் பிரயாணத்தில் ஆரம்பமுதல் எல்லாம் விக்கினமாகவே யிருந்தது. தமிழில் அங்கு நாடகங்களாட வேண்டுமென்று ஆரம்பித்தவுடன், தமிழரின் தாயாதிகளான தெலுங்கர், நாங்களும் அங்கு ஒரு நாடகமாட வேண்டுமென்று ஆரம்பித்தனர்! நம்முடைய கடமையை நாம் செய்து விட்டோம், இனி அவர்கள் பாடென்று நான் சும்மா இருந்து விட்டேன். நான் எண்ணிய படியே, அங்கு நாங்கள் ஆடிய "பிரஹ்லாதா" என்னும் தெலுங்கு நாடகத்திற்குப் பல்லாரியிலிருந்து தெலுங்கில் பிரபல ஆக்டராகிய எனது நண்பர் ராகவாசார்லு வந்து ஆடியும், செலவு அதிகமும் வசூல் கொஞ்சமுமாய் முடிந்தது! தமிழ் நாடகங்களுக்கும், நான் நினைத்தபடியே சரியான வசூலாகவில்லை. பணம் வசூலாகாமற் போனாற் போகிறது, ஜனங்களாவது வந்து பார்க்க வேண்டுமே, அது வும் இல்லை. 'பட்டபின்தான் ஒரு ஜாதி யார்க்குத் தெரியும்' என்று ஒரு பழமொழியுண்டு. அதன்படிப் பெங்களூரில் இம்மாதிரி கஷ்டப் பட்ட பின் தான், சம்பந்தம் கூறியது சரியென அவர்களுக்குத் தோன்றியது. இங்கு நடந்த நாடகங்களில், ஒன்றைப் பற்றி நான் சில விஷயங்கள் இங்கு எழுத விரும்புகிறேன்.—அதாவது, "அமலாதித்யன்" என்னும் நாடகத்தைப்பற்றி.

பெங்களூரில் என்னென்ன நாடகங்கள் ஆடுவது என்கிற பேச்சுவந்த பொழுது, "அமலாதித்யன்" நாடகத்தையும் அங்கு

ஆடவேண்டுமென்று சிலர் பிரேரேபித்தார்கள்; அது அவ்விடத்தில் ரமிக்காது, அவ்விடத்திலுள்ளவர்களெல்லாம் புராண கதைகள் முதலியன விரும்புவார்களே யொழிய, ஷேக்ஸ்பியர் நாடகங்களின் மொழிபெயர்ப்பு அங்கு ருசிக்காது என்று என் எண்ணத்தைக் கூறி ஆட்சேபித்தேன். அதன்மீது அவ்விடத்திய கன்னட நாடக சபையார்கள் சிலருக்கு எங்கள் சபையார் எழுதிக்கேட்க, அவர்கள் 'அமலாதித்யன்' கட்டாயமாய்ப் போடவேண்டும், இவ்விடத்திலிருப்பவர்கள் அதைத்தான் பார்க்க மிகவும் விரும்புகிறார்கள் என்று பதில் எழுதியனுப்பினார்கள். அதன்பேரில் மறுபடியும் இவ்விஷயம் எங்கள் நிர்வாக சபையில் தீர்மானத்திற்கு வந்ததின் பேரில் எனது நண்பர்கள், அக்கடிதத்தைக் காட்டி, "பார்த்தாயா, நீ கூறியது தவறு. அங்குள்ளவர்களெல்லாம் இந்நாடகத்தைத்தான் முக்கியமாகப்பார்க்க விரும்புகிறார்கள் என்று பதில் வந்திருக்கிறது. ஆகவே அதை முக்கியமாகப் பெங்களூரில் ஆடவேண்டும்" என்று கூறினார்கள். "இதை முற்றிலும் நம்பாதீர்கள்; இதற்கு அர்த்தமென்ன வென்றால், இக் கடிதம் உங்களுக்கெழுதியிருக்கும் கற்றவர்களாகிய இவர்களுடைய அபிப்பிராயம் அந் நாடகத்தைப் பார்க்கவேண்டு மென்றிருக்கலாம். இதைப் பெங்களூர் ஜனங்களின் பொது அபிப்பிராயமாக நீங்கள் எடுத்துக்கொள்ளக் கூடாது" என்று ஆட்சேபித்தேன். என் ஆட்சேபணையானது செவிடன் காதில் ஊதிய சங்கநாதமாயிற்று. பிறகு அமலாதித்யன் நாடகமும் பெங்களூரில் ஆடவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. இந்நாடகம் நடத்தப்பட்டபொழுது, நான் எண்ணியபடியே பெங்களூரில் ஆங்கிலம் கற்றறிந்த சிலர் தவிர, மற்ற பொது ஜனங்கள் அதிகமாக வரவில்லை. பிறகுதான் என்னை ஆட்சேபித்த எனது நண்பர்கள், நான் எண்ணியது சரியென ஒப்புக்கொண்டனர். பிறகு இவ்வாறு எழுதி யனுப்பிய பெங்களூர் சபை அங்கத்தினருடன் நான் கலந்து பேசி, 'ஏன் இப்படி எழுதி யனுப்பினீர்கள்?' என்று மெல்ல விசாரித்தபொழுது, அவர்கள் பல்லாரி ராகவாசார்லு விடமிருந்து இந்த அமலாதித்யன் பாத்திரத்தை நான் மிகவும் நன்றாக ஆடுவதாகக் கேள்விப்பட்டதாயும், ஆகவே, அவர்கள் அதைப் பார்க்க வேண்டுமென்று மிகவும் விரும்பினதாயும், அதற்காக அவ்வாறு எங்கள் சபைக்கு எழுதியனுப்பியதாகவும் ஒப்புக்கொண்டனர்.

இங்கு நடத்திய இந்நாடகத்தில் இன்னொரு விசேஷமென்ன வென்றால், நான் நாடகமாட ஆரம்பித்தது முதல் செய்திராத பெரும்பிழை யொன்றை இழைத்தேன்! ஈதாகும் அது:— எங்கள் சபையில் ஹாஸ்ய பாகங்களில் பெயர்பெற்ற ம. துரைசாமி ஐயங்கார் அன்றைத்தினம் வழக்கப்படி, இந் நாடகத்தில், நாடகத் துள் நாடகமாடிய காட்சியில், ராஜவேஷதாரியாக வரவேண்டியிருந் தது. நாடக ஆரம்ப முதல், “இந்த மூரி சித்தப்பாக்களுக்கு (பெங்களூர் ஜனங்களுக்கு அவர் வைத்த பெயராகும் இது) நாம் இவ்வளவு கஷ்டப்படுவானேன்? இந்த ரசிகர்களுக்கு எப்படியாடி னாலும் ஒன்று தான்!’ என்று ஏளனம் செய்து கொண்டிருந்தவர், வேண்டுமென்று அலங்கோலமாய் வேடம் தரித்தார். இதை வாசிக் கும் எனது நண்பர்கள், சில கிராமாந்தரங்களில், சில ஏழைகள், இரண்டு மூன்று குரங்குகளுக்கு, அரிச்சந்திரன், சந்திரமதி முத லிய வேஷங்கள் தரித்து, அவைகளை ஆடவைத்து, வயிறு வளர்ப் பதைப் பார்த்திருக்கக்கூடும். அந்த அரிச்சந்திரன் குரங்கை ஒரு நாய்மீது ஏற்றி, ஊர்வலம் வருவான் குரங்காட்டி. அந்த அரிச் சந்திரன் குரங்கைப்போலவே வேஷம் தரித்துக் கொண்டார் துரைசாமி ஐயங்கார்! இந்த சமாசாரம் இவர் வரவேண்டிய காட்சி ஆரம்பமாவதற்குச் சற்றுமுன்பு தான் எனக்குத் தெரிந் தது “என்ன துரைசாமி! இது என்ன இப்படி வேஷம் தரித்துக் கொண்டாயே!” என்று நான் கேட்டதற்கு, “ஆமாம், உனக் கொன்றும் தெரியாது. நீ இவ்வளவு கஷ்டப்பட்டு ஆக்டு செய் தாயே என்ன பிரயோஜனம்? இந்த மூரி சித்தப்பாக்கள் ஏதா வது சந்தோஷப்பட்டார்களா? நான் மேடையின்மீது வந்தவுடன் எவ்வளவு சந்தோஷப்படப் போகிறார்கள் பார்!” என்று சொன் னார். நான் என்ன செய்வது? அந்த அலங்கோலத்தைக் களைந்து தக்கபடி வேடம் பூணச்செய்ய அவகாசமில்லை! சரி ஆகிறது ஆகிறதென்று சொல்லி விட்டு, அக்காட்சியில் ஆட ரங்கத் திற்கு நான் போய்விட்டேன். இக்காட்சி சோககரமான இந்நாட கத்தில் ஒரு மிகவும் முக்கியமான காட்சி. இதில் தன் சிற்றப்பன் தன் தந்தையைக் கொன்றதாகச் சந்தேகப்படும் அமலாதித்யன், அதன் உண்மையை அறியும்பொருட்டு, தன் தந்தையின் அருவத்தின்

மூலமாய்த்தெரிந்தபடி, அவர் கொல்லப்பட்ட விதத்தைப்போல் ஒரு நாடகம் தனது சிற்றப்பன் எதிரில் ஆடிக்காட்டி, அவன் முகக் குறிப்பைக் கொண்டு அறிகிறான். இது அமலாதித்யன் வேடம் பூணும் ஒவ்வொருவனும் மிகவும் ஜாக்கிரதையாக நடிக்க வேண்டிய காட்சி. இக்காட்சியில் நான் செய்த ஆபாசத்தை இனிக்கூறு கிறேன். அமலாதித்யன் சிற்றப்பன் எதிரில் மேற்சொன்ன நாடகம் நடிக்கப்படும் வரையில், சரியாக நடித்து வந்தேன்; அந்த நாடகம் ஆரம்பமானதும், எனது நண்பர் துரைசாமி ஐயங்கார், மேற்சொன்னபடி வேஷம் தரித்து ரங்கத்தினுள்ளிருக்கும் சிறு ரங்கத்தில் குரங்குகள் குதிப்பதுபோல் குதித்துத் தோன்றியவுடன், எல்லோரும் நகைக்க ஆரம்பித்தனர். எனக்கும் நகைப்பு வந்துவிட்டது. என்ன அடக்கியும் முடியாமற் போயிற்று. போதாக்குறைக்கு அவர் ஆடிய ஆட்டத்தில், அவர் தலைமீது அணிந்திருந்த கிரீடமானது கீழே விழுந்து விட்டது! உடனே நாடகசாலையெங்கும் ஒரே நகைப்பின் ஆரவாரம் உண்டாச்சுது! நானும் விலாப்புடை நோகச் சிரிக்க ஆரம்பித்து விட்டேன். நான் அமலாதித்யன் என்பதை மறந்து என் சிரிப்பை அடக்கமுடியாதபடி ரங்கத்தின்மீது புரண்டேன் என்றே சொல்லவேண்டும் அக்காட்சி முழுதும் ஆபாசமானது என்று நான் என் நண்பர்களுக்குத் தெரிவிக்க வேண்டியதில்லை. இத்தகைய தவறு இதற்கு முன்பு நான் செய்ததில்லை; பிறகும் செய்ததில்லையென்று நிச்சயமாகக் கூறக்கூடும். கற்றறிந்த சிலர் தவிர, நாடகம் பார்க்க வந்திருந்த பாமர ஜனங்களில் பெரும்பாலார், இபபடித்தான் இக் காட்சியில் நடிக்கவேண்டுமென்று நினைத்துக் கொண்டார்களோ என்னவோ! உலகெங்கும் பிரசித்தி பெற்ற ஹாம்லெட் என்னும் நாடகத்தில் தான் சிருஷ்டித்த கதா நாயகன் வேடம் பூண்ட ஒருவன் அந்நாடகத்தின் முக்கியமான காட்சியில், இவ்வாறு ஆபாசம் செய்தான் என்று மேலுலகத்திலிருக்கும் ஷேக்ஸ்பியர் மஹாநாடகக்கவி என்னை வாழ்த்தியிருக்க மாட்டார் என்பது நிச்சயம். ஆயினும், நான் அப்படி ஆபாசம் செய்ததற்குக் காரணத்தையறிவாராயின், என்னை மன்னிப்பார் என்று நம்புகிறேன்!

பெங்களூரிலிருந்து பட்டணம் திரும்பிவந்து, ஒருவாரத்திற் கெல்லாம் மாயவரம் புறப்பட்டுப்போனோம். இவ்விடத்தில் ஏழு

தமிழ் நாடகங்கள் ஆடினோம். தெலுங்கு நாடகம் இங்கும் ஆட வேண்டுமென்று தெலுங்குப் பிரிவினர் அம்மட்டும் கூறியிருந்தனர். மாயவரம் சிறிய ஊராயிருந்தபோதிலும் முதல் நாடகம் முதல் சுமாராக ஜனங்கள் வந்தனர். இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், முதலில் நாங்கள் தீர்மானித்தபடி நடத்திய ஆறு நாடகங்களிலும், முதல் நாடகத்தைவிட இரண்டாவது நாடகத்திலும், இரண்டாவது நாடகத்தைவிட மூன்றாவது நாடகத்திலும் இவ்வாறு படிப்படியாக ஜனங்கள் அதிகமாய் வர ஆரம்பித்தனர். இதை நான் மாயவர வாசிகள் எங்கள் சபைக்குச் செய்த நன்கு மதிப்பாகக் கொள்கிறேன். இந்த ஆறு நாடகங்களிலும் எங்கள் செலவு போக சபைக்குக் கொஞ்சம் லாபமே கிடைத்தது. இந்த ஆறு நாடகங்களைப்பற்றி எனது நண்பர்களுக்கு நான் தெரிவிக்க வேண்டிய முக்கியமான விஷயம் எனக்கு ஒன்றும் ஞாபகமில்லை. கடைசியாக, ஏழாவது நாடகமாக வைத்துக்கொண்ட நந்தனார் நாடகத்தைப் பற்றி மாத்திரம் கொஞ்சம் எழுதவேண்டியவனாயிருக்கிறேன்.

இந்த நந்தனார் நாடகத்தில் ஒரு முக்கிய வேடம் பூண்ட எனது நண்பர்களிலொருவர் (அவர் பெயரை இங்கு எழுத எனக்கிஷ்டமில்லை.) "அந்த நாடகத்திற்குத்தான் அதிக வரும்படி வரும்" என்று கொஞ்சம் வீம்பு பேசிக்கொண்டிருந்தார். முதன் முறை இங்கு இந்நாடகம் ஆடியபொழுது, மற்ற நாடகங்களை விட இதற்குக் குறைவாக ஜனங்கள் வந்தனர். அதன் பேரில் சிலர் அவரை ஏளனம் செய்ய, அம்முறை ஜனங்கள் வாராததற்கு ஏதோ போக்குகள் சொல்லி, மறுமுறை மாத்திரம் ஆடுவதானால், சுற்றுப்பக்கங்களிலுள்ள எல்லா மிராசுதார்களும் தான் ஆடுவதைப் பார்க்கக் கட்டாயமாய் வருவார்கள்; இந்நாடகம் இவ்வளவு நன்றாய் நடிக்கப்படும் என்று அவர்களுக்குத் தெரியாமற் போயிற்று; இப்பொழுது அவர்களில் சிலர் ஒரு முறை இதைப்பார்த்திருப்பதால், இரண்டாம் முறை எல்லோரையும் அழைத்துக்கொண்டு வருவார்கள்" என்று கூறினர். அதன் பேரில் எங்கள் நிர்வாக சபைக்கூட்டத்தில், இன்னொரு நாடகமிங்கு ஆடலாமா என்ற பேச்சு வந்தபொழுது, நந்தனாரை மறுபடியும் ஆடவேண்டும் என்று வற்புறுத்தினர். எனக்கு மாத்திரம் மிகவும் சந்தேகமாயிருந்தது; இருந்தபோதிலும், இதற்கு

ஆட்சேபித்தால் இந்நாடகத்தில் இவனுக்கு முக்கியமான பாத்திரம் ஒன்றுமில்லையென்று ஆட்சேபிக்கிறான் என்று எங்கு மற்றவர்கள் எண்ணிக் கொள்ளுகிறார்களோ என்று பயந்தவனாய் ஆட்சேபியாது விட்டேன். எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலு பாத்திரம் மற்றவர்கள் தவறாக எண்ணிக்கொள்ளுவார்களே என்று அஞ்சாது தன் மனதில் தோன்றிய ஆட்சேபணையை வெளியிட்டார். அவர் செய்தது தான் நியாயம், நான் செய்தது தவறு என்று நான் ஸ்பஷ்டமாய் ஒப்புக்கொள்ள வேண்டியவனே; எப்படிப்பட்ட விஷயத்திலும், நமது மனதிற்கு எது நியாயமென்று தோன்றுகிறதோ, அதை மற்றவர்கள் ஏதாவது நினைப்பார்களோ என்று அஞ்சாது, வெளியிட வேண்டியதுதான் கிரமம் என்னும் புத்தி அப்பொழுது எனக்கில்லாமற் போயிற்று. முடிவில் எங்கள் நிர்வாக சபையார், பிரேரேபித்தவர் இவ்வளவு சொல்கிறாரே என்று அவர் வார்த்தையை நம்பி இந்நாடகத்தை மறுமுறை இவ்விடம் நடத்தவேண்டுமென்று தீர்மானம் செய்தனர். அதற்காக உடனே வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்தோம். அக்கம் பக்கத்திலுள்ள ஊர்களுக்கெல்லாம் அவர் வேண்டியபடி நாடக பத்திரிகைகள் அனுப்பினோம். நாடகத்தை சாயங்காலத்தில் வைத்துக்கொண்டால் அதிக ஜனங்கள் வருவார்கள் என்று அவர் கூறியபடி சாயங்காலத்திலேயே வைத்துக் கொண்டோம். இவை யனைத்தும் செய்தும், அன்று சாயந்திரம் 5 மணிக்குச் சிறிது முன் பிள்ளையார் பாட்டை, எங்கள் வழக்கப்படிப் பாடி முடிந்தவுடன், என் வழக்கத்திற்கு விரோதமாக, டிராப்படுதாவை கொஞ்சம் நீக்கிப் பார்க்க, நாடக சாலையில் நாடகத்தைப் பார்க்க இரண்டு பெயர் உட்கார்ந்திருந்தனர்! இதை மற்ற ஆக்டர்களும் அறிந்தவர்களாய், எங்கள் சபையின் சட்டத்திற்கு விரோதமாய்ப் போகிறது, எப்படியாவது ஜனங்கள் வந்தாற் போதுமென்று சொல்லி, குறித்த மணிக்கு அரைமணி பொறுத்து நாடகத்தை ஆரம்பஞ் செய்வதாகத் தீர்மானித்தோம். அப்படிப் பொறுத்து ஆரம்பித்தும் அதிக பயன்படவில்லை. சிலர் தான் நாடகம் பார்க்க வந்தனர். எங்கள் சபையின் நாடகங்களுக்குள் ஓர் சிறந்ததான இந்நாடகத்திற்கு, இம்மாதிரியாக மிகவும் குறைந்த வசூலானது இது வரையில் எப்பொழுதுமில்லை; அதன் பிறகும் நாளது வரையில் இல்லை. தெலுங்கு தேசமாகிய நெல்லூரில் இந்நாடகத்திற்கு

வசூலானதைவிட, இன்று குறைவாயிருந்தது. மயூர நாதர், தற் புகழ்ச்சியாக வீம்பு பேசிய எனது நண்பருக்கு புத்திவரவேண்டும் என்று இவ்வாறு செய்து வைத்தனர் போலும். அந்நாள் முதல் இந்நாள் வரை அந் நண்பர் தான் ஆடும் நாடகங்களைப்பற்றி அதிக மாய்ப் புகழ்ந்து பேசியதை நான் கேட்டதில்லை. நான் இதை நாம் ஆடும் நாடகத்தைப் பற்றி நாமே புகழ்ந்து பேசிக்கொள்ளக்கூடாது என்னும் புத்திமதியாகக் கொண்டேன்.

மேற்சொன்னபடி இரண்டாம் முறை நந்தனர் சரித்திரத்தை இவ்விடம் ஆடியதினால், அதுவரையில்வந்த கொஞ்சலாபமும் போய் விட்டது. மாயவரத்தில் நடந்த நாடகங்களினால் வரவு 1730-12-4 செலவு 1731-6-6 ஆகவே 0-10-6 நஷ்டம்தான், நாங்கள் எடுத்துக் கொண்ட சிரமத்திற்கு லாபமாய் முடிந்தது. ஆயினும் மாயவரத்தி லும் நாங்கள் போய்வந்த பிறகு எங்கள் சபையைப் போன்ற சபை யொன்று ஸ்தாபிக்கப்பட்டது ஒரு லாபமாகக் கொள்ள வேண்டும்.

இவ்வருஷம் எனது தாயனர் ப. ஆறுமுக முதலியாரின் உரு வப்படம் எங்கள் சபையில் திறந்து வைக்கப்பட்டது. அன்றியும் இவ்வருஷம் எங்கள் சபையின் தெலுங்குப்பிரிவினர் வெங்கடாசல ஐயர் எழுதிய "விதி லேக வயித்தியுடு" என்னும் தெலுங்கு நாட கத்தை ஆடினர். இது "மாலியர்" என்னும் பிரஞ்சு நாடகாசிரியர் எழுதிய ஓர் நாடகத்தின் மொழி பெயர்ப்பாகும்.

இனி எங்கள் சபையில் 1918 ஆம் வருஷம் நடந்த நிகழ்ச்சி களைப்பற்றி எழுதுகிறேன்.

இவ்வருஷ ஆரம்பத்தில் எங்கள் சபையில் கன்னடப் பிரிவு ஒன்று ஏற்படுத்தப்பட்டது. ஆகவே, இது முதல் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், சம்ஸ்கிருதம், கன்னடம் ஆகிய ஐந்து பிரிவுகளும் நாட கங்களாடத் தலைப்பட்டன. இவ்வருஷம் எங்கள் சபையின் இரண்டு முக்கிய ஆக்டர்களாகிய டி. எஸ். நாராயண சாஸ்திரியார் பி.ஏ. பி. எல்., எம். துரைசாமி ஐயங்கார் இருவரும் காலகதி யடைந்தனர்; இச்சம்பவத்தினால் என்னுடைய அன்யோன்ய நண்பர்களில் இரு வரை நான் இழந்தேன். முன் கூறிய நாராயண சாஸ்திரியார் சம்ஸ்கிருதபாஷையில் மிகவும் பாண்டித்யமுடையவர் "சங்கரு

டைய காலம்'' என்னும் அரிய பெரியகிரந்தத்தை ஆரம்பித்து அதை முடிக்காமலே தேகவியோகமானது, அப்பாஷாபிமானிகளெல்லாம் துக்கப்பட வேண்டிய விஷயமே. இவருக்கு நாடகங்கள் எழுதுவதிலும், நாடகங்களாடுவதிலும் மிகவும் பிரீதி. இவர் எழுதியுள்ள இரண்டு நாடகங்களைப்பற்றி முன்பே நான் எனது நண்பர்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். சுகுணவிலாச சபை ஸ்தாபித்த நான்கைந்து வருடங்களுக்கெல்லாம் எங்கள் சபையைச் சேர்ந்த போதிலும், ஏதோ காரணத்தினால், எங்களை விட்டு விலகி, "வித்வன் மனோரஞ்சனி'' என்னும் நாடகச் சபையை ஸ்தாபித்தார். சில வருஷங்கள் அச்சபையானது நாடகங்களை நடத்திய போதிலும், அது சீக்கிரத்தில் நசித்து விட்டது அதை மறுபடியும் இரண்டொரு சமயம் உத்தாரணம் பண்ணிப் பார்த்தார். ஆயினும் அது பயன்படாமற் போச்சுது. இவர் நாடக மேடையின்மீது தரித்த வேடங்களுக்குள் எல்லாம் 'பிரதாபருத்ரீயம்' என்னும் தெலுங்கு நாடகத்தில், யௌகந்தரராகத் தோன்றியது தான் மிகவும் நன்றாயிருந்ததென்பது என் அபிப்பிராயம்.

இவ்வருஷம் கிறிஸ்ட்மஸ் விடுமுறையில் எங்கள் சபையார் 22 நாடகங்கள் ஆடியது கவனிக்கத்தக்க விஷயம். இத்தனை நாடகங்களை தினம் ஒன்றாக ஆடியது சிலாகிக்கத்தக்கதாயிருந்தபோதிலும், ஆக்டர்களுக்கு அது மிகவும் சிரமத்தைத் தந்தது என்பதற்குச் சந்தேகமில்லை. இவற்றுள் பெரும்பாலும் தமிழ் நாடகங்களாயிருந்தபடியால், எனதுயிர் நண்பர் ரங்கவடிவேலுக்கும், எனக்கும் மிகவும் கஷ்டமாகத்தானிருந்தது. இவைகளெல்லாம் இரவில் 9 மணிக்குமேல் ஆடவேண்டிய நாடகங்களாயிருந்ததால், இவற்றை ஆடுவதே அசாத்தியமாயிருந்திருக்கும்; சாயங்காலத்தில் ஐந்து மணிக்கு ஆரம்பித்து 9-மணிக்குள்ளாக முடித்தபடியால், அவ்வளவு கஷ்டமில்லாமலிருந்தது.

இவ்வருஷம், சென்ற நான்கு வருடங்களாக, உலகை முழுவதையும் கலக்கிக்கொண்டிருந்த ஐரோப்பிய யுத்தமானது தெய்வ கடாட்சத்தினால் முற்றுபெற்றபடியால், எங்கள் சபையில் நவம்பர் மாதம் 17-ம் தேதி ஏறக்குறைய 1000 பெயர்க்கு சர்க்கரைப் பொங்கல்

வழங்கினோம். சபையில் அன்று சாயங்காலம் ஒரு பொதுக்கூட்டம் கூடி மகிழ்ச்சி கொண்டாடினோம்.

எங்கள் சபையோர் இவ்வருஷம் நடத்திய நாடகங்களில் குறிக்கத்தக்க விஷயம் என்னவென்றால், ஒரே சகுந்தலா நாடகமானது, சம்ஸ்கிருதத்திலும், தெலுங்கிலும், கன்னடத்திலும், தமிழிலும் நடத்தப்பட்டதேயாம். ஐயாயிரம் மயிலுக்கப்பாலிருந்த 'கட்டெ' எனும் ஜர்மன் நாடகாசிரியராலும் இதற்கிணையில்லையெனப் புகழப்பட்ட காளிதாச மஹா நாடககவி எழுதிய 'சகுந்தலா' என்னும் நாடகமானது, இவ்வாறு எல்லா பாஷைகளிலும் ஆடும்படியான மதிப்பைப் பெற்றது ஓர் ஆச்சரியமன்று. தமிழில் ஆடப்பட்ட சகுந்தலா நாடகம், எனது நண்பர் திவான் பஹதூர் எஸ். பவானந்தம் பிள்ளை அவர்களால் அச்சிடப்பட்டது. ஹரிச்சந்திர நாடகத்திற் போலல்லாமல், இவர் இந்நாடகத்தில், காளிதாசன் எழுதியபடியே அமைத்திருக்கிறார். இதில் எனதுயிர் நண்பர் சகுந்தலையாகவும், நான் துஷ்யந்தனாகவும் நடித்தோம். நான் துஷ்யந்தனாக நடித்தபோது பல்லவி அனுபல்லவி களடங்கிய பாட்டுகளைப் பாடாமற் போனபோதிலும், பல விருத்தங்களைப் பாடினேன். இதற்குக் காரணம் எனக்கு தாளஞானம் பூஜ்யம் என்பதை முன்பே அறிவித்திருக்கிறேன்.

1919-ஆம் வருஷத்தில முக்கியமாகக் குறிக்க வேண்டிய விஷயங்கள் அதிகமாயில்லை. இவ்வருஷம் தமிழிலும் தெலுங்கிலும் சிறந்த நாடகங்களுக்குப் பொற்பதக்கம் அளித்ததுபோல், கன்னட பாஷையில் நாடகங்கள் வரவழைக்கப்பட்டு, பூனாவிலிருக்கும் பெர்கூசன் கலாசாலை என். கே. ஹம்பிஹோலி, என்பவருக்கு "கஜார்" என்னும் அவர் அனுப்பிய நாடகத்திற்காகப் பொற்பதக்கம் அளிக்கப்பட்டது. சம்ஸ்கிருத பாஷையில் ஒரே நாடகம் வந்தது. அது பொற்பதக்கம் பெறும்படியான அவ்வளவு நன்றாகவில்லை என்று தீர்மானிக்கப்பட்டது. இவ்வருடமும் கிறிஸ்ட்மஸ் விடுமுறையில் விக்டோரியா ஹால் மாடி எங்களுக்குக் கிடைக்காதபடியால், கீழேயே ஒரு சிறிய ரங்கத்தை ஏற்படுத்தி அதில் பத்து நாடகங்கள் ஆடினோம்.

இவ்வருஷம் எங்கள் சபையில் தமிழில் புதிதாய் ஆடிய நாடகம் பி. எஸ். துரைஸாமி ஐயங்கார் எழுதிய "வள்ளி திருமணம்" எனும் நாடகமாகும். அந்நாடகத்தில் அதன் ஆசிரியராகிய பி. எஸ். துரைசாமி ஐயங்காரே, சுப்பிரமணியராக நடிக்கும்படி ஏற்பாடாயிருந்தது. நாடகதினம் மத்தியானம் இரண்டு மணிக்கு அவர் 104 டிக்கிரி ஜுரத்துடன் ஹாலுக்கு வந்து சேர்ந்து என்னைப் பார்த்து, "எனக்கு அதிக ஜுரமாயிருக்கிறது. இன்று ஆடச் சொன்னால் ஆடுகிறேன். வேறு ஏற்பாடு செய்ய முடியுமானால் நலமாயிருக்கும்" என்று சொன்னார். அதன் மீது அவரை அந்தநிலையில் ஆடச் சொல்வது குரூரமாகுமென எண்ணி, உடனே என் நண்பர் ச. ராகவாசாரியாருக்கு டெலிபோன் செய்து அவரை எடுத்துக்கொள்ளும்படிச் செய்தேன். அவரும் ஒப்புக்கொண்டு இரண்டு மூன்று மணிக்குள் அந்தப் பாத்திரத்தின் பாகத்தைப் படித்து மேடையின் மீது நடித்து எங்கள் சபையின் பெயரைக் காப்பாற்றினார். இவருடைய அபாரமான ஞாபக சக்தி மிகவும் மெச்சத்தக்கது.

மறு வருஷமாகிய 1920-ம் ஆண்டு எங்கள் சபையின் சரிதையில் ஒரு முக்கியமான வருஷமாகும். அதற்கு அநேக காரணங்கள் உண்டு. முதலாவது இவ்வருடம் எங்கள் சபையின் 500-ஆவது நாடகம் பிப்ரவரி மாதம் 23-ம் தேதி நடத்தப்பட்டது. அன்று, சென்னை கவர்னர் லார்டு வில்லிங்டன் அவர்களும் அவரது மனைவியார் லேடி வில்லிங்டனும் விஜயம் செய்தனர். அவர்களெதிரில் மனோஹரன் நாடகத்திலிருந்து தமிழில் சில காட்சிகளும், ராமராஜு எனும் தெலுங்கு நாடகத்திலிருந்து சில காட்சிகளும், ஆங்கிலத்தில் எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் எழுதிய சர்ஜன் ஜெனரல்ஸ் பிரிஸ்கிரிப்ஷன் எனும் சிறு நாடகமும், நடத்தப்பட்டன. அச்சமயம் இன்னின்ன பாஷையில் இத்தனை நாடகங்கள் நடத்தப்பட்டன, இன்னின்ன தர்மங்கள் சபையோரால் செய்யப்பட்டன, சபையின் அங்கத்தினர் இத்தனை பெயர், சபை இன்னின்ன ஊர்களுக்குப் போய் நாடகமாடியிருக்கிறது, இன்னின்ன மஹாராஜாக்கள் கவர்னர்கள் முன்னிலையில் நாடகமாடியிருக்கிறது, முதலிய குறிப்புக்களடங்கிய ஓர் சிறு பத்திரிகை வந்தவர்களுக்கெல்லாம் கொடுக்கப்பட்டது.

இவ்வருஷம் எங்கள் சபையானது, லிடரெரி அண்டு சைன்டிபிக் சொஸைடீஸ் ஆக்டின்படி ரெஜிஸ்டர் செய்யப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு, பிறகு அவ்வாறே ரிஜிஸ்டர் செய்யப்பட்டது. இதற்கு முக்கிய காரணம் கட்டடமொன்றைப் பாது காப்பதற்கும், சபையானது நாடகசாலையையும், இருப்பிடத்தையும் நிர்மாணிப்ப தற்கு நிலம் முதலிய விக்கிரயம் வாங்குவதற்கும், இப்படிச் செய் தல் அதி அவசியமெனக் கருதப்பட்டதேயாம்.

இவ்வருஷமானது எங்கள் சபைக்கு ஒரு முக்கியமான வருஷம் என்று நான் முன்னே கூறியதற்கு மற்றொரு காரணம் இவ்வாண் டில் எங்கள் சபையானது சேலம், கோயமுத்தூர் இரண்டு இடங் களுக்கும் போய் நாடகங்களாடி நற்பெயர் பெற்றதாம். ஆக்டர் களெல்லாம் மே மாதம் 27-ஆம் தேதி புறப்பட்டுப் போய் ஜூன் மாதம் 23-ஆம் தேதி சென்னை வந்து சேர்ந்தோம். முன் வருஷம் பெங்களூருக்குப் போய் நஷ்டமடைந்த படியால், இம்முறை அப்ப டிப்பட்ட கஷ்டம் நேராதிருக்க வேண்டுமென்று, சபையின் பொதுக் கூட்டத்தில் நாடகத்தின் வரும்படியைக் கண்டிராக்டாக விடவேண் டுமென்று ஆலோசிக்கப்பட்டு எங்கள் அங்கத்தினரின் ஒருவராகிய டி. சி. வடிவேலு நாயகர் என்பவர், எல்லாச் செலவும் போக, சபைக்கு ஆயிரம் ரூபாய் கொடுப்பதாகக் கூற, அது ஒப்புக்கொள் ளப்பட்டது. இவ்வாறு எங்கள் சபை கண்டிராக்டாக நாடகமாடு வது உசிதமாக எனக்குத் தோன்றாவிட்டாலும், வடிவேலு நாயகர் எங்கள் சபையின் அங்கத்தினரா யிருந்தபடியாலும், அவர் மீது எனக்கு எங்கள் சபையின் ஆக்டர்களின் சௌகர்யங்களை யெல்லாம் சரியாகக் கவனிப்பார் என்று பூர்ண நம்பிக்கை யிருந்தபடியாலும், ஏதாவது லாபம் கிடைத்தால் அவருக்குத் தானே சேரப்போகிறது என்கிற எண்ணத்தினாலும், இதற்கு நான் இசைந்தேன். இவ் வருஷம் தமிழ் கண்டக்டராயிருந்த எனது நண்பர் ச. ராகவாசாரி யார், வெளியூர்களுக்கு வருவது முடியாமையா யிருந்தபடியால், நிர்வாக சபையார் என்னை இவ்வெளியூர் நாடகங்களுக்குக் "கண்டக் டர் இன் சார்ஜ்" ஆக நியமித்தனர்.

எங்கள் சபையானது வெளியூர்களுக்குப் போய் நாடக மாடிய தில், சேலம் கோயமுத்தூரில் ஆடிய நாடகங்கள்தான் எங்கள்

சபைக்கு மிகுந்த கீர்த்தியையும், சந்தோஷத்தையும் கொடுத்தபடியால், இதைப்பற்றிச் சற்று விரிவாக எழுதப்போகிறேன். முதலில், மற்ற ஊர்களுக்குப் போகும்போதெல்லாம், எப்படி முடியுமோ சபைக்கு லாபம் வருமோ நஷ்டம் வருமோ, என்றிருந்த சந்தேகம் இம்முறை இல்லாதிருந்தது. சென்னையை விட்டுப் புறப்படு முன்னமே எங்கள் சபையின் இரும்புப் பெட்டியில் ரூபாய் 1000 வந்து சேர்ந்துவிட்டது. ஆகவே, பணத்தைப்பற்றி எங்களுக்குக் கவலையென்பதில்லாமற் போயிற்று. சேலம் கோயமுத்தூர் நாடகங்களை பற்றி நான் நினைக்கும்போதெல்லாம், இன்னும் என் மனதில் சந்துஷ்டியுண்டாவதற்கு இரண்டாவது காரணம் எனது நண்பர் வடிவேலு நாயகர் இந்த இரண்டு ஊர்களிலும் எங்களுக்கு வேண்டிய சவுகர்யங்களையெல்லாம் மிகவும் சிரத்தையோடும் விமரிசையோடும் செய்ததே. இவர் வெளியூர்களில் கன்னையா கம்பெனி நாடகங்களாடும்போது பன்முறை சென்று பழக்கப்பட்டிருந்த படியால், முன்னதாக விளம்பரம் செய்வதிலும், துண்டுப் பத்திரிகைகள் முதலியன அக்கம்பக்கங்களில் பிரசுரம் செய்வதிலும், இன்னும் நாடகங்களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைத்தும் செய்வதிலும் மிகவும் பாண்டித்ய மடைந்திருந்தார். அது எங்களுக்கு மிகவும் உபயோகப்பட்டது. இம்முறை இவ்விரண்டு ஊர்களிலும், நாங்கள் போய்ச் சேர்வதற்கு ஒரு வாரத்திற்கு முன்பாகவே நாடகாபிமானிகள் ஒருவரும் பாக்கி யில்லாதபடி எங்கள் சபை வருவதைப் பற்றியும் இன்னின்ன நாடகங்கள் போடப்போகிறார்கள் என்பதைப்பற்றியும் அறியும்படி, எங்கு பார்த்தாலும், சுவரில் ஒட்டும் பெரிய நோட்டீஸ்களை ஒட்டி யேற்பாடு செய்தனர். அன்றியும் கைத்துண்டு நோட்டீஸ்கள் ஏராளமாக அச்சிட்டு வீட்டுக்குவீடு கொடுக்கும்படி ஏற்பாடு செய்தனர். அன்றியும் நாடக தினத்தில் அக்கம் பக்கங்களிலுள்ள கிராமாந்தரங்களிலெல்லாம், மோட்டார் பஸ் மூலமாக நோட்டீஸ்கள் பரவச் செய்தனர். இதன் பலனாக, நாங்கள் இவ்விரண்டு ஊர்களிலும் நடத்திய நாடகங்களுக்கு ஏறக்குறைய ஒவ்வொரு தினமும் ஆயிரம் ரூபாய்க்கு மேல் வசூலாயிற்று என்பதற்குச் சந்தேகமில்லை. கொழும்பு யாழ்ப்பாணத்தில் கூட இம்மாதிரியான வரும்படி வந்ததில்லை. அவ்விடங்களிலெல்லாம் முக்கியமாக

சனிக்கிழமை நாடகங்களுக்குத்தான் அதிக வரும்படி வரும். மற்ற செவ்வாய் வியாழன் நாடகங்களுக்குக் கொஞ்சம் குறைவாக வரும். சேலம் கோயமுத்தூர் நாடகங்களில், தினம் அதிக வரும்படி வந்தது எனக்கும் சந்தோஷத்தைத் தந்தது; எங்கள் சபையோருக்கும் சந்தோஷத்தைத் தந்திருக்கவேண்டும். இவ்விரண்டு ஊர்களிலும் செலவைக் கருதாது எங்கள் சவுகர்யத்தையே கருதி, ஏராளமாகச் செலவு செய்தும், எங்களுக்கெல்லாம் இரண்டாவது வகுப்பு ரெயில் செலவு கொட்டகைச் செலவு முதலியன அதிகமாக ஆகியும் எங்கள் சபைக்கு 1000 ரூபாய் கொடுத்தும், எல்லாச் செலவும் போக, நிகரமாக 3500 ரூபாய்க்கு மேல் லாபம் கிடைத்ததாக அவரே என்னிடம் ஒப்புக்கொண்டிருக்கிறார். அவர் எங்களுக்காக எடுத்துக் கொண்ட கஷ்டத்திற்காக இன்னும் அவருக்கு அதிக லாபம் கிடைத்திருக்கலாகாதா என்று எண்ணினோமேயொழிய, இவ்வளவு லாபம் கிடைத்ததே என்று எங்கள் ஆக்டர்களில் ஒருவரும் பொறாமைப்படவில்லை.

இனி சேலத்தில் நிகழ்ந்த வரலாறுகளை எனக்கு ஞாபகம் இருக்கும் வரையில் எனது நண்பர்களுக்கும் தெரியப்படுத்துகிறேன். எனது ஆக்டர்களுடன் சேலத்திற்கு அதிகாலையில் போய்ச் சேர்ந்தது ரெயில் ஸ்டேஷனிலிருந்து, நாங்களெல்லாம், எங்கள் விடுதியாகிய, சேலம் காலேஜ் ஹாஸ்டலுக்குப் போய்ச் சேர்ந்தது, சென்னையிற் சாதாரணமாகக் கிடைப்பதைவிட, அங்கு நாங்கள் காலையில் சாப்பிட்ட பட்சணம் நன்றாயிருந்தது, நாங்கள் போய்ச் சேர்ந்ததினம் மழை பெய்தது, மழை நின்றவுடன், நானும் எனதாருயிர் நண்பரும் அவ்வூரிலிருக்கும், கன்னிகா பரமேஸ்வரி கோயிலுக்குப் போனது, நாங்கள் எங்களை ஒருவரும் இங்கு கண்டுபிடிக்கமாட்டார்கள் என்று எண்ணியிருக்க, அக்கோயில் அதிகாரிகள் எங்களை சுகுணவிலாச சபையைச் சேர்ந்தவர்களென்று எப்படியோ கண்டறிந்து எங்களுக்கு மரியாதை செய்தது, ஒருநாள் இரவு நாடகமானவுடன், நாங்களெல்லாம் உட்கார்ந்து நிலாச் சாப்பாடு சாப்பிட்டது, பனைமரத்தொட்டி யென்னும் ஊருக்குப் போனது, இம்மாதிரியான எத்தனையோ விஷயங்கள் நேற்று நடந்தது போல் என் நினைவிற்கு வருகின்றன! அன்றியும் இவ்வூரிலுள்ள பெரிய மனிதர்க

சென்லாம் எங்கள் சபையோரை மிகவும் அன்புடன் வரவேற்று உபசரித்தனர். கொழும்பிலும் யாழ்ப்பாணத்திலும் எப்படி எங்கள் மீது அன்பு பாராட்டினரோ அப்படியே இவ்விடமும் பாராட்டினார்கள். இவ்வூரிலுள்ள கற்றறிந்த பெரிய மனிதர்கள் மாத்திரம் அல்ல, எங்கள் நாடகங்களைக்கண்டு களித்த சாதாரண ஜனங்களும் எங்கள் ஆக்டர்கள்மீது பிரியத்தைக் காட்டினர். இதற்கு ஒரு உதாரணத்தைப் பிறகு எழுதுகிறேன்.

இது நடந்து இப்போது 14 வருடங்களாகிறது. இருந்தும், இவ் வருஷம் இரண்டு முறை (முதன்முறை மதுவிலக்குக் பிரசார சம்பந்தமாக சென்னை பப்ளிசிடி கமிட்டி அக்கிராசனாதிபதியாகவும், இரண்டாம் முறை கோ ஆபரேடிவ் சொசைட்டிகளின் டிபுடி ரிஜிஸ்டிராராகவும் எனதுயிர் நண்பர் கே. நாகரத்தின ஐயர் அவர்களைப் பார்ப்பதற்கும்) நான் போயிருந்தபொழுது, எங்கள் சபையின் நாடகங்களைப் பார்த்தபல பெரிய மனிதர்கள், 'மறுபடியும் எப்பொழுது உங்கள் சபையுடன் வரப்போகிறீர்கள்' என்று கேட்டனர்; நானும் முதன்முறை சபையுடன் வந்தபோது பார்த்து சந்தோஷித்த கோயில் முதலிய இடங்களுக்கெல்லாம் மறுபடியும் போய்ப்பார்த்துச் சந்தோஷப்பட்டேன். ஆயினும் அம்முறை பார்த்தபொழுது என் பக்கலிலிருந்து அவைகளையெல்லாம் அனுபவித்த எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு என்னுடன் இல்லையே என்னும் துக்கம் அதிகமாயிருந்தது.

இருந்தபோதிலும், அவருக்குப் பதிலாக நாகரத்தினம் ஐயராகிய மற்றொரு நண்பனையாவது பரமேஸ்வரன் தன் கருணையினால் என் பக்கலிலிருக்கும்படி அருளினரே என்று கொஞ்சம் என் மனதைத் தேற்றிக்கொண்டேன்.

இந்த சேலம் பிரயாணத்தில் எங்களுக்குக் கஷ்டங்கள் நேரிடாமற் போகவில்லை. அநேக விஷயங்களில் ஆரம்பத்தில் ஏதாவது கஷ்டம் நேரிட்டால்தான் பிறகு அவை முடிவில் சுகமாய் முடிவது என்னளவில் அனுபவம் என்பதை இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்கு முன்பே தெரிவித்திருக்கிறேன். இந்த சேலம் கோயமுத்தூர் பிரயாணத்திலும் அப்படியே நேர்ந்தது. இப்பிரயாணத்தைப்

பற்றி எங்கள் நிர்வாக சபையில் தீர்மானமானவுடன் தெலுங்குப் பிரிவினர்கள், தாங்களும் இவ்விடங்களில் நாடகங்கள் ஆடவேண்டும் என்று வாதிக்க ஆரம்பித்தனர். இவ்விடங்களில் தமிழ் நாடகங்கள் தான் சபைக்கு லாபம் உண்டாக்கும், தெலுங்கு பிரயோஜனமில்லை என்று நான் எவ்வளவு வற்புறுத்தியும் கேளாமற் போயினர். சரி ஆனால் உங்களிஷ்டம் என்று விட்டு விட்டேன். ஆயினும் வெளியூர் நடவடிக்கைகளைப் பற்றி அதிக அனுபோகமுடைய வடிவேலு நாயகர் தான் கண்டிராக்டராக ஒப்புக் கொண்டது தமிழ் நாடகங்களுக்கேயென்றும் தெலுங்கு நாடகங்களின் பொறுப்பை ஒப்புக் கொள்ளமாட்டேன் என்றும் கண்டிப்பாய்ச் சொல்லி விட்டார். அதன் பேரில் சபையின் செலவிலேயே இரண்டு தெலுங்கு நாடகங்கள் கோயமுத்தூரில் மாத்திரம் ஆடவேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது. இவ்வாறு ஆரம்பத்திலேயே இந்த ஆட்சேபனை வந்தது ஒரு விதத்தில் எனக்குச் சந்தோஷத்தையே தந்தது. ஏனெனில் என் கோட்பாட்டின் பிரகாரம், இந்தப் பிரயாணம் மிகவும் சந்தோஷகரமாய் முடிவுபெறுமெனத் தீர்மானித்தேன். இந்த இரண்டு தெலுங்கு நாடகங்களைப்பற்றிக் கோயமுத்தூர் சமாசாரம் வரும் பொழுது எழுதுகிறேன்.

சேலத்திற்கு ரெயிலேறிப் புறப்படும் சாயங்காலம் இன்னொரு கஷ்டம் நேரிட்டது. அங்கு ஆடத் தீர்மானித்த முதல் நாடகமாகிய 'மனோஹரன்' எனும் நாடகத்தில் முக்கிய ஸ்திரீபாகமாகிய பத்மாவதி வேடம் தரிக்க வேண்டிய பத்மநாபராவ் ரெயில் ஸ்டேஷனுக்கு வந்து தான் எங்களுடன் சேலத்திற்கு வர முடியாதென்று தெரிவித்தார். அவர் மீது குற்றமில்லை. அவரும் அறியாதபடி ஏதோ அசந்தர்ப்பம் நேரிட்டது. இரண்டு நாட்கள் முன்னதாகத் தெரிந்திருந்தாலும் வேறு யாரையாவது ஏற்பாடு செய்யலாம். இப்பொழுது என்ன செய்வது என்று யோசித்தவனாய், ஸ்வாமி இருக்கிறார் பார்த்துக்கொள்வோம் என்று புறப்பட்டுப் போனேன். சேலம் போய்ச் சேர்ந்ததும் எனக்கு ஒரு யோசனை பிறந்து, எம். தேசிகாசாரியார் என்னும் வேறொரு ஆக்டரை, அன்று சாயங்கால ரெயிலில் கட்டாயமாய்ப் புறப்பட்டு வரும்படித் தந்தி அனுப்பினேன். தெய்வாதீனமாய் அவர் அப்படியே புறப்பட்டு மறுதினம் காலை

வந்து சேர்ந்தார். அவருக்கு ஒருமுறை பத்மாவதியின் பாகத்தைப் படித்துக்காட்டி உங்களாலானது பார்த்துக்கொள்ளுங்கள் என்று சொன்னேன். அவரும் வெகு சிரத்தையோடு, வேறொன்றையும் கவனிக்காமல், அந்தப் பாகத்தைக் குருட்டுப்பாடம் பண்ணி அன்றிரவு மிகவும் நன்றாக நடித்தார். அவ்வாறு சமயத்திற்குக் கை கொடுக்கும் ஆக்டர்கள் பலர் எனக்கு உதவியாக இருந்தபடியால், அக்காலங்களிலெல்லாம் நான் எடுத்த காரியத்தை விடாமல் பூர்த்தி செய்யும்படியான சக்தி இறைவன் அருளால் எனக்கு இருந்தது. தற்காலத்தில் அநேக சபைகளில் ஒருநாடகத்தில் ஒரு முக்கிய ஆக்டருக்கு ஏதாவது அசந்தர்ப்பம் நேரிட்டால், அந்நாடகத்தையே விட்டுவிடும்படி நேரிட்டிருக்கிறதைப் பன்முறை பார்த்திருக்கிறேன். கூடுமானவரையில், சந்தர்ப்பங்கள் வாய்க்கும்பொழுது, எந்தப் பாத்திரத்தையும், க்ஷணத்தில் எடுத்துக்கொள்ளும்படியான ஆக்டர்களை உடைத்தாயிருப்பது ஒரு சபை செய்த பாக்கியமெனவே கருத வேண்டும்.

நாங்கள் சேலத்தில் நாடகம் ஆடிய நாடக சாலைக்கு அப்பொழுது சேலம் எலெக்டிரிக் தியேடர் என்று பெயர் இருந்தது. இந் நாடகசாலை எங்களுக்கு மிகவும் சவுகர்யமாக நாங்கள் இறங்கியிருந்த பெரிய கட்டிடத்திற்கு எதிரிலேயே இருந்தது. எங்கள் வழக்கப்படி நாடக தினம் சாயங்காலம் 5-மணிக்கெல்லாம் வீட்டில் சாப்பிட்டு விட்டு, நாடக சாலைக்குப் போய் வேஷம் தரித்துக்கொண்டோம். நாடகம் ஆரம்பமாவதற்கு அரைமணிக்கு முன்பாகவே நாடகசாலை நிரம்பிப்போன விஷயம் அங்கு வந்தவர்களின் கூச்சலினால் அறிந்து சந்தோஷப்பட்டேன். எனக்கு முக்கியமாக விருந்த சந்தோஷம் என்ன வென்றால், நம்மை நம்பி வடிவேலு நாயகர், அதிகப்பணம் செலவழித்திருக்கிறார், ஒருவேளை வசூல் அதிகமாயாகாது அவருக்கு நஷ்டம் வந்தால் என்ன செய்வது என்கிற என் சந்தேகம் நிவர்த்தியானதேயாம். இந்தச் சந்தோஷத்துடன் நாடகத்தை ஆரம்பம் செய்ததும், எனது வார்த்தைகளில் சிலவற்றை நான் பேசியதும், நாடக சாலைகளிலிருந்த விளக்குகள் எல்லாம் ஒரே விசையாக அவிந்துபோய்விட்டன! இரண்டு மூன்று நிமிஷங்கள் நாடகசாலை முழுவதும் ஒரே இருட்டாக விருந்தது. அம்மட்

டும் நாடகம் பார்க்கவந்த ஏராளமான ஸ்திரீபுருஷர்கள், பயமின்றித் தங்கள் இடங்களிலேயே பேசாதிருந்தனர். ஏதாவது கொஞ்சம் கூபுரா வாகியிருந்த போதிலும் கஷ்டமாய் முடிந்திருக்கும். உடனே வெளியிலிருந்து ஒரு வாஷிங்டன் விளக்கை மேடையின் மீது கொண்டு வந்து வைக்கும்படி ஏற்பாடு செய்தார் வடிவேலு நாயகர். இதென்னடா, ஆரம்பத்திலேயே இந்த அபசகுனம் என்று என் பக்கலிலிருந்த சில ஆக்டர்கள் வருத்தப்பட்டனர். ஸ்வாமியிருக்கிறார் இதற்கெல்லாம் பயப்படாதீர்கள் என்று சொல்லி, தேற்றிக்கொண்டே யிருக்கும் பொழுது தெய்வாதீனத்தால் எலெக்டிரிக் விளக்குகளெல்லாம் மறுபடி எரிய ஆரம்பித்தன. ஈச்வரன் கருணையென்று நினைத்து நாடகத்தை நடத்திக்கொண்டு போனோம். இதை முக்கியமாக இங்கு எழுதியதற்கு ஒரு காரணமுண்டு. மின்சார விளக்குகளை உடைய நாடக சாலைகளிலெல்லாம் இம்மாதிரியான இக்கட்டுகள் அடிக்கடி சம்பவிக்கலாம். வாஷிங்டன் லைட் முதலிய விளக்குகளை உடைய சாலைகளில், ஒன்று திடீரென்று அணைந்து போனாலும் மற்றவை எல்லாம் எரியும். இந்த எலெக்டிரிக் விளக்குகளுள்ள நாடக சாலைகளில், ஒன்று போனால் எல்லாம் அடியோடு அவிந்து போகும். ஆகவே, நாடகத்திற்கு இடைஞ்சல் இல்லாத படியும், அத்தருணங்களில் ஜனங்கள் பயப்படாமலிருக்கும் படியும், எலெக்டிரிக் விளக்குகளுள்ள நாடக சாலையில் ஆடும் பொழுதெல்லாம் கையோடு இரண்டு வாஷிங்டன் விளக்குகள் வைத்திருப்பது அதி அவசியம் என்று நாடகமாட விரும்பும்எனது இளைய நண்பர்கள் அறியும் பொருட்டே இதை எழுதலானேன். மேற்சொன்ன சம்பவம் நேர்ந்த பிறகு எங்கள் சபை எங்கு நாடக மாடினாலும், இரண்டொரு வாஷிங்டன் விளக்குகள் கையிருப்பாக இல்லாமல் ஆடுவதில்லை. சென்னை விக்டோரியா பப்ளிக்ஹாலில் ஆடும் பொழுதும் இம்மாதிரியான கஷ்டம் நேர்ந்திருக்கிறது. வெளியூர்களில் கேட்பானேன்? ஆகவே மேற் சொன்னபடி முன் ஜாக்கிரதையாக இருப்பது அதி அவசியமாகும்.

இவ்விடத்தில் நாங்கள் ஆடிய முதல் மூன்று நாடகங்களாகிய மனோஹரன், சாரங்கதரன், லீலாவதி சுலோசனா நாடகங்களுக்கு நல்ல வசூலாயிற்று ; நாடகங்கள் நன்றாயிருந்ததனவென்று சேலம்

நாடகாபிமானிகள் புகழ்ந்தனர். இந்த மூன்று நாடகங்களிலும் மிக்க நல்ல பெயர் எடுத்தவர் எனதாருயிர் நண்பராகிய சி. ரங்க வடிவேலுவே. இவ்வாறு நான் கூறியது அவரிடத்திலிருந்த என் சிநேக வாஞ்சையாலன்று, இது வாஸ்தவம் என்று ஒரு சிறு விஷ யத்தைக் கொண்டு ரூபிக்க விரும்புகிறேன். நான்காவது நாடகமா கிய நந்தனார் நாடகத்திற்கு விளம்பரங்கள் அச்சிடவேண்டி வந்த பொழுது, வடிவேலு நாயகர் என்னிடம் வந்து, "ரங்கவடிவேலு வுக்கு நந்தனார் நாடகத்தில் ஒரு பாகமுமில்லை. அவர் பெயர் நோடீஸ்களில் இருந்தால்தான் வசூலதிகமாக ஆகும் என்று எல் லோரும் இங்கு சொல்லுகிறார்கள். எப்படியாவது அவரை நந்தனார் நாடகத்தில் ஏதாவது பாத்திரமாக வரச்சொல்லுங்கள்" என்று வற்புறுத்தினர். இதென்னடா தர்மசங்கடம் என்று ரங்கவடி வேலுவுடன் கலந்து பேசி, ரங்கவடிவேலுவை நர்த்தனம் செய்ய ஏற்பாடு செய்து, அதற்காகக் கதையைக் கொஞ்சம் மாற்றி, வேதி யர் வீட்டில் அவர் பெண் ருதுவானதற்காக ஏதோ கச்சேரி வைப் பதாக ஏற்பாடு செய்து, அதில் நடனமாதாக ஆடுவதாக ரங்கவடி வேலுவின் பெயரை நோட்டீசுகளில் அச்சிடும்படி உத்தரவு கொடுத் தேன். வடிவேலு நாயகரும் குதூஹலத்துடன் உடன்பட்டு அவ் வாறே அச்சிட்டார்.

மேற்சொன்ன நந்தனார் நாடகத்தின் முடிவில் சேல நகரவாசி களில் இரண்டு மூன்று பெயர், எங்கள் சபையைப் பற்றிப் புகழ்ந்து பேசிவிட்டு இன்னும் இரண்டொரு நாடகங்கள் அங்கு ஆடவேண்டு மென்று கேட்டுக்கொண்டனர். நான் அவர்களுக்குத் திரும்பி வந் தனம் அளித்த பொழுது அதைப்பற்றி யோசிக்கிறோம் என்று சொன்னேன். மறுநாள் காலை, எல்லா விஷயங்களையும் யோசித் துப் பார்த்தபொழுது இங்கு நடந்த நான்கு நாடகங்களும் இரவு நாடகங்களானபடியால் ஆக்டர்களெல்லாம் மிகவும் களைப்புற்றிருக்கி றார்கள் ஆகவே ஆடமுடியாதென்று எங்கள் கமிட்டியாருக்குச்சொன் னேன்; ஆயினும் மற்ற ஆக்டர்களெல்லாம் இன்னொரு நாடகமாவது போடவேண்டுமென்று உத்தேசம் கொண்டனர். அதன் பேரில் என துயிர் நண்பர் ரங்கவடிவேலு என்னிடம் வந்து அதற்கெப்படியாவது இசையவேண்டுமென்று வற்புறுத்தினர். அதன்மீது திருஉளச்சீட்

டுப் போட்டுப் பார்ப்போம், அதன்படி நடப்போம், என்று சொல்லி சமாதானம் செய்து, அங்ஙனமே செய்து பார்த்ததில், "வேண்டாம்" என்று வந்தது ! அதன்பேரில் வேண்டாம் என்று தீர்மானிக்கப்பட்டது. பிறகு நாங்கள் மறுநாள் புறப்பட்டுக் கோயமுத்தூருக்குப் போக ரெயிலேறும்பொழுது அந்த கலாட்டாவில் பலர் ஸ்டேஷனுக்கு வந்து எங்கள் வழியை மறித்து இன்னொரு நாடகம் போடுவதாகச் சொல்லிவிட்டு, போடாமல் போவது நியாயமா? என்று பகிரங்கமாகக் கேட்டனர்! அவர்களையெல்லாம் சமாதானப்படுத்துவது எனக்கு பெரும் கஷ்டமாயிற்று! என்ன நியாயங்கள் கூறியும் அவர்கள் திர்ப்தியடையவில்லை; எங்கள்மீது குறைகூறி வருத்தத்துடனே தான் திரும்பிப்போயினர். அவர்கள் அவ்வளவு அன்போடு கேட்கிறார்களே, அவர்கள் வேண்டுகோளுக்கிசையாது போகிறோமேயென்று நான் மிகவருத்தப்பட்டேன். ஆயினும் ஆராய்ந்து ஒரு காரியத்தைத் தீர்மானித்த பிறகு, அதனின்றும் மாறலாகாது என்கிற என் கோட்பாட்டின்படி நடக்கவேண்டிய தாயிற்று; அநேக ஊர்களுக்கு எங்கள் சபை போயிருந்த பொழுது அங்குள்ள பெரிய மனிதர்கள், இன்னும் இரண்டொரு நாடகம் போடலாகாதா என்று கேட்டிருக்கின்றனர்; ஆயினும் இந்த ஊர் ஒன்றில்தான் பேர் ஊர் தெரியாத பொதுஜனங்கள் இப்படி எங்களை வற்புறுத்தியது; ஆகவே எங்கள் ஆக்டர்களெல்லாம், சேலத்தை விட்டுப் புறப்பட்டபொழுது, பிரிய மனம் இன்றியே பிரிந்தோம் என்று கூறுவது அதிகமாகாது.

இவ்வூரிலுள்ள பெரிய மனிதர்கள், எங்கள் சபைக்கு ஒரு நாள் விருந்து நடத்தியதுடன் எங்களுக்கு வந்தனோபசாரப் பத்திரம் ஒன்றும் அளித்தனர். அது இன்னும் எங்கள் சபையில் தமிழ் ஒத்திகை அறையில் மாட்டப்பட்டிருக்கிறது.

சேலத்தை விட்டுக் கோயமுத்தூருக்குப் போனபோது, சேலத்தில் எல்லாம் மிகவும் சந்தோஷமாய் முடிந்ததே, இங்கு எப்படியிருக்குமோ என்னும் சந்தேகத்துடன் தான் போய்ச் சேர்ந்தோம். ஆயினும் இப்பயம் இங்கு எங்கள் முதல் நாடகமாகிய 'லீலாவதி சுலோசனா' ஆரம்பிப்பதற்கு ஒருமணிக்கு முன்னதாகவே, அறவே நீங்கியது.

இந்த முதல் நாடகத்திற்கு முந்திய தினம்—வெள்ளிக்கிழமை என்று நினைக்கிறேன். என் வழக்கப்படி, எங்கள் ஆக்டர்களையெல்லாம், கோயமுத்தூருக்கு அருகிலுள்ள மேலைச் சிதம்பரம் என்று சொல்லப்பட்ட பேரூர் என்னும் கிராமத்திற்கு ஸ்வாமி தரிசனத்திற்காக அழைத்துச் சென்றேன். அங்கு நான் ஓர் ஆபத்தினின்றும் ஈசன் கருணையினால் தப்பினேன் என்று நம்புகிறேன். கோயிலுக்குப் போகுமுன் கை கால்களைக் கழுவிக்கொண்டு அநுஷ்டானம் செய்வதற்காக அங்கருகிலுள்ள ஒரு சிற்றாறுக்கு எல்லோரும் போனோம். அவ்விடம் ஒரு பாறையின் பக்கப்படி வழியாக இறங்கி, அற்பசங்கைக்காக உட்கார்ந்தேன். நான் எழுந்திருக்கும் பொழுது திரும்பிப் பார்க்க என் காலுக்கு ஓர் அடிக்குள்ளாக ஒரு பெரிய நல்ல பாம்பு இருக்கக் கண்டேன்! தெய்வாதீனத்தால் அதன் வாயில் ஒரு தவளையைப் பற்றிக்கொண்டிருந்தது. இல்லாவிடில் அதனால் நான் கடிக்கப்பட்டிருப்பேன் என்று நிச்சயமாய் நம்புகிறேன். உடனே நான் எனது நண்பர்களைக் கூவியழைக்க அவர்கள் ஓடி வந்தனர்; நாங்கள் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, அத் தவளையைக் கவ்விக் கொண்டே, அப்படிக்கட்டிலுள்ள ஒரு பொந்தில் அது நுழைந்தது. குறைந்த பட்சம் ஆறடியிருக்கும் அதன் நிகளம். எனது நண்பர்களெல்லாம் இப் பாம்பு உன்னைக் கடித்து நீ இறந்திருந்தால் என்னவது என்று கலங்கினர்; அம்மட்டும் அந்த ஹானி நேரிடாமல் தப்பினையே என்று சந்தோஷப்படாதவர் ஒருவருமில்லை.

என் நண்பர்களுக்கு என் மீதில் உண்மையிலுள்ள அன்பு அப்பொழுதுதான் எனக்கு முற்றிலும் வெளியாயது. "சேட்டினுமுண்டோர் உறுதி, கிளைஞரை நீட்டியளப்பதோர் கோல்" என்னும் தெய்வப் புலமை திருவள்ளுவர் குறள் எனக்கு நினைவிற்கு வந்தது. உடனே பேரூர் அம்பலம் சென்றபொழுது, பாம்பணி நாதன் பாதத்தினைப் பணிந்து, எங்கள் சபைக்காக இன்னும்சில வருடங்கள் உழைக்கவேண்டி என்னைக் காத்த அவரது பெருங் கருணையைத் துதித்தேன்.

நான்காம் பாகம் முற்றிற்று.